# ஸ்ரீ மகா கணபதி தத்துவ இரகசியம்

வி. ஆர். விஜயகுமார்














# ஸ்ரீ மகா கணபதி தத்துவ இரகசியம்



**வி. ஆர். விஜயகுமார்**



அயக்கிரிவா பதிப்பகம்

*சங்கர் கிருபா, எண். 108 / 176, பெரிய தெரு,*

*திருவல்லிக்கேணி, சென்னை 600 005*

தொலை பேசி: 2844 4275 அலைபேசி: 98409 17127

## நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | : | **ஸ்ரீ மகா கணபதி தத்துவ இரகசியம்** |
| ஆசிரியர் பெயர் | : | **வி. ஆர். விஜயகுமார்**<br>13 மத்தள நாராயணன் தெரு,<br>மயிலாப்பூர், சென்னை – 600 004 |
| பொருள் | : | ஆன்மிகம், தெய்வீகம், சித்த யோகம் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பதிப்பாண்டு | : | டிசம்பர், 2008 |
| உரிமை | : | © ஆசிரியருக்கே |
| அச்சிட்டோர் | : | மூகாம்பிகை ஆப்செட்<br>சென்னை – 600 005 |
| வெளியீடு | : | அயக்கிரிவா பதிப்பகம்<br>திருவல்லிக்கேணி, சென்னை 5 |
| நூலின் அளவு | : | டெம்மி 1 / 8 |
| தாள் | : | 16 கி. கி. டபுள் டெம்மி |
| கட்டமைப்பு | : | சாதாக் கட்டு |
| அச்சு எழுத்து | : | 12 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 240 பக்கம் |
| பிரதிகள் | : | 1000 |
| விலை | : | ரூ. 80 |

**ISBN** : 978-81-903924-5-7

நூல் கிடைக்குமிடம்:





**அயக்கிரிவா பதிப்பகம்**

ப. எண்: 108. புதிய எண். 176, பெரிய தெரு.

திருவல்லிக்கேணி, சென்னை 600 005.

தொ. பேசி: 044 2844 4275

அலை பேசி: 98409 17127

மின் அஞ்சல்: taponishta@rediffmail.com



ஸ்ரீ மகா கணபதி யந்திரம்

# பொருளடக்கம்

## பகுதி – 1

## பகுதி – 2





## வாசகர்களுக்கு ஓர் விண்ணப்பம்

இந்து மதத்தில் சைவம், வைணவம் மற்றும் யாவரும் மதித்து விரும்பி வணங்கும் ஒரே தெய்வம் **ஸ்ரீ கணநாதன்** ஆவார். மேலும், முழுமுதற் கடவுள் என்று போற்றப்படுபவரும் இவரே. வழிபாட்டு முறைகளில் பலவகையுண்டு. **பூசை, யோகம், ஆத்ம மற்றும் வேதாந்த விசாரம்,** மற்றும் **ஆன்மீக ஆராய்ச்சி** போன்றவை. இவை யாவும் இறைவனை உணருவது எப்படி? என்ற கேள்வியை முன்வைத்துத்தான் செயல்படுகின்றன.

ஆண்டவனை தரிசிப்பது எந்த நிலையில்? ஆண்டவனுடன் மனிதன் உறவாட முடியுமா? ஆண்டவனின் போதனைகள், ஞான உபதேசங்கள் என்பவை எந்த நிலைகளில் கிடைக்கின்றன? இந்த யோக முயற்சிகளில் உள்ள பலவகை நிலைகள் யாவை? இப்படிப்பட்ட கேள்விகள் நிறைந்தது மேற்கண்ட யோக முயற்சிகளும் சாதனைகளும். "**யோகம்**" மற்றும் இதர வழிபாட்டு முறைகளில் பல நிலைகளில் **ஸ்ரீ கணநாதன்** எந்தெந்த செயல்களுக்கு ஆதார தெய்வமாகவும், சித்தி தரும் தேவதையாகவும் விளங்குகிறார் என்பதை விளக்குகின்ற ஓர் சிறந்த புத்தகமாக இது வெளிவந்துள்ளது. அதன் விளக்கங்களாவன:

**யோகமுறைகள்**

1. பதஞ்சலி யோக முறை – இதில் அஷ்டாங்க யோக முறை கையாளப்படுகிறது – இயமம் நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரதியாஹாரம், தாரணை, தியானம், சமாதி என்பவைகள்.

இதன் விளக்கங்கள் மற்ற யோக நூல்களில் உள்ளன என்றாலும், ஸ்ரீ கணநாதனின் ஆதிக்கம் இதில் எவ்விதம் உள்ளது என்பதை இந்த யோக நூல் விளக்கும்.

**ஸ்ரீவித்யை**

ஸ்ரீ சக்கரம் வைத்து அம்பாளை உபாசிக்கும் இம்முறையிலும் ஸ்ரீகணநாதனின் ஆதிக்கம், அருள் ஆகியவை எப்படி இருக்கிறது என்பதையும் இந்நூல் விளக்குகிறது.

**3. சௌந்தர்ய லஹரி**

இது ஸ்ரீசங்கரரின் விசேஷ கிரந்தமாகும். ஒலியின் பரிமாணங்களை விளக்கி மந்திர ஜபத்தில், தந்திர யோகத்தில் மக்கள் செய்யும் முயற்சியில் **ஸ்ரீகணநாதனின்** பங்கும் செயலும் எவ்வாறு உள்ளன என்பதை இந்நூல் விளக்குகிறது.

## 4. சித்தர்கள் கண்ட யோகமுறைகள்

சித்தர்களின் வழிபாட்டு முறைப்படி யோக முயற்சிகள் செய்யும் மக்கள் யாவரும் யோகத்தில் ஸ்ரீகணநாதனை நன்கு புரிந்து கொள்ளும்படியாக பல யோகநிலைகளை அடைவதற்கு அவரது பேரருள் எங்கனம் தேவை என்பதை நன்கு விளக்கப்பட்டுள்ளது. எனவே சித்தர்கள் முறையில் தியான, யோக முறைகள் ஈடுபட்டிருக்கும் யாவருக்கும் இப்புத்தகம் ஒரு வரப்பிரசாதமாகும். மேலும் ஸ்ரீகண நாதனின் அருள் எவ்வளவு முக்கியம் என்பது யோக நூல்கள் விளக்குவதைக்காட்டிலும் பல மடங்கு விசேஷமாக இங்கு கொடுக்கப் பட்டிருக்கிறது. மக்கள் இதனைப்படித்து பயன்பெற வேண்டும்.

யோக முறைகளில் அடுத்தடுத்து வரும் யோக நிலைகள் யாவை? அதில் ஸ்ரீகணநாதனின் அருள் பெற்று முன்னேற வேண்டிய நிலைகள் யாவை? என்பது போன்ற பல விஷயங்கள் இப்புத்தகத்தில் நன்கு விளக்கமாகத் தரப்பட்டிருக்கின்றன. யோக நிலைகளில் முக்கியமானவைகள்.

### பதஞ்சலியோகம்

இந்த அஷ்டாங்க யோகத்தில் பிராணாயாமம், (கும்பகம்) பிங்களைநாடி, பிரத்யாஹாரம், தியானம், சமாதி என்பவைகள் ஸ்ரீகணநாதனின் அருளோடு இணைந்தவைகளாகும்.

### ஸ்ரீ வித்யை

ஸ்ரீ வித்யையின் முடிவு இறைவனுடன் உறவாடுதல், 'பரா' எண்ணும் நிலை மந்திர சித்தி, கேசரி சித்தி, அந்தர் முகம் அறிதல், ஞான திருஷ்டி, ஞான உபதேசம் என்பவைகள் முக்கியமானவைகள். அவைகள் எவ்வாறு ஸ்ரீகணநாதனின் ஆதிக்கத்தில் உள்ளன என்பது பற்றிய விவரங்கள் இப்புத்தகத்தில் அடங்கியுள்ளன.

### பிரணவம்

யாவரும் அறிந்த ஒன்று **ஓம்** என்ற பிரணவத்தின் தோற்றம், அதன் உள்ளடங்கிய சக்திகள், ஒலிகள், தத்துவங்கள் இவைகளின் விளக்கங்களும், ஸ்ரீகணநாதனின் ஆதிக்கம், செயல், அருள் ஆகியவை ஒவ்வொன்றும் பிரணவத்தில் எவ்வாறு இருக்கிறது என்பதை மிக விபரமாக கூறப்பட்டுள்ளது. மேலும் ஸ்ரீகணநாதனின் பல விசேஷ தத்துவங்களும், விளக்கங்களும் இதிலுண்டு. மேலும், யோகமுறைகள், வேதம், உபநிஷத்துகள், மற்றும் சித்தர் முறை புத்தகங்கள் ஆகியவைகள், தேவதைகள் கைகளில் தாங்கியிருக்கும் ஆயுதங்கள் மற்றும் பொருள்களின் தத்துவ அர்த்தங்கள், விபூதியுடன்

ஸ்ரீகணநாதன் எவ்வாறு இணைந்துள்ளார் என்பதையும் விபூதி செய்யும் முறைகள் தோன்றிய விஷயங்கள் ஆகியவைகளும் விளக்கப்பட்டிருக்கின்றன.

எனவே யோக, சாத்திர, சித்தர் முறைகளில் செய்யும் சாதனைகளை விளக்கி ஸ்ரீகணநாதன் எவ்வாறு மேற்கூறிய வழிமுறைகளில் ஆதிக்கம் செலுத்துகின்றார் என்பதையும், ஸ்ரீகணநாதனின் பல தத்துவங்களையும் உணர்த்தும் ஒரு புத்தகம் இது.

வேதம், உபநிஷத், யோகம் இவைகளில் ஈடுபட்டுள்ள யாவரும் ஸ்ரீகணநாதனின் தத்துவங்களை அறிந்து முழு முதற்கடவுள் என்று அவர் அழைக்கப்படுவதின் விளக்கங்களை நன்கு உணரும் வண்ணம் இந்த சிறிய நூல் உருவாகியுள்ளது.

சமீபத்தில் சித்தியடைந்த எனது குருநாதர் **ஸ்ரீ அமரகவி சித்தேஸ்வரர்** மேலும் கரூர் அருகே உள்ள **ஸ்ரீ விபூதியடிகள்** ஆகியோர்களிடமிருந்து அறிந்த விஷயங்களில் ஸ்ரீகணநாதனின் பெருமைகளை விளக்குமாறு உள்ள விஷயங்கள் இங்கு தரப்பட்டுள்ளன. மேலும், இந்த சிறு நூலில் அடங்கியுள்ள விளக்கங்களை பாடல்கள் வடிவமாகவும் இப்புத்தகத்தின் முடிவில் தரப்பட்டுளளன. மேலும் **ஔவையார், நக்கீரன்** போன்ற தவமுனிவர்கள் இயற்றிய கணேசர் கவ்சம் போன்றவைகளும் இத்துடன் இணைத்துத் தரப்பட்டுளளன.

மக்கள் இந்த புத்தகத்தைப் படித்து பயன்பெற வேண்டும் என்று தாழ்மையுடன் வேண்டி விண்ணப்பிக்கப்படுகிறது. ஸ்ரீகணநாதனின் பெருமைகளை பூரணமாக அறிய ஆவல் கொண்டுள்ள யாவருக்கும், இந்த புத்தகம் ஓரளவு திருப்தியைத்தரும் என்பது நிச்சயம். எனது சிற்றறிவில் சேர்ந்த சில தகவல்களை இச்சிறு புத்தகமாகத் தந்திருக்கின்றேன்.

நன்றி

(வி. ஆர். விஜயகுமார்)

# வாழ்த்துரை

கவியோகி வேதம்

'யோகம்' பயிலும் மாந்தருக்கும், மற்ற பூஜை செய்யும் பக்திமான்களுக்கும் முதல் வழிபாட்டுத் தெய்வமாக விளங்குபவர் விநாயகரே ஆவார். எக்காரியம் தொடங்குபவர்கட்கும் முதல் பூஜை ஏற்பவர் அவரே. வினாயகரைத் தாண்டித்தான் மற்ற தெய்வங்களை அறியமுடியும் என்னும் விஷயம் நாம் அனைவரும் அறிந்த ஒன்று. மகோன்னதமான அதிசயிக்கத்தக்க ஆற்றல் பெற்றவர் அவர். மனித உடலும், யானைத் தும்பிக்கையும், பெருத்த தொந்தியும் கொண்டு குழந்தைகளையும் அற்புதமாக ஈர்க்கும் முழு முதற் கடவுளை யாருக்குத்தான் பிடிக்காது? எனக்குத்தெரிந்த பக்தர்கள் பலர் ஸ்ரீவிநாயக மந்திரத்தை மட்டுமே உருவேற்றி தமக்கு வேண்டிய வேலைகளை நிறைவேற்றிக் கொண்டதை அனுபவ பூர்வமாக அறிவேன் யான்.

அவரது மந்திரத்தைமட்டும் தினசரி ஜபித்து வந்தால் சுமார் ஐந்து ஆண்டுகட்குள் எனக்குள் என் குருவைக் காண்பித்தவர் அவரே. ஆகவே, 'யோக' மார்க்கத்தில் மட்டுமன்று மற்ற வழிபாட்டு முறைகட்கும் எந்த விதமாக கணபதி நமக்கு உதவுகிறார் என்பதை மேற்கூறிய இந்த நூல் தெள்ளத் தெளிவாக விளக்குகிறது.

கணபதி மந்திர வழிபாட்டு முறைகளைப் பின்பற்றினால் எவ்விதம் 'கணபதி சித்தி'களை அடையலாம் என்பதை சூக்ஷ்மமாகச் சொல்கிறது இந்நூல். எனவே கணபதி இதில் சித்திதரும் தேவதையாகவும் தெளிவாகக் கூறப்படுகிறார். பதஞ்சலி யோக முறைகளிலும், ஸ்ரீவித்யா பூசனையிலும், ஸ்ரீசக்கரம் வைத்து அம்பாளை உபாசிக்கும் முறையிலும் கணபதியின் ஆதிக்கம், அருள் ஆகியவை எவ்வாறு இருக்கிறது என்பதை இந்த நூல் மிக அழகாக விளக்குகிறது. ஸ்ரீஆதிசங்கரரின் 'சௌந்தர்ய லஹரியில்' ஸ்ரீகணபதியின் தெய்வீகத்தன்மை, செயல், அருள் செய்யும் முறை பற்றி இதில் சொல்லப்படுகிறது.

இதுமட்டுமா? சித்தர்களின் வழிபாட்டு முறையைப் பின்பற்றும் அனைவர்க்கும் இந்த நூல் ஒரு நல்ல வழிகாட்டி. பலவித யோக நிலைகளை, சஹஸ்ரார ஒளி அறியும் தன்மைவரை சாதகர் செல்வதற்கு நம் கணபதி கூடவே வந்து எப்படி உதவுகிறார் என்றும் சொல்கிறது. ஆகவே பக்தர்கள் மட்டுமன்றி நாம் அனைவருமே இந்தப் புத்தகத்தை வாங்கிப் படித்து பயனடையவேண்டும் என்பது யோக நெறியில் செல்லும் நம் வேண்டுகோள்.

ஸ்ரீகணபதிமூலம் கண்டறியக் கூடிய 'பரா' எனும் நிலை, **கேசரி சித்தி, ஞான த்ருஷ்டி, ஞான உபதேசம்** இவை பற்றிய விளக்கங்கள் மிக அற்புதமாக இதில் தரப்பட்டுள்ளன. யாவரும் அறிந்த 'பிரணவம்' அதன் தோற்றம், அதன் உள்ளடங்கிய சக்திகள், மந்திர நிலைகள் மட்டுமன்றி இந்த ப்ரணவ ஒலிமூலம் நம் கணநாதன் எவ்வாறு நம் உடலின் உள்ளேயும், மனத்துள்ளும் நுழைந்து நம்மை ஆட்கொள்கிறார் என்ற மிக 'ரகசிய' வழியும் கூறப்பட்டுள்ளன. ஸ்ரீகணபதி உபாசனை மூலமே மிகப் பெரிய ஞானியாக, மிகச்சிறந்த யோகியாக விளங்கிய, சமீபத்தில் சமாதியாகி இறைநிலை அடைந்த ஸ்ரீஅமரகவி சித்தேஸ்வரர் வாக்குகள் மூலம் (வேறு எந்த நூலிலும் காணக்கிடைக்காத) அனுபவ விஷயங்கள் தரப்பட்டுள்ளதால் பக்தகோடிகள் அனைவரும் இதனை வாங்கிப் பயன் பெற வேண்டுகிறேன்.

அனைவருக்கும் ஸ்ரீகணபதி அருள் கிட்டுவதாகுக!

இப்படிக்கு

**கவியோகி வேதம்.**

2/682, ரெங்கா ரெட்டி கார்டன்
நீலாங்கரை, சென்னை 600 041
போன் 044 – 64565979

# ஸ்ரீ மகா கணபதியின் பெருமைகள்

ஸ்ரீ கணநாதனின் சில தத்துவங்கள் ஆதிக்கங்கள், அருள் கொண்டவைகள் ஒரு சில மட்டும் தரப்பட்டுள்ளன.

| யோகத்தில் | தேவதைகள் | அடியார்கள் |
|---|---|---|
| மூலாதாரம் | ஸ்ரீ பரமேஸ்வரன் | அகத்தியர் |
| சகஸ்ராரம் | ஸ்ரீ நாராயணனன் | வேத வியாசர் |
| சுழுமுனை நாடி | ஸ்ரீ கிருஷ்ணன் | திருமூலர் |
| சூரிய நாடி | ஸ்ரீ மகா லக்ஷ்மி | ஔவையார் |
| ஆதித்தன் கலை | ஸ்ரீ அம்பிகை | நக்கீரர் |
| சோம வட்டம் | ஸ்ரீ சண்முகம் | நம்பிஆண்டார் நம்பி |
| பிராணக்கலை | ஸ்ரீ சதாசிவம் | அருணகிரி நாதர் |
| மூலாக்னி | | அமரகவி |
| தேவகதி | | சித்தேஸ்வரர் |
| திருமூச்சு | | |
| சுக்கிலம் | | |
| புலனடக்கம் | | |
| புலன்கள் ஆட்டம் | | |
| பூலோக ஞானம் | | |
| பரலோக ஞானம் | | |

ஸ்ரீ கணநாதன் எனப்படும் விநாயகரை சடங்குகள், கிரியைகள் மற்றும் இதர காரியங்களைத் துவங்குவதற்கு மட்டுமே வணங்க வேண்டும் என்று நினைப்பது தவறு மட்டும் அல்ல, மகா பாவத்தையும் சேர்க்கும். அவரே முழுமுதற் கடவுள் ஆவார். இன்னும் சொல்லப்போனால், சகல தேவதைகளும் அவரைப் போற்றி வணங்கி தங்கள் சக்தியை வளர்த்துக் கொள்கின்றன. எனவே முழுமுதற் கடவுள் என்று போற்றப்படும் ஸ்ரீ கணநாதனின் பெருமைகளை இனிப்பார்ப்போம். அவரது அருளின்றி எவரும், எந்த தெய்வமும், எந்த சித்தரும் யோகத்தில் வெற்றி காண இயலாது என்பதை யாவரும் உணர வேண்டும்.

| படைப்பு | வேதம் மந்திரம் | சித்திகள் |
|---|---|---|
| பிரணவ நாதம் | காயத்ரி மந்திரம் | புலனடக்கம் |
| பிரணவ ஒலி | ரிக் வேதம் | பூரண கும்பகம் |
| ஓங்கார நாதம் | யஜூர் வேதம் | கேவல கும்பகம் |
| சப்த சுவரங்கள் | சாம வேதம் | அஷ்டாங்கயோகசித்தி |
| சப்த தாதுக்கள் | அதர்வண வேதம் | அகார சித்தி |
| பஞ்ச பூதங்கள் | உபநிஷத்துகள் | அப்பு சித்தி |
| தேஜோ சக்தி | பகவத் கீதை | குண்டலினி சித்தி |
| ஞான சக்தி | பிரம்ம சூத்திரம் | கேசரி சித்தி |
| சித் சக்தி | அகாரம் | ஏகாக்ர சித்தி |
| பஞ்ச கோசங்கள் | ஆதித்ய தலை | பிரம்ம உபதேசம் |
| பஞ்ச– | அட்சரங்கள்:– | சகஜ நிஷ்டை |
| ஆகாசங்கள் | ஓம் | சித் பிரகாச நிஷ்டை |
| நாத பிரம்மம் | ஸ்ரீம் | நாதோபாசனை சித்தி |
| சப்த பிரம்மம் – | கம் | துரியம், |
| இயக்கம் | ஹ்ரீம் | துரீயாதீதம் |
| பரம்மணஸ்பதி | கலீம் | ஞான போதம் |
| பரகஸ்பதி | க்லௌம் | ஆத்ம போதம் |
| செவ்வாய் | | சுழுமுனை |
| கேது | | பற்றற்ற உள்ளம் |
| | | தோடுடைய செவி |
| | | அமிர்த கலை |
| | | திருமேனி |

மேற்கண்ட பட்டியலின் விவரங்களைப் பற்றிய சிறு குறிப்புகளும் அதன் பின் விளக்க உரைகளும் தரப்பட்டுள்ளன. ஸ்ரீ கணநாதனின் தத்துவங்களை பூரணமாக விளக்க வேண்டுமென்றால் மற்றும் ஒரு தனி புத்தகமேத் தேவைபடும். எனினும் முடிந்த வரை விளக்கமும் முக்கிய குறிப்புகளும் தத்துவங்களும் இந்த புத்தகத்தில் தரப்பட்டுள்ளன. மக்கள் இந்த விளக்கங்களைக் கண்டு ஸ்ரீ கணநாதனின் பெருமைகளை உணர்ந்து அவரை வழிபட்டு பக்தியால் குளிரச் செய்து பயனடைய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

**விநாயகனே முழு முதற் கடவுள்**

ஸ்ரீ மகா கணபதியின் அருளின்றி யோகத்தில் அல்லது தவத்தில் வெற்றி காண்பது இயலாத காரியமாகும். முழு முதற் கடவுள் என்பதன் பொருள் என்ன என்பதை இப்புத்தகம் விளக்குகின்றது.

அவரது ஆட்சிக்குள் உள்ள பல யோக நிலைகளையும், சித்திகளையும் இங்கு கீழே பட்டியலிட்டு தரப்பட்டுள்ளது.

1. **புலன்களின் ஆட்டம்** ஸ்ரீ கணபதியின் செயல்
1. புலனடக்கம் என்ற **புலன்கள் அடங்கிய நிலையும்** அவர் செயலே (பிரத்யாஹாரம் என்ற நிலை)
2. தவத்தில் இறைவனை நெருங்கும் பொழுது நம்மை மயக்கும் பேரானந்த அலைகள் (**ஆனந்தமயக் கோசம்**) என்பது அவரது செயல். அதனை மீறி அவர் அருளுடன் மேல் நிலைக்கு செல்பதுதான் தவத்தின் உச்ச நிலை
3. "**விபூதி, திருநீரு**" பசுஞ்சாணத்திலிருந்து செய்யப்படுகிறது. பசு காமதேனுவின் அம்சம். காமதேனு போன்ற ஐந்து கோமாதாக்கள் ஸ்ரீ பரமேஸ்வரனின் ஐந்து முகத்தினுள் ஒன்றிலிருந்து தோன்றின. அந்த ஐந்தாவது முகம்தான் ஸ்ரீ கணநாதனின் அம்சமாகும்.
4. ஐந்து பூதங்களின் "**மண்**" என்ற பிருத்துவி தத்துவம் ஸ்ரீ கணநாதன் ஆவார்.
5. யோகத்தில் "**குண்டலினி சக்தி**" எனப்படுவது இவரே.
6. நவக்கிரகங்களில் "**கேதுவும், தேவ குருவான**" பிரகஸ்பதியும் இவரே.
7. நமது தேகத்திலுள்ள ஆறு ஆதார சக்ரங்களில் உச்சியிலுள்ள "**சகஸ்ராரம்**" என்ற 1000 இதழ் கொண்ட தாமரை இவரே.
8. மனித தேகத்திலுள்ள **சுக்கிலம்** அல்லது வீரியம் என்ற ஜீவ சக்திக்கு அதிபதி இவரே.
9. பிரம்ம நிஷ்டையில் ஞானிகளையும் மயங்க வைக்கும் பிரணவ ஒலிமய ரூபமான ஆனந்தம் இவரே.
10. ஸ்ரீ மகா இலட்சுமியின் நாவில் உலாவும் அருள் சக்தி இவரே.

11. சித்திகளில் பரம உச்ச நிலையான "**பிருத்துவி சித்தி**" மற்றும் அப்பு **சித்தி** என்ற இரண்டிற்கும் அதிதேவதை இவரே.
12. வேதங்கள், உபநிஷத்துகள் ஆகியவை மேற்கூறிய அப்பு சித்தி பெற்ற பின்னரே **வேத வியாசருக்கு** கிடைத்தன.
13. "**மனோ லயம்**" என்ற மனமொடிங்கிய யோகநிலை தேவகுருவான பிரகஸ்பதியின் அம்சமாகும்.
14. யோகத்தில் நான்கு ஆகாசங்கள் உள்ளன பூதாகாசம், பிரணவாகாசம், சிதாகாசம் மற்றும் **பரமாகாசம்** என்பவை. இதில் முடிவில் உள்ள பரமாகாசத்தை அடைந்துதான் இறைவனுடன் நாம் உறவாட முடியும். வேத வியாசர் அந்நிலையில் தான் வேதங்களை கண்டறிந்தார். இந்த பரமாகாசம் பிரித்துவி (மண்) தத்துவத்தை பற்றிக் கொண்டிருக்கிறது. எனவே பிரித்துவி அல்லது மண் தத்துவத்தின் அதிபதியான ஸ்ரீ கணநாதனின் துணையின்றி ஞான போதனைகள் கிட்டாது.
15. யோகத்தில் புலனடக்கம் அவசியம். அங்கு நமக்கு சாதாரண மூச்சுக் காற்று அழிந்து "**திருமூச்சு**" என்ற தெய்வீக சுவாசம் ஏற்படும். இதன் அதிபதி ஸ்ரீ கண நாதன் ஆவார்.
16. "ஓம்" என்ற பிரணவம் ஸ்ரீ கணநாதனின் அம்சமாகும். ஓங்காரத்திலிருந்துதான் "மண்" முதலான பஞ்ச பூதங்களும் (தத்துவங்களும்) தோன்றின.
17. ஸ்ரீ கணநாதனே **ஸ்ரீ அம்பிகையாக** (சக்தி) செயல்படக்கூடியவர்.
18. ஸ்ரீ கணநாதனின் **தங்கைதான்** ஸ்ரீ மகா இலட்சுமி ஆவார்.
19. ஸ்ரீ கணநாதனின் **தம்பியே ஸ்ரீ சண்முகன்** ஆவார்.
20. **ஔவையார், நக்கீரர், அகத்தியர்** போன்றவர்கள் ஸ்ரீ கணநாதனை மிகவும் ஆராதனை செய்து அருள் பெற்றவர்கள்.
21. பிரணவம் யோகத்தின் சிகரம். பிரணவம் யோகத்தில் மனித தேகத்தில் அண்டத்தில், பிண்டத்தில் பல நிலைகளை, தத்துவங்களை மற்றும் யோக சித்திகளை தன்னுள் அடக்கியுள்ளது. இந்த **பிரணவத்தின் சொரூபியாக** விளங்குபவர் ஸ்ரீ கணநாதன் ஆவார்.
22. மனிதனின் ஸ்தூல தேகம் சூட்சும தேகமாக மாறுகிறது **(திருமேனி)** யோகத்தில் தவசிரேஷ்டரான அகத்தியர், வேத வியாசர் போன்றவர்கள் அந்– நிலைக்குச் சென்றுதான் இறைவனை நன்கு

உணர்ந்தனர். அங்கு அவர்களது தேகம் இறைவனின் தேகமாகவே மாறி வடுகிறது. அந்த திவ்ய தேகமானது ஸ்ரீ கணநாதனின் அம்சமாக இருக்கும். எனவே ஸ்ரீ கணநாதன் மிகவும் பெருமை வாய்ந்தவர்.

23. யோகத்தில் "**துரியம்**" மற்றும் "**துரியம் கடந்த பெரும் யோக நிலை**" என்பவை மிகப் பெரிய சித்திகள் தரும் தவ நிலையாகும். அதன் அதிபதியே ஸ்ரீ கணநாதன் ஆவார்.

24. ஸ்ரீ வித்தை என்ற யோக முறையில் "பரா" என்ற தவ நிலைக் கண்டு மனதை உள்நோக்கு முறையில் செலுத்துவது இவரது அருளேயாகும். ஸ்ரீ வித்தைக்கு இவரது கருணை வேண்டும்.

25. யோகத்தில் மூச்சு, பேச்சு, புலன்கள், தியானம், கும்பகம் பிரம்ம விருத்தி, பிரம்ம ஞானம், சுழுமுனை போன்ற யாவைக்கும் அதிதேவதை இந்த மகா கணபதி ஆவார்.

26. சப்த சுவரங்களும் பிரணவத்தில் உண்டு. இந்த பிரணவம் ஸ்ரீ மகா கணபதியின் அம்சமாகும். இதில் "**தைவதம்**" இவரது அருள் ஆகும்.

27. ஸ்ரீமந் நாராயணனின் **ஆத்ம சக்தியாக** விளங்குபவரும் இவரே ஆவார்.

28. நமது உயிரின் வேகம் விரயமாகிறது. இதனைத் தடுப்பதே யோகம். இந்த கலைக்கு அதிபதி ஸ்ரீ கணநாதன் ஆவார்.

29. **சிரஞ்சீவி** என்ற தவநிலை அடைவது இவரது அருளாகும். ஸ்ரீ ஆஞ்சநேயர், ஜாம்பவான், சித்தர்கள் போன்றவர்கள் அடைந்த நிலையிது.

30. **கேவல கும்பகம்** மற்றும் **சோடச மகா மந்திர சித்தி** இவரது அருளேயாகும்.

31. ஸ்ரீ சதாசிவனின் ஐந்து திருமுகங்களில் ஒன்று இவரது அம்சமாகும்.

32. மனித தேகத்தில் "**பிரம்ம ரந்திரம்**" என்ற கழுத்தின் மேல் பின்புறம் உள்ள பகுதிக்கு அதிபதியும் இவரே.

33. சத்–சித்–ஆனந்தம் எனப்படும் மூன்று பரபிரம்ம தத்துவத்தில் "**சித்**" என்ப்படுவது ஸ்ரீ கணநாதனின் ஆதிக்கத்தில் இருக்கிறது.

34. மாயா சம்பந்தமானவை எல்லா தேவதைகளும் (ஒரு சில தேவதைகள் இதற்கு விதி விலக்காகும்) முதற் பொருளாக ஸ்ரீ கணநாதன் விளங்குகிறார். முற்றும் மாயா சம்பந்தம் இல்லாதவர்.

35. "**பற்றற்ற உள்ளம்**" நூறு சதவிகிதம் இருந்தால்தான் ஸ்ரீ கணநாதன் அருள் கிட்டும். எனவே மற்ற தேவதைகளைப் போல் சாதாரணமானவரல்ல இவர்.

36. ஓம்காரத்தில் அ, உ, ம என்று மூன்று ஒலிகள் மறைந்துள்ளன. அதுவே (அகாரம்) படைத்தல், (உகாரம்) காத்தல், (மகாரம்) அழித்தல் என்பதாகும். இதில் (அ) என்ற **அகாரம்** ஸ்ரீ கணநாதனின் பீஜமாகும்.

37. "**கம்**" என்று கிட என்று மக்கள் கூறுவது "**சும்மா இரு**" என்று பொருள்படும். சும்மா இருத்தல் என்பது இங்கு "யோகம்" அல்லது தியானம் அல்லது சமாதியைக் குறிக்கும். மூச்சை அடக்கிய நிலைதான் "சமாதி" என்பது. இந்த "**கம்**" என்ற அக்ஷரம் (வடமொழியில்) மந்திர யோகத்தில் மூச்சை அடக்கும் கலையை அல்லது மூச்சு அடங்கிய நிலையைக் குறிக்கும். இதற்கு கும்பகம் என்று பெயர். இதன் அதிபதி ஸ்ரீ கணநாதன் ஆவார். எனவே தான் – கணநாதனின் மூல மந்திரத்தில் "**கம்**" என்ற பீஜாட்சரம் அடங்கியுள்ளது. ஆகவே சமாதிக்கு அவரது அருள் வேண்டும்.

38. ஸ்ரீ கணநாதனே நாத பிரம்மம் ஆவார். நாதத்தின் தலைவன் அவரே.

39. **தோடுடைய செவியன்** என்று சைவத்தலைவர் **திருஞான சம்பந்தரால்** அழைக்கப்பட்டார். இதில் தோடு என்பது பிரணவ ஒலியாகும். அதன் அதிபதி ஸ்ரீ கணநாதன். அதன் பின்னரே இறைவனுடன் உறவாட இயலும். எனவே தோடுடைய செவி என்பது ஸ்ரீ கணநாதனின் அருளான "பிரணவ ஒலியைக்" கேட்ட செவி என்று பெயர்.

40. ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்ரீ கணநாதனை மட்டுமே உபாசித்தார் என்பது யாவரும் அறிந்ததே. எனவே தசாவதாரத்தில் **ஸ்ரீ கிருஷ்ணனின் உபாசனை தெய்வமாக** இருந்து அருள் புரிந்து, ஸ்ரீமத் பகவத் கீதையை அருளியது கணநாதன் அருள். எனவே கீதையை அடக்கியுள்ள மகாபாரதத்தை எழுத ஸ்ரீ கணநாதனையே அடைக்கலம் புகுந்தார் வேத வியாசர்.

41. ஸ்ரீ கணநாதனின் மூலமந்திரம் "*ஓம், ஸ்ரீம், ஹ்ரிம், கிலீம், க்லௌம், கம் கணபதயே வர வரத சர்வ ஜனமே வசமானாய ஸ்வாஹா*" என்பது. இதில் ஓம், கம், ஸ்ரீம் என்பது **காயத்தி மந்திரத்திற்கு** ஒப்பானது. எனவே காயத்திரி மந்திரத்தையும் தனக்குள்ளே அடக்கியுள்ள மந்திரம் ஸ்ரீ கணநாதனின் மூல மந்திரம்.

42. ஸ்ரீ பரமேஸ்வரரின் மூல மந்திரம் "**பஞ்சாட்சரம்**" எனப்படும் ஐந்தெழுத்து ஆகும். அதாவது "**நமசிவாய**" என்பதாகும். ஓம் என்பது பஞ்சாட்சரத்தைக் குறிக்கும். இந்த பஞ்சாட்சர மந்திர சொரூப மூலமாகவும், சகல மந்திர எழுத்துக்களின் ஆதிலமும் ஸ்ரீ கணநாதனே ஆவார்.

43. யோகத்தில் "**கேசரி சித்தி**" என்பது இவரது அருளேயாகும்.

44. யோகத்தில் "**சோம வட்டம்**" அல்லது **மூலாக்னி** என்பதின் அதிதேவதை இவரே.

45. யோகத்தில் வலது நாடி இடது நாடி இவைகளை **சமன்வயபடுத்தி** ஏற்படும் சித்திக்கு இவரே அதிதேவதை.

46. "**ஆதித்தியன்**" அல்லது "**அகார ஒலியின்**" அதிதேவதை தான் இந்த ஸ்ரீ கணநாதன் ஆவார்.

47. யோகத்தில் "**பிரம்ம நிஷ்டைக்கு**" அதிபதி இந்த ஸ்ரீ கண நாதனே

48. ஆதார சக்கரங்களில் "**மூலாதாரம்**" என்ற முதல் சக்கரம் இவரது ஆட்சி.

49. "**நீ நீ ஆதல்**" என்ற வேத மகா வாக்கியத்தின் உண்மைதனை உணர்வது இவரது கருணையின் பேரில் தான். இதுவே "**காமகலை**" என்பதாகும்.

50. மனிதனின் தேக இயக்கம் யோகத்தில் அல்லது தவத்தில் மாறி தேவர்களின் உடல் பாணியில் இயங்கத்துவங்கும். இதுவே "**தேவகதி**" எனப்படும். இதன் அதிபதிதான் ஸ்ரீ கணநாதன் ஆவார்.

51. தவத்தில் போதிக்கப்படும் எல்லா **ஞான பிரம்ம** உபதேசங்களுக்கும் ஸ்ரீ கணநாதனின் அருள் தேவை.

52. **ஸ்ரீ வித்தையின் பூரண நிலை** இவரது அருளின்றிக் கிட்டாது.

53. நமது சொல்லில் (பேச்சில்) நமது "**பிராண கலை**" இயங்குகிறது. இதுவே ஸ்ரீ கணநாதன் ஆவார்.

54. "**சப்த பிரம்மம்**" என்று வேதங்கள் விவரிப்பது இந்த ஸ்ரீ கணநாதனே.

55. "**சகஜ நிஷ்டை**" என்ற பெரும் தவநிலை ஸ்ரீ கணநாதனின் அருளால் உண்டாவதாகும்.

56. ஸ்ரீ பரமேஸ்வரனின் தியானத்தில், தவத்தில் உள்ள சொரூபம் ஸ்ரீ கணநாதனே ஆவார்.

# மகா கணபதியும் காயத்ரி மந்திரமும்

எல்லா மந்திரங்களுக்கும் தாயாக விளங்குவது ஸ்ரீ காயத்ரி மந்திரமாகும். அது 24 அட்சரங்களைக் கொண்டது. "**காயத்ரி**" என்ற சொல்லுக்கு "*எவன் தன்னை கானம் பண்ணுகிறானோ அவனை காக்கும் மந்திரம்*" என்று அர்த்தம். அனாதியாக அண்ட வெளியில் இருந்த அந்த பெரும் மந்திரத்தை அறியும் வாய்ப்பைப் பெற்று அதன் விளக்கத்தை உலகுக்குத் தந்த பெருமை விஸ்வாமித்திர முனிவருக்கு உண்டு.

**காயத்ரி மந்திரம்**

*ஓம் பூர்புவசுவ: தத்ஸவிதுர் வரேண்யம் பர்கோ*
*தேவஸ்ய தீமஹி, தியோ யோந: பிரசோதயாத்*

இது பொதுவான காயத்ரி மந்திரம். தேவி காயத்திரியைப் போற்றி அவள் அருள் கொண்டு சித்திகளும் மற்றும் முக்காலமும் உணரும் ஆற்றல் பெறுவதே இதன் நோக்கம். பிற்காலத்தில் பல மதங்கள் மற்றும் பல தெய்வங்களின் ஆராதனைகள் என்று ஏற்பட்டவுடன் ஒவ்வொருவரும் தங்கள் இஷ்ட தெய்வத்தைத் தவிர காயத்ரி தேவியை பூஜிப்பது இல்லாமல் போயிற்று. ஏனவே காயத்ரி மந்திரத்தை ஒவ்வொரு தேவதைக்கும் ஏற்றவாறு அமைத்து பல காயத்ரி மந்திரங்கள் உண்டாயின.

**காயத்ரி மந்திரத்தின் சிறப்பு**

1. எவன் தன்னை கானம் பண்ணுகிறானோ அவனை காப்பற்றுகிறது இந்த காயத்ரி மந்திரம்.
2. 24 அட்சரங்கள் கொண்ட மந்திரம் இது.
3. எந்த பரம்ம தெய்வீக சக்தி மனிதனின் எண்ணத்தை அல்லது அறிவைத் தூண்டுகிறதோ அந்த சக்தியை வழிபடுவது தான் காயத்ரி மந்திரத்தின் சிறப்பு.
4. காயத்ரி மந்திரத்தை எப்போதும் எந்நாளும் எந்த வேளையிலும் சொல்லலாம்.
5. சாவு, தீட்டு போன்ற தடை இம்மந்திரத்திற்கு கிடையாது.
6. முன்வினை தீவினை யாவும் காயத்ரி மந்திர ஜபத்தினால் அழிகிறது.
7. காயத்ரி ஜபத்தினால் பிரம்ம தேஜஸ் என்ற ஆன்மிக தெய்வீக சக்தி உடலில் வளர்கிறது.

8. காயத்ரி மந்திரமும், சோடச மகா மந்திரம், பஞ்ச தசாக்ஷரி போன்ற மந்திரங்களும் இணையானவை.

9. ஸ்ரீ வித்யா மந்திரங்களும் காயத்ரி மந்திரமும் எனவே இணையானவை.

10. யோகத்தில் முக்காலம் உணரும் சக்தி கொண்ட முனிவர்கள் வணங்கும் மந்திரம் இது.

11. நமது மூச்சில் பேச்சும், பேச்சில் மூச்சும் என்று நிலைகளை மாற்றி அமைக்கும் யோக நிலைகளுடன் தொடர்பு கொண்டது இந்த காயத்ரி மந்திரம்

12. ஆயிரக்கணக்கில் அல்லது இலட்சகணக்கில் காயத்ரி மந்திரத்தை ஜபித்தால் சகல காரிய சித்திகளும் உண்டாகும் என்று புராணங்கள், வேதங்கள் ஆகியவை பறை சாற்றுகின்றன. இதில் உள்ள சூட்சுமம் என்னவென்றால் அவ்வாறு இலட்சக்கணக்கில் செய்யப்பட்ட காயத்ரி ஜபத்தில் ஒன்று அல்லது இரண்டு தீவிர முயற்சியல் இறையுணர்வில் ஏகாக்ர சித்தத்தோடு தன்னை மறந்த நிலையில் நிஷ்டையில் சொல்லப்படும் போதுதான் மந்திர சித்தி ஏற்படகிறது. அதாவது சமாதி அல்லது அதற்கு நிகரான பிரம்ம நிஷ்டையில் அவ்வாறு செய்த ஜபம்தான் சித்தி பெற்று சகல காரிய சித்திகளை தருகிறது. காயத்ரி மந்திர சித்திக் கிடைக்க தேவையான அந்த ஓரிரண்டு மந்திரம் செயல்படத்தான் நிஷ்டை ஏற்படும்படி இலட்சக் கணக்கில் ஜபம் செய்ய வேண்டும் எனக் கூறப்படுகிறது. எனவே, நிஷ்டைக் கைக்கூடிய நிலையில் தான் நாம் செய்யும் மந்திர ஜபம் பலிதம் ஆகும். எனவே ஆயிரக்கணக்கில், இலட்சக் கணக்கில் செய்தால்தான் ஒன்று அல்லது இரண்டு மந்திரம் வீரியம் பெற்று சித்தி தரும்.

13. மேலும், காயத்ரி மந்திரம் சித்தி பெற்றவனின் தேகம் சாதாரண மனிதனின் தேகம் போன்று இருக்காது. "**காய சித்தி**" என்று முனிவர்கள் போற்றும் பெரும் தவநிலை பெற்று தேகம் குறையொன்று இல்லாத தெய்வீகத்தன்மையுடன் வளங்கும். அவனது தேகத்தை எந்த சக்தியாலும் அழிக்க முடியாது. தேவதா சரீரம் என்னும் "**திவ்விய சரீரம்**" பெற்றவனாயிருப்பான் அவன்.

14. உள்ளம் அவனுடன் பேசி உறவாடும். "உள்ளம்" என்பது சாதாரண மனிதனின் மனசாட்சி அல்ல. தவத்தில் நமது அந்தராத்மா நம்முடன் உறவாடுவது ஆகும். இதுபோல, இன்னும் காயத்ரி மந்திரத்தின் பெருமைகளை சொல்லிக் கொண்டே போகலாம். ஏனவே காயத்ரி

மந்திரத்தை நேர்மையாக ஜபித்து சித்தி பெற்ற மனிதன் தெய்வீக புருஷனாக மாறி உலகுக்கு நன்மைகள் செய்பவனாக இருப்பான். எல்லா மந்திரங்களும் அவனுக்கு நன்மை செய்பவைகளாக மாறிவிடும். அவனது சித்திகள் கணக்கிலடங்கா. "**ஞானக்கண்**" அவனுக்குக் கிடைக்கும். "**காயத்ரி மந்திரம் சித்தி**" பெற்ற ஒருவனுக்கு கிடைக்கும் பல யோக சித்திகளும் நிலைகளும் அடியில் காணலாம்.

1) சித்த சுத்தி
2) சித்த விருத்தி நிரோதம்
3) ஏகாக்கிர சித்தம்
4) திடசித்தம்
5) காய சித்தி
6) ஆழ்நிலை தியானம்
7) ஞான திருஷ்டி
8) அருள்வாக்கு
9) அஷ்டாங்க யோக சித்தி
10) சித் பிரகாச நிஷ்டை
11) பிரணவ தேகம்
12) பஞ்ச பூதத்தை அடக்கும் சித்தி
13) எல்லா உயிரினங்களும் அவனை வணங்கும்
14) எல்லா உயிரினங்களையும் அவன் அடக்கி ஆள்வான்
15) கூடுவிட்டு கூடுபாயும் சித்தி
16) சுகல தேவதா வசியமும் அனுகூலமும் (கேசரி சித்தி)
17) காணாக்கண் (பெரும் யோக நிலை)
கண்ணிருந்தும் காணாத யோக நிஷ்டை
18) குண்டலினி
19) ஷட்சக்ர சித்தி
20) அப்பு சித்தி
21) மகா புருஷ யோகம்
22) அமரகவி சித்தேஸ்வரர் சித்தி

மற்றும் இன்னும் பல சித்திகளும், தவயோக சாதனைகளும் வந்து சேரும். தேவதைகள் அவனை வந்து தரிசித்து போகும். 14 லோகங்களிலும் இருந்து

தேவதைகள் மற்றும் யோகிகள், சித்தர்கள் யாவரும் வந்து அவனை வாழ்த்தி வணங்கி செல்வார்கள்.

இவ்விதம் இருக்க, இந்த காயத்ரி மந்திரத்தின் இணையான சக்தி மற்றும் ஒரு மந்தரத்திலுள்ளது. அது தான் ஸ்ரீ மகா கணபதியின் மூல மந்திரத்தின் ஒரு பகுதியாகும். அதாவது ஸ்ரீ மகா கணபதியின் மூல மந்திரமாவது

இதில் "**ஓம், ஸ்ரீம், ஹ்ரீம்**" என்ற மூன்று பீஜாட்சரங்களும் ஸ்ரீ காயத்ரி மந்திரத்திற்கு இணையானவைகளாகும்.

அவைகளின் சித்தி காயத்ரி மந்திர சித்திக்கும் இணையானதாகும். ஸ்ரீ காயத்ரி மந்திரத்திற்கு இணையான அட்சரங்களைக் கொண்ட ஸ்ரீ மகா கணபதியின் மூல மந்திரத்தின் பெருமையை இங்கு நாம் அறிந்து கொள்ளலாம். எனவே, காயத்ரி மந்திரத்தையே தனக்குள் அடக்கி வைத்துள்ள ஸ்ரீ கணேசரின் மூல மந்திரத்தை அறிந்து, ஜபித்து, சித்தி பெற்றவன் காயத்ரி மந்திர சித்திக்கும் மேலான சித்தி பெற்றவன் என கருதப்படுவான். அப்படிப்பட்ட பிரணவ பொருளான ஸ்ரீ கணநாதனை நாம் அனுதினமும் தியானித்து வணங்கி அருள் பெறுவோமாக.



# ஸ்ரீகணநாதனும் வேதங்களின் தோற்றமும்

ஸ்ரீகணநாதன் பல வடிவங்களில், சக்திகளில், தத்துவங்களில் அமைந்து பல சித்திகளைப் பிரம்ம ஞானிகளுக்கும், வேத ரிஷிகளுக்கும் நமக்கும் தந்து அருளுகிறார். நான்கு வேதங்களையும் இயற்றித் தொகுத்து நமக்கு அளித்தவர் ஸ்ரீவேத வியாசர். வேத ஒலிகளைத் தனக்குள் அறிந்து உடனே அவற்றை ஓலைச்சுவடிகளில் எழுதுவது அசாத்தியமான கார்யமாகும். சாதாரணமாக ஓர் அலுவலகத்திலுள்ள ஸ்டெனோ (அல்லது) டைப்பிஸ்ட் தன் அதிகாரி சொல்லியதைக் கேட்டு எழுதிப் பின் அதை டைப் அடித்துத் தரும்போதே பல தவறுகள் ஏற்படுகின்றன. மறுபடியும் பலதடவை டைப் செய்யப்பட்டுப் பின் முடிவாகக் கடிதங்கள் போன்றவை தயாராகின்றன. இப்படியிருக்க யோக நிஷ்டையில் பிரம்மத்துடன் இரண்டறக் கலந்து சிற்றறிவை ஒதுக்கி வைத்துப் பேரறிவு தன்னை ஆட்கொள்ள யோகநிலையில் வேத ஒலிகளைக் கேட்பது மிகவும் கடினமான கார்யம். மேலும் தன்னிலை மறந்து தெய்வத்துடன் உறவாடும்போது கிடைத்த அந்த ஞானத்தை மீண்டும் தன்னிலையைத் தான் அடைந்தபோது நினைவு கூறுவது மிகவும் கடினமான கார்யமாகும். எனவேதான் **ஸ்ரீவேத வியாசர்** ஸ்ரீகணநாதனை அழைத்துத் தான் பிரம்ம நிஷ்டையில் (தன்னை மறந்த யோக நித்திரையில் கிடைத்த வேத ஒலிகளை) உணர்ந்தவற்றைக் கூறி ஸ்ரீ கணநாதனை எழுதச் சொன்னார் என்பது புராணக் கதை. இதில் நாம் புரிந்துகொள்ள வேண்டிய பல தத்துவ உண்மைகள் உண்டு. அவற்றைப் பட்டியலிட்டுக் கீழே தரப்பட்டுள்ளன.

நான்கு வேதங்களை இயற்றியதால் அவரை வேத வியாசர் என்று அழைக்கிறோம். அவை **ரிக், யஜுர், சாமம், அதர்வனம்** என்பவையாகும். இதில் **ரிக்வேதம்** பூசை, ஹோமங்கள் போன்ற சடங்குகள், வேள்விகள் போன்றவற்றை எவ்வாறு செய்யவேண்டும் என்பதை மூலக் கருத்தாகக் கொண்டு விளக்குகிறது. **யஜுர் வேதம்**, பிரணவத்தையும் மற்றச் சப்தங்களையும் விளக்குகிறது. **சாமவேதம்** இது பிரணவத்தையும் மற்றும் யோகநிலைகளுக்கான உபாயங்களையும் பற்றிக் கூறுகிறது. வேதத்தில் நான் சாமவேதமாக இருக்கிறேன் என்று ஸ்ரீகிருஷ்ணன் கீதையில் கூறுகிறார். ஸ்ரீபரமேஸ்வரனின் ஆராதனையில் இது முக்கியம். காரணம் இது அவருக்கு மிகப் பிடித்தமானது. கடைசியில் **அதர்வண வேதம்** என்பது தீய/அசுர

சக்திகளை விலக்கும் உபாய மந்திரங்களையும் யோக சூத்திரத்தில் தவத்திற்கான சில உபாயங்களையும் விளக்குகிறது.

இந்த வேதங்களை ஸ்ரீவேத வியாசர் அறிந்த தவநிலைக்குப் பெயர் "**சித் பிரகாச நிஷ்டை**" என்று பெயர். **வேதமூலம்** என்பது இந்த நிஷ்டைதான். வேத வியாசர் மட்டுமின்றி வேதங்களைப்போல் இறைவனின் திருவாக்கினால் உருவாகி நிஷ்டையில் அறியப்படும் எந்தப் படைப்புகளும் மேற்கூறிய சித்பிரகாச நிஷ்டையில்தான் தோன்ற முடியும். **அபரோக்ஷ ஞானம்** (அல்லது) பிரம்ம ஞானமாகிய அதை அடையச் செல்லும் வழிகளில் உள்ள நிலைகளாவன:

| | |
|---|---|
| 1 | **புலனடக்கம்** |
| 2 | **தாரணை** |
| 3 | **தியானம்** |
| 4 | **தீவிர தியானம்**<br>(நிர்விகல்ப சமாதி தவிர்க்கப்பட வேண்டுமு) |
| 5 | **ஆத்ம பரிபூரணம்**<br>(எல்லாப் புலன் தத்துவங்களையும் கடந்து இறைவனுடன் ஒன்றியிருத்தல்) |
| 6 | **சித்பிரகாச நிஷ்டை**<br>(அமிர்த ஸ்வாசம் இங்குக் கிடைக்கிறது.) |
| 7 | **அபரோக்ஷ ஞானம்**<br>(புலன்களின் சிற்றறிவின் உதவியின்றி இறை உணர்வால் அறியப்படுவது.<br>(தனக்குள் உள்ள அந்தர்யாமியிடமிருந்து) |
| 8 | **ஞான உபதேசம் (இறைவனின் பிரம்ம உபதேசம்)**<br>("அத்வைத சித்தாந்தம்" இந்த நிலையைத்தான் எட்டிப் பிடிக்கவேண்டும் என்று எக்காணமிடுகிறது.) |

"புலன்கள்" வெளிநோக்குத் தன்மையை இழந்து தியானத்தில் உள்நோக்கு முகமாகத் திரும்பும் சமயம் அந்த நிலைக்கு "**அந்தர் முக திருஷ்டி**" என்று பெயர். மிகவும் தெய்வீகமான அண்ட சராசரங்களையும் அறிய வைக்கும் சக்தி கொண்டதாக நமது புலன்கள் மாறிவிடும். அங்குதான் புலன்கள் மற்றும் சிற்றறிவின் துணையின்றி "எல்லாம் அறியும் ஆற்றலான அபரோக்ஷ ஞானம் நமக்குக் கைகூடும். இறைவனால் கருணையின் பேரில் கொடுக்கப்படும்

வரம்தான் மேற்கூறிய "அபரோக்ஷ ஞானம்" (அல்லது) ஞான திருஷ்டி என்பது. அந்த ஞானம் சாமானிய ஞானமல்ல. பரமாத்மாவின் குணங்களான எங்குமிருக்கும் தன்மை, எல்லாமறியும் தன்மை, எல்லா காரியங்களையும் செய்து முடிக்கும் ஆற்றல் என்ற மூன்றில் "எல்லாம் அறியும்" ஆற்றலின் அலைகளாகும். பெரும் தவஸ்ரேஷ்டர்களுக்கே கிடைக்கும் பெரும் வரம் அது. **அனுக்கிரகம்** என்பது அதுவே. அவ்வாறு வெளியே உள்ள பொருள்களின்மீது மனதை போகாமல் உள்நோக்கு முகமாக அந்தர்முகத் திருஷ்டியை நோக்கிச் செல்லும் தேக இயக்கம்தான் பிரம்ம ஞானிகளுக்கு அங்குத் தவத்தில் "**அமிர்த சுவாசம்**" என்ற மிக பவித்திரமான தெய்வீக சுவாச கதியை அளிக்கிறது.

இந்த அமிர்த ஸ்வாசம் ஓரிரு நிமிடங்கள்தான் அந்த பிரம்ம ஞானிகளின் சுவாசத்தில் ஓடும். அதுவே தவத்தில் மனிதன் காணும் பெரும் பாக்கியம் ஆகும். இந்த "**அமிர்த சுவாசம்**" தேவர்களுக்கும் கந்தவர்களுக்கும் கூடக் கிடைக்க முடியாத வஸ்து ஆகும். காரணம், தபோபலத்தினால் கிடைக்கும் தெய்வீகக் காற்று அது. இறைவனின் பேரறிவோடு சேர்ந்து இயங்கும் அதைப் பெற்றவர்கள் பெரும் சித்தர்களும் பிரம்ம ஞானிகளுமாகத்தான் இருக்கவேண்டும். அந்தத் தெய்வீக ஸ்வாசம் (**அமிர்த சுவாசம்**) தான் **அபரோக்ஷ ஞானம்** பெறுவதற்கு உதவுகிறது. அமிர்த சுவாசம் கிடைக்காமல் சித்பிரகாச நிஷ்டையான பெரும் தவத்தில் அபரோக்ஷ ஞானம் கிடைக்காது. வேத வியாசரும் அவ்வாறு அந்தர்முகம் என்னும் உள் மனத்துக்கு புலன்களை இழுத்துச் சென்று துரியாதீதம் என்ற பெரும் யோகநிலையில் அமிர்த சுவாசம் கண்டு அதன்மூலம் **அபரோக்ஷ ஞானத்தைப்** பெற்றவராவார்.

அவ்வாறு **சித்பிரகாச நிஷ்டை** கைக்கூடி, **அமிர்த சுவாசத்தை** அனுபவித்து, அபரோக்ஷ ஞானம் வழியாகத்தான் பிரம்ம **உபதேசம்** என்ற முறையில் நான்கு வேதங்களையும் உணர்ந்து முறைப்படுத்தி நமக்குத் தந்தருளினார். மேலும், இவ்வாறு பிரம்ம உபதேசம் பெறுவதற்குமுன் நம்மை மயங்க வைக்கும் பேரானந்த அலைகள் மோதும். அங்கு நிலை தடுமாறிப் போகாமல் ஸ்திரமாக இருந்து வெற்றி கண்டால்தான் இறைவனின் போதனைகளை நாம் அறிய முடியும். (நான்கு வேதங்களைப் போல). அந்தப் பேரானந்த அலைகள் ஸ்ரீகணநாதனின் ஆதிக்கத்தில் உள்ளன. எனவேதான், அவர் அருளின்றி "**ஞானபோதம்**" (அல்லது) **பிரம்ம உபதேசம்** கிடைக்காது. எனவே, அத்துணைப் பெருமையும் கருணையும் கொண்ட சித் சக்தி வடிவான ஸ்ரீகணநாதனை நாம் போற்றி வணங்குதல் நமது கடனாகும்.

# ஸ்ரீ கணநாதனும் விபூதியும் (திருநீறு)

சைவத்தின் அழகு நெற்றியில் திருநீறு (வெண்ணீறு (அ) விபுதி) அணிதலாகும். "நீரில்லா நெற்றி பாழ்" என்பது ஔவையின் வாக்கு. எனவே விபூதியின் பெறுமைகளை இங்கு தியானிப்பது சிறந்தது என்பதும் அதனுடன் ஸ்ரீ கணநாதனின் தொடர்பு எவ்விதம் பூரணமாக உள்ளது என்பது பற்றியும் காணலாம்.

உபநிஷத்துளும் வேதங்களும் விபூதியின் பெருமைகளை பலவிதமாக கூறுகின்றன. குறிப்பாக உபநிஷத்துகளில் விவரங்கள் அதிகம் காணப்படுகிறது. விபூதி (திருநீறு) பல பெயர்கள் கொண்டு அழைக்கப்படுகிறது. இதற்கு பல காரணங்களும் உண்டு. அவைகளைக் காண்போம். விபூதிக்கு வேறு பெயர்கள்.

பஸ்மம், திருநீறு, வெண்ணீறு, சாம்பல், பொடி, பஸிதம், க்ஷாரம், ரக்ஷா என்பது இதில் விபூதி, பணிதம், பஸ்மம், க்ஷாரம் மற்றும் ரக்ஷா என்பது பற்றிய சில உண்மைகளை இங்கு காணலாம்.

சர்வேஸ்வரனான ஸ்ரீ பரமேஸ்வரன் பல வடிவங்களில் தத்தவங்களில் இருந்து கொண்டு நமக்கு அருள் செய்கிறார். சர்வேஸ்வரனுக்கு பல ரூபங்கள் உண்டு. அவைகளில் முக்கியமானவை **ருத்ரன், சிவன், மகேசன், பரமேஸ்வரன், சதாசிவம்**, சாம்பசிவம். பரமசிவத்திற்கு (சதாசிவம்) ஐந்து முகங்கள் உண்டு அவை.

1. ஈசானம்,
2. தத்புருடன்,
3. அகோரம்,
4. வாமதேவம்,
5. சத்யோஜாதம்

என்பனவகளாகும். இவைகளிலிருந்து ஐந்து விதமான பசுக்கள் தோன்றின. அவைகளின் சானத்திலிருந்து ஐந்து விதமான தத்துவங்கள் மற்றும் முக்கிய விபூதிகள் தோன்றின. அவைகளை இவ்விதம் கீழே பட்டியலிட்டு காட்டலாம்.

**பரமேஸ்வரரின் "சதாசிவம்" என்ற சொரூபம் – ஐந்து விதமான முக்கிய விபூதிகளின் தோற்றம்**

| **ஈசனின் முகம்** | **தோன்றிய பூதம்** | **அதிலிருந்து தோன்றிய தத்துவம்** | **தத்துவத்திலிருந்து தோன்றிய பசு** | **பசுசாணத்தில் உருவான திருநீறு** | **பயன்கள்** |
|---|---|---|---|---|---|
| **சத்யோஜாதம்** | மண் பிரிதிவி | **நிவிருத்தி** சக்தி | பொன் நிறம் கொண்ட **காமதேனு** (நந்தா என்று அழைக்கப்படும்) | **விபூதி** | ஐஸ்வர்யம் தரும் |
| **வாமதேவம்** | ஜலம் அப்பு | **பிரதிஷ்ட்டா** சக்தி | கருப்பு நிறம் கொண்ட (காராம் பசு) **பத்ரா** என்ற பசு | **பஸிதம்** | பிரகாசிக்க செய்யும் தேஜஸ் அளிப்பது |
| **அகோரம்** | தீ அக்னி | **வித்யா** சக்தி | சிகப்பு நிறம் கொண்ட **சுரபி** என்ற பசு | **பஸ்மம்** | எல்லா பாவங்களையும் போக்கும் |
| **தத்புருடம்** | காற்று வாயு | **சாந்தி** சக்தி | வெண்ணிற நிறம் கொண்ட **சுசலா** என்ற பசு | **க்ஷாரம்** | ஆபத்துக்களை அழிக்கும் |
| **ஈசானம்** | வான் ஆகாயம் | **சாந்த்ய தீதா** சக்தி | பல வர்ணம் கொண்ட **சுமணா** என்ற பசு | **ரக்ஷா** | பூதப் பிரேதம், பிசாசம், பிரம்ம ராக்ஷசம், அபஸ்மார, மற்றும் பிறவிநோய், ஆகிய பயத்திலிருந்து காப்பற்றும் |

ஆக, ஈசனின் ஐந்து திருமுகங்களில் ஐந்து விதமான தத்துவங்களும், சக்திகளும், பசுக்களும் உண்டானதையும் அவற்றின் மூலம் கிடைக்கும் விபூதிகளையும் அதன் பலன்களையும் கண்டோம். இனி ஸ்ரீ கணநாதனுக்கும் திருநீறுக்கும் உள்ள தொடர்பு எப்படி என்பதைக் காணலாம். ஈசனின் ஐந்து திருமுகங்களில் எவரும் காணாத, காணக்கிடைக்காதது மேல்நோக்கு முகமாக உள்ள முகம் "சத்யோஜாதம்" என்ற திருமுகமாகும். இதன் அதிபதியாகவும் அம்சமாகவும் இருப்பவர் **ஸ்ரீகணநாதன்** ஆவார். **பிரிதிவி** என்ற பஞ்ச பூதத்தில் ஒன்றும் (மண்) இந்த சத்யோஜாதம் எனப்படும் திருமுகத்திலிருந்துதான் தோன்றியது. இந்த பிரிதிவி பூதத்தின் அதிபதி ஸ்ரீகணநாதன் ஆவார். மேலும் அஷ்டலக்ஷ்மிகள் குடிகொண்ட இடம் ஸ்ரீகணநாதனின் காலடியில்தான். கணநாதனின் இந்த பிரிதிவி (அ) மண் தத்தவத்திலிருந்து தான் ஸ்ரீமகா லக்ஷ்மி தோன்றினாள். அவள் ஸ்ரீகணநாதனின் தங்கை (சகோதரி) ஆவாள்.

எனவே "விபூதி" நாயகனான ஸ்ரீகணநாதனைத் தொழுதால் வாழ்வில் எல்லா மங்களங்களும் உண்டாகும் என்பது தெளிவு. மேலும் திருமூலர் தன் திருமந்திரம்" என்ற யோக நூலில் (சைவ சித்தாந்த தத்தவம்) "ஓம்" காரத்திலிருந்து ஐந்து பூதங்களும் உதித்தன என்று கூறுகிறார். எனவே ஸ்ரீ பரமேஸ்வரனே ஓங்காரம் என்றும் அவரிடமிருந்து தான் ஐந்து பூதங்களும், பிரபஞ்சமும் தோன்றின எனவும் புலனாகிறது. அந்த பரமேஸ்வரனின் விசேஷமான, மேல்நோக்கிய முகமான "சத்யோஜாதத்தின் மூர்த்தியும் அதிபதியும் விபூதி நாயகனுமான தேவர்கள் வணங்கும் ஸ்ரீகணநாதனைப் போற்றிப் பணிந்து அவரது பேரருளைப் பெறுவோமாக.

# ஸ்ரீகணநாதனும் பிரிதிவி (மண்) தத்துவமும்

## ஸ்ரீ கணேசர்

இவரே சர்வேஸ்வரன். இவர் ஸ்ரீ நாராயணனே ஆகும் என்றும் கூறலாம். பஞ்ச பூதங்களான மண், நீர், தீ, காற்று மற்றும் விண் என்பதில் மண் (அல்லது) **பிரிதிவி** என்ற பூதத்தின் அதிபதி இவர். மஞ்சளால் பிள்ளையார் பிடித்து சுப. காரியங்களை துடங்குவதன் பொருள் இவர் மண் என்ற தத்துவத்தின் நாயகன் (அல்லது) அதிபதி என்ற உண்மையை குறிக்கவேத்தான். இவரது பல வடிவங்களை இப்போது காணலாம்.

1. இவர் மூலாதாரம் என்ற நமது முதல் ஆதார சக்கரத்தில் இருப்பவர்.
2. இவர் பிரணவ ஸ்வரூபி.
3. பிரணவத்தின் அதிபதி இவரே
4. இவரே மண் – என்ற பூதத்தின் அதிபதி
5. சோதிடத்தில் பிரகஸ்பதி என்ற குருபகவான் ஸ்ரீ கணநாதனின் அம்சம். நமது வலது காதுக்கு அதிதேவதை அவரே. மனிதனுக்கு வலது காது புனிதமானது. ஓம்காரம் மற்றும் சங்க நாதம் அதில்தான் கேட்கும் ஞானிகளுக்கு.
6. யோகத்தில் குண்டலினிச்சக்தி நமக்குள் உறங்கிக் கொண்டிருப்பதாக சொல்லப்படுகிறது. இவரே அந்த குண்டலினி சக்தியாகும்.
7. ஜோதிடத்தில் "கேது" மோட்சக்காரகன் (அல்லது) மோட்சம் அளிக்கும் கிரகமாக சொல்லப்படுகிறது. அந்த கேது குண்டலினி மாதாவின் புதல்வன் ஆகும். அந்த கேதுவின் அதிதேவதைதான் இந்த ஸ்ரீ கணநாதன்.
8. நமது தேகத்தில் ஸ்ரீ கணநாதன் பல ஸ்தானங்களுக்கு அதிதேவதையாக இருக்கிறார். உதாரணமாக, மூலாதாரம், பிரம்ம ரந்திரம் (செவிக்கும், கண்ணுக்கும் இடையே முகத்தினுள்ளே) சகஸ்ராரம் என்பவைகளாகும்.
9. நமது தேகத்தில் "சுக்கிலம்" (அல்லது) வீரியம் எனப்படும் ஜீவசக்திக்கு அதிதேவதை இவரே. "மண்" என்ற பிரிதிவி தத்துவத்திலிருந்துதான் இரத்தம் நமது உடலில் உற்பத்தி ஆகிறது.

10. புலடைக்கத்தின் நாயகன் இந்த ஸ்ரீ கணநாதனே ஆவார்.

11. யோகத்தில் வேதங்கள் கூறும் ஜீவ – பிரம்ம ஐக்கியம் எனப்படும் ஜீவாத்ம – பரமாத்மா இணைப்பு, ஒன்றுபட்ட நிலையான பெரும் பிரம்ம நிஷ்டையில் ஞானிகளையும் மயங்க வைக்கும் "**பிரணவ ஒலி**" ஆனந்த மயம் எனப்படும் பெரும் பிரம்மானந்த பேரலைகளாக செயல்பட்டு மயக்கி ஞானிகள் தங்களுக்குள் இறைவன் தரும் ஞான போதனைகளை கேட்க முடியாமல் தடுக்கும். இந்த ஆனந்த பேரலைகளில் சிக்காமல் தவத்தில் உறுதியாக இருந்தால்தான் பிரம்ம உபதேசம், பிரம்ம ஞானம், ஞான உபதேசம் என்பனவகளை ஞானிகள் நிஷ்டையில் உணர முடியும். இல்லையென்றால், எவரும் சமாதியில்) ஆனந்த நிலையில் மயங்கிய நிலையில்தான் இருக்க நேரிடும். அவ்விதம் ஞானிகளையும் பிரம்மானந்த பேரலைகளாக மாறி மயக்க வைக்கும் பிரணவ ஒலிக்கு அதி தேவதை இந்த ஸ்ரீ கணநாதன்தான். இவரது அருளின்றி ஞான உபதேசம் கிடைக்காது. ஆகவேதான் தேவர்களும் இவரை மிகவும் பிரியத்துடனும் பக்தியுடனும் வணங்குகின்றனர்.

"**மண்**" என்ற "**பிரிதிவி**" தத்துவத்தின் அதிபதி இவர் என்று பார்த்தோம். அதன் சில விபரங்கள் இங்கு நாம் காண்போம்.

"மண்" என்பது ஸ்தம்பனம் – அதாவது அடிப்படை. காரிய காரண வஸ்த்துக்கள் கொண்டது. தபோ நிலையது. வீணாகானம், வேணுகானம் போன்ற அம்சங்களைக் கொண்டது பிரிதிவி தத்துவம். இதன் அதிபதி ஸ்ரீகணநாதன் ஆவார். சர்வேஸ்வரன், ஸ்ரீபரமேஸ்வரரின் ஐந்து முகங்களிலில் ஒன்றான "**சத்யோஜாதம்**" என்பதிலிருந்துதான் "பிரிதிவி" (அல்லது) மண் தத்துவம் தோன்றியது. இதன் அதிதேவதைதான் ஸ்ரீ மகா கணநாதனே ஆவார்.

இதில் **சங்க நாதமும்** அடங்கும். ஸ்ரீதியாகய்யர் பாடிய "**சோபில்லு**" என்ற பாட்டு இதைக் குறிக்கிறது. இதில் **வேணுகானம்** என்ற அம்சம் கேட்கப்படுவது கீழ் நிலையில். **சங்க நாதம்** கேட்கப்படுவது மேல் நிலையில். அதாவது, (வலது செவியில்) **விசுத்தி** சக்கரம் என்ற தொண்டைக் குழியின் அருகில் அண்ணாக்குக்குமேலே, இது கேட்கப்படுகின்றது.

**மூலாதாரம்** என்பது நாபிக்கு அடியிலிருக்கும் பகுதி தான் என்பது தவறு. மூலாதாரம் இரண்டு வகைப்படும். ஒன்று மேல் மூலம், மற்றொன்று கீழ் மூலம். மேல் கூறியபடி, வேணுகானம் கேட்கும் நிலையான கீழ் மூலாதாரமும், சங்க நாதம் கேட்கும் நிலையான மேல் மூலாதாரமான பிரம்ம ரந்திரமும் சேர்ந்துதான் மூலாதாரம் என்று அறிந்து கொள்ளவேண்டும். **மண்** என்ற தத்துவத்தில் இப்படி தெய்வ கானங்கள் கொண்ட ஸ்தானங்கள் உள்ளன. அந்த மண்ணுக்கு அதிபதி ஸ்ரீ கணநாதன் ஆவார்.

"**மண்**" என்ற பிரிதிவி தத்துவத்தின் வழியே தான் தேவ மானிட அபேதம் (அல்லது) ஜீவ–பிரம்ம ஐக்கியம் (அல்லது) நானே பிரம்மம் என்ற உணர்வு (அத்வைத ஞானம்) ஏற்படுகிறது. எனவே முக்தி அடைந்தவர்களின் உணர்வே "மண்" என்ற பிரிதிவியின் தத்துவமே.

**மண்** உடலின் விரோதி. அதாவது, தனது உடலை மறந்த நிலையில் தான் அது நமக்கு ஆத்ம தரிசனத்திற்கு உதவுகிறது. எனவே **மண்** என்ற (பிரிதிவி) தத்துவத்தைக் கொண்டுதான் ஜீவன் கடைத்தேற வேண்டும். மண் என்பது பரமாத்மாவின் கையாடல். மற்ற நான்கு பூதங்கள் (அல்லது) தத்துவங்களான நீர், நெருப்பு, காற்று மற்றும் ஆகாயம் என்பவை "மண்" என்ற தத்துவத்தினுள் அடக்கம். இந்த பிரிதிவி தத்துவம் இல்லையெனில் வான் இல்லை. நமது பூமி ஸ்பரிசம் தான் ஜலம் என்ற தத்தவம். 'மண்' என்பது ஜலத்தின் அந்தர்கதம்.

நமது தேகத்தில் பஞ்சபூதங்கள் தங்களுக்கு என்று சில பகுதிகளை தனது ஆட்சிக்குள் வைத்துள்ளன. அதாவது

**ஆகாயம்** = கண்டம்
**வாயு** = இருதயம்,
**அக்னி** = நாபி,
**ஜலம்** = கண்டம் முதல் முகம் வரை – அதன் இருப்பிடம் நாக்கு ஆகும்.
**மண்** = மூலாதாரம் முதல் அந்தம் வரை.
(திருநோக்கு = அந்தம்)

ஸ்ரீமகா லக்ஷ்மி ஸ்ரீகணநாதனின் தங்கை ஆவாள். மற்றும் அவருடன் இருக்கும் காரணம், ஸ்ரீமகா லக்ஷ்மி தோன்றியது பிரிதிவி என்ற (மண்) தத்துவத்திலிருந்துதான். அவள் வாழ்ந்ததும், மறைந்ததும், மண் தத்துவத்தில்

தான். எனவேதான் ஸ்ரீகணநாதன் வாக்கு அவள் வாக்காக செயல்படுகிறது. அவள் வரம் தந்தால் அது ஸ்ரீகணநாதன் தந்ததுபோல் ஆகும்.

நமது தேகத்தில் அண்ணாக்கு என்ற சிறு நாக்கு "மண்" என்ற பிரிதிவி தத்துவமும் "ஜலம்" என்ற தத்துவமும் கொண்டதாகும். யோகத்தில் ரிஷிகள் கேட்கும் "**சங்க நாதம்**" மண் தத்துவத்தையும் "அப்பு' எனப்படும். ஜல தத்தவத்தையும் இணைக்கும். இதுவே யோக முடிவாகும். பெரும் தவத்தில் மூழ்கியிருக்கும் பிரம்ம ரிஷிகளுக்கு மட்டுமே சங்க நாதம் கேட்கும். மானிடர்களுக்கு அல்ல. அந்த "மண்" (அல்லது) பிரிதிவி பூதத்திற்கு தலைவன் தான் ஸ்ரீ கணநாதன்.

"மண்" (அல்லது) பிரிதிவி தத்துவம் ஸ்ரீ கணநாதனின் உடலாகவும் செயல்படுகிறது. மேலும் இந்த பிரிதிவி தத்துவம் நமது மூலாதாரம் முதல் பிரம்ம ரந்திரம் எனப்படும் (விசுத்தியிலிருந்து பிரியும் ஒரு பாதை) ஒரு பகுதி வரை பரவியிருக்கிறது. மண்ணும், ஆகாயமும் கலந்தால் அப்பு (அல்லது) ஜலம் உண்டாகும்.

மண் என்ற பிரிதிவி பிரம்மத்தின் கூறு.
ஜலம் விஷ்ணுவின் கூறு.
ஆகாயம் சதாசிவனாரின் கூறு.

இவை மூன்றும் சேர்ந்தது உலக வாழ்க்கை. மண், பிரவர்த்தி (புலன் வழி மனம்) என்றும் செயலைச் செய்யும். ஜலம் என்ற தத்துவம் அதை கொள்ளும். ஆகாயம் என்ற தத்துவம் அதை நடத்தும். இப்படி மண் தத்துவம் மற்ற பூதத்துடன் நெருங்கி செயல்படுகிறது. இந்த மண் தத்துவம் ஸ்ரீ கணநாதன் ஆட்சியாகும்.

முக்தி என்பது என்ன? மண் ஜகத்திற்கு மூல காரணம். ஆனால் மண்ணைக்கொண்டு தான் ஜீவன் விடுதலைப் பெற வேண்டும். எனவே. மோட்சம் - முக்தி என்பதை நன்கு உணர வேண்டும். **மோட்சம்** என்பது என்னவென்றால் மண் என்ற பிரிதிவி மண்ணுடனேயே சேரும் காலம்தான். அப்போது ஜீவன் தற்போதம் இழந்திருக்கும். **ஞானப்பால்** உண்ணுவது அங்குதான். பிரம்ம நிஷ்டாபரம் என்ற பெரும் தவநிலையை அடைவதுதான், அவ்விதம் மண் மண்ணுடன் சேர்வது. அங்குதான் **ஞானாம்ருதம்** கிடைக்கும். அதுவே தான் தன்மயமாகிவிட்ட தவநிலையாகும். ஞானாம்ருதம் என்பது

ஞானப்பால் உண்பது. அதுவே தத்துவ போதம் ஆகும். சித்தர்களுக்கும் யோகிகளுக்கும் கூட கிட்டாத பேரருள் குடிகொண்ட நிலையது. ஈசனின் பெரும் அருள் பிரசாதத்தால் ஏற்படும் ஞான போதனையாகும். **மெய்கண்டார் (சிவஞானபோதம்) அமரகவி சித்தேஸ்வரர், திருஞான சம்பந்தர்** போன்றவர்களுக்கு ஈஸ்வரன் அருளிய பெரும் மகா பாக்கியமாகும். அவ்விதம் ஞானப்பால் குடிப்பது (அல்லது) ஈஸ்வரரின் பூர்ண அருளால் ஞான உபதேசம் பெறுவது எப்போது? என்று கேட்டால் யோகத்தில் யோகியின் உடலில் மண் தத்துவம் வெளியில் மண் தத்துவத்தோடு இணைவதால் ஏற்படும். அதற்கு மேற்கூறியபடி தெய்வ கடாட்சம் ஏற்பட்டு யோகியின் உடலிலுள்ள நெருப்பு என்ற தத்தவமும் வாயு என்ற தத்துவமும் நீங்கிய நிலைப் பெறவேண்டும். அப்போதுதான் மண் என்ற தத்துவத்தில் எல்லாம் ஒடுக்கும். அங்கு அப்பு சித்தி – பிரிதிவி சித்தி என்று இரண்டு நிலைகளும் கடந்த நிலையில் இறைவன் **"ஞான உபதேசம்"** கிடைக்கும். அதுவே **"தோடுடைய செவியாகும்."** திருஞான சம்பந்தர் அதைப் பெற்றார். எனவே இப்படிப்பட்ட மகத்துவமிக்க மண் என்ற தத்துவத்தின் அதிதேவதையான ஸ்ரீ கணநாதனையே வணங்குவோம்.

12. ஜோதிட நூல்களில் குறிப்பிடப்படும் குரு (அல்லது) பிரகஸ்பதி எனப்படும் தேவகுரு ஸ்ரீகணநாதனின் அம்சமாகும். யோகிகள் ஜாதகத்தில் இந்த தேவகுரு லகனத்தில் அமர்ந்தோ (அதைப்பார்த்தோ) இருந்தால்தான் முக்திக்கு வழி வகுக்கும். எப்படியென்றால் நாம் வேறு, இறைவன் வேறு, என்று ஒரு எண்ணம் மறைந்து நானே பிரம்மம் இறைவன் என்று உணர்வதுதான் முக்தி. எனவே, மகான்கள் பிரம்ம நிஷ்டையில் உணரும் இந்த உணர்வுக்கு அதிபதி பிரகஸ்பதி என்றழைக்கப்படும் குரு பகவான் ஆவார். அவரே ஸ்ரீ கணநாதனின் அம்சமாக இருப்பதால், ஜாதகத்தில் லக்னத்திலுள்ள தேவகுரு **"மனோலயம்"** என்ற பெரும் யோக சித்தியை அளிக்கிறான். அந்த நிலையின் மூலம் தான் "யோகி" தான் என்ற எண்ணமற்ற நிலைக்கு செல்கிறான்.

அவ்விதம் தேவ குருவால் கிடைக்கும் **"மனோலயம்"** என்ற தவநிலைக்கு அதிதேவதை ஸ்ரீகணநாதன் ஆகும். எனவே தான் அவர் அருளின்றி தன்னை மறந்திருக்கும் பிரம்ம **நிஷ்டை** யோகிகளுக்கு சாத்தியமில்லை. மண் மண்ணோடு கலக்கும் தத்துவம் இங்குதான் நடைபெறுகிறது.

நான்கு ஆகாயங்களில் "பரமாகாசம்" என்ற நான்காவது பெரும் தவநிலை மண் தத்துவத்தைச் சார்ந்தது. அங்குதான் ஞான உபதேசம் கிடைக்கும். நாசியில் "மண்" தத்துவம் உள்ளது. சப்தம் மண்ணின் கூறு. செவியில் ஆகாய தத்துவம் உள்ளது. இரண்டின் இணைப்பே தேவ–மானிட அபேதம் என்னும் "தன்மயம்" ஆகி விட்ட பெரும் தவநிலையாகும். எனவே ஸ்ரீகணநாதனின் அம்சமான மண் தத்துவம் சிறப்பானது.

ஆகவே மண் தத்துவத்தின் அதிபதியான ஸ்ரீ கணநாதனை நாம் அனுதினம் தியானிக்க வேண்டியது மிக அவசியம். மேலும் மேற்கூறிய காரணங்களால் தான் அவரை முழுமுதற் கடவுள் என அழைக்கிறோம்.

13. புலனடக்கம் அல்லது இந்திரியங்களை அடக்கி ஒடுக்குதல் ஒரு பெரும் சாதனையாகும். அதற்கு அதிதேவதை ஸ்ரீகணநாதன் ஆவார். புலன்களின் செயல்பாடுகள் நமது சுவாசத்தைப் பொறுத்தே அமைந்துள்ளது. எண்ணமும் மூச்சுக்காற்றும் ஒன்றுக்கொன்று சம்பந்தம் உடையது. எண்ணம் இல்லை மூச்சு இல்லை – மூச்சு இல்லை எண்ணம் இல்லை. ஆகவே புலனடக்கமும் நமது மூச்சுக்காற்றும் மிக்க தொடர்புடையது. மேலும் நமது மூச்சுக் காற்றில் வலது நாசி வழியாக வரும் காற்று சூரிய நாடி செயல் ஆகும். இடது நாசி வழியாக வரும் காற்று சந்திர நாடி எனப்படும். இந்த இரண்டு சுவாச கதிகளும் அதாவது சூரிய கதி, சந்திர கதி என்பவை, இரண்டு வினாடிக்கு ஒரு முறை, மாறி மாறி, செயல்படும். இந்த சூரிய – சந்திர கதியில் நடக்கும் மூச்சுக் காற்றுக்கு அதிபதியே இந்த ஸ்ரீகணநாதன்தான். இவைகள் ஒடுங்கி போய் விட்ட நிலையில் உயிர் மூச்சானது "திருமூச்சு" என்று பெயர். யோகிகளுக்கு மட்டுமே இது சாத்தியம். இந்த திருமூச்சுக்கு அதிபதியும் ஸ்ரீ கணநாதன் தான். இந்த நிலைக்கு அதிபதியான கணேசனை – தந்திமுகன் என அழைக்கப்படுவார். தந்திமுகன் வேறுஇ மூச்சு வேறு அல்ல.

14. "ஓம்" என்பது பிரணவம். இதில் அ, உ, ம என்ற மூன்று உயிர் அட்சரங்கள் உள்ளன. பிரணவம் என்றதின் அதிதேவதை ஸ்ரீ மூலகணபதி ஆவார். பிரணவம் தொடர்பான பிரணவம் காட்டும் ஸ்ரீ கணபதி தத்துவங்களை விளக்குவது இங்கு பொருத்தமாக இருக்கும்.

## ஸ்ரீகணநாதன், ஸ்ரீஷண்முகன், ஸ்ரீமகாலக்ஷ்மி

(சில தத்துவ விளக்கங்கள்)

இந்த சிறு நூலை எனது குருநாதர் ஸ்ரீ அமரகவி சித்தேஸ் வரருக்கும், விபூதி அடிகளாருக்கும், எங்களது உபாசனை தெய்வமான "**ஸ்ரீ மூலகணபதிக்கும்**" காணிக்கை ஆக்குகின்றேன். கணேசனின் பெருமைகளை முழுவதும் சொல்ல பல புத்தகமே வேண்டும். ஆயிரக்கணக்கான பக்கங்களைக் கொள்ளும். எனினும் அவரது சிறப்புக்களையும் அவரது தம்பியான ஷண்முகனின் தத்துவத்தையும் விளக்கி அவ்விருவர்களையும் வழிபட்டு வரம்பெற்று விளங்கிய சில தவத்தில் சிறந்த ஞானிகளை இங்கு காண்போம்.

ஸ்ரீகணநாதன் சர்வேஸ்வரன் ஆவான். அவரது தம்பி ஷண்முகன் ஆவான். மகா லக்ஷ்மி கணேசனின் தங்கை ஆவாள்.

**ஸ்ரீமகா லக்ஷ்மி**

இவள் குடி கொண்டிருப்பது நமது உடலில் உள்ள ஆறு ஆதார சக்கரங்களில் முதல் சக்கரமான "**மூலாதாரம்**" என்பதன் அடியில்தான். இந்த மூலாதாரத்தின் அதிபதியும், அங்கு குடி கொண்டிருக்கும் தெய்வமும்தான் ஸ்ரீகணேசன். அஷ்ட லக்ஷ்மிகள் நமது உடலில் குடி கொண்டிருக்கும் இடம் மூலாதாரத்தின் அடியில்தான். ஸ்ரீகணேசரின் பாதத்தை சுற்றித்தான் அவர்கள் வலம் வந்து கொண்டிருக்கின்றனர். யோகிகளுக்கும், மகான்களுக்கும், அஷ்ட மகா சித்திகளைத்தருவது இந்த ஸ்ரீமகா லஷ்மிதான். லக்ஷ்மி என்றால் '**தனம்**' மட்டும்தான் என்று நினைப்பது தவறு. ஸ்ரீமகா லக்ஷ்மிக்கு "**ஸ்ரீ ரத்னம்**" என்ற பெயர் உண்டு. அணிமாதி சித்திகளுக்கு அவளே அதிபதி ஆவாள். அஷ்டமகா சித்திகள் என்ற அணிமா, மகிமா, லகிமா, கரிமா, ஆகாமியம், ஈசத்வம், வசித்வம் என்பன. இதில் கடைசி இரண்டு பெரும் சித்திகளாகும். **ஔவையார்** இந்த சித்திகளை கணபதி உபாசனையில் பெற்றார்.

**ஈசத்வம்** என்ற சித்தி பெற்ற ஒருவனுக்கு சகல உயிர்களும், மனிதர்களும், தேவர்களும் அடிமையாவார்கள். மேலும் இதற்கு அடுத்த மேல் நிலையான **வசித்துவம்** என்ற சித்திப்பெற்றவனுக்கு மேற்கூரிய எல்லா உயிர்களும், தேவர்களும் மற்றும் தேவதைகளும் அடங்கி நிற்பதோடு

சொல்வதைச் செய்யும். ஆனால் இவ்விரண்டு சித்திகளும் ஈசனுக்கே உரித்தானது. "**கைத்தல நிறைகனி**" என்று இந்த இரண்டு சித்திகள் அழைக்கப்படும். **ஈசத்வம்** பெற்றவன் இறைவனுக்கு சமமானவன் ஆகின்றான். இதனை வரமாக சித்தியாக பெறவேண்டும் என்றால் எத்தனை தவம் இயற்றி இருக்கவேண்டும் என்பதை நீங்கள் உணரலாம், இந்த அஷ்டமகா சித்திகளும் பெற்றவன் "தான் சிரஞ்சீவி"யாக இருக்க முடியும், இராமாயாணத்தில் ஆஞ்சநேயர் இந்த சித்திகளைப் பெற்று இருந்ததாக அறிகிறோம். ஆக, ஈசனுக்கே சொந்தமான **ஈசத்வம், வசித்வம்** என்ற இரு பெரும் சித்திகளை உச்சமாகக் கொண்ட அஷ்டமாகா சித்திகளை தரும் ஸ்ரீமகா லக்ஷ்மியை யாவரும் வணங்குதல் அவசியம். மந்திரங்களில் "ஸ்ரீம்" என்னும் பீஜம் ஸ்ரீமகா லக்ஷ்மியைக் குறிக்கும் ஸ்ரீமகா லக்ஷ்மியின் சொல் ஸ்ரீ கணநாதனின் சொல்லாக விளங்குகிறது. அதாவது ஸ்ரீமகா லக்ஷ்மி சொல்லிய வார்த்தை ஸ்ரீகணநாதன் சொன்னதாக அர்த்தம். இருவருக்கும் அத்துணை ஒற்றுமை உண்டு. மக்கள் இந்த உண்மையை உணர வேண்டும்,

காயத்திரி மகா மந்திரம் பொதுவாக எல்லா மந்திரங்களுக்கும் தாயாக இருப்பதாகும். ஒவ்வொரு தேவதைக்கும் ஒரு காயத்திரி மந்திரம் உண்டு. ஸ்ரீமகா லக்ஷ்மிக்கும் ஒரு காயத்திரி உண்டு. அதுவே

*"ஓம் மகா தேவ்யை ச வித்மஹே விஷ்ணு பத்ந்னைச*
*தீமஹி தந்நோ லக்ஷ்மி ப்ரசோதயாத்"*
என்பதாகும்.

தாமரை

தாமரைப்பூவை கையில் ஏந்தியவளாக காட்சிதரும் இவளுக்கும் பத்மா, காமாக்ஷி, பத்மினி, கமலா, விமலா, வசுந்தரா, ஹேமாமாலினி மகாதேவி, ஹரிணி, சுபா, ரமா, ஜெயா, மங்களா, புவனேஸ்வரி, தீப்தா என்று பல பெயர்கள் உண்டு. இவளது கையில் உள்ள தாமரை இவள் தரும் சித்திகளைக் குறிக்கும்.

ஸ்ரீ சங்கரர் இயற்றிய சௌந்தர்ய லஹரியின் தாய் அவள்தான். அவளை காண்பது மிகக் கடினம். தேவர்களும் அவளைக் கண்டதில்லை. அவளது நிறம் கருப்பு. உருவம் மிக சௌந்தர்மானதும், அழகு மிக்கதுமாகும். ஸ்ரீ கணநாதனின் தங்கையான ஸ்ரீமகா லக்ஷ்மியை "**ஸ்ரீ சூக்தம்**" என்னும் ஸ்தோத்திரத்தின் மூலம் வழிபடுவது மிகச் சிறப்பாகும்.

**ஸ்ரீ சண்முகம்**

ஸ்ரீ கணேசனின் தம்பி தான் இவர். கலியில் அவதரித்த இந்த தெய்வத்தைப் பற்றி முன் யுகங்களில் யாரும் அறிந்திருக்க நியாயமில்லை. உலகில் நடக்கும் எல்லா ஆச்சரியங்களும் இவரது லீலா விபூதியாகும். இவரது சக்தி மகத்தானது. இவரைத் தமிழ்க்கடவுள் என்று கூறுவது வழக்கம். இவர் பல யோக தத்துவங்களின் அதிதேவதையாகவும் காரண கர்த்தாவாகவும் விளங்குகிறார். அதன் விபரத்தை நாம் இனிக் காணலாம்.

ஸ்ரீசண்முகம் ஆறுமுகங்கள் கொண்டவர். பன்னிரண்டு கரங்கள் கொண்டவர். வேலும், மயிலும், நாகமும் இவரது துணை. இவருக்கு வள்ளி தேவயானை என்று இரண்டு துணைவியர் உண்டு. இந்திரனுக்கு புதல்வியாக அவதரித்து இவரை மணந்தாள் தேவயானை. வேடவ குலத்தில் வள்ளி பிறந்து இவரை மணர்ந்தாள். இவர்கள் இருவரும் இச்சாசக்தி கிரியாசக்தி என்ற இரு சக்திகளின் அம்சங்களாகும். ஸ்ரீசண்முகம் ஸ்ரீபரமேஸ்வரரின் யோக சக்தியின் வடிவமாகும்.

ஷண்முகனது ஆறு முகங்கள் நமது தேகத்தில் உள்ள ஆறு ஆதார சக்கரங்களைக் குறிக்கிறது. "ஷட்சக்கர வீதி" என்று யோக நூல்கள் விளக்கும் ஆதார சக்கர ஸ்தான நிலைகளுக்கு விளக்கமாக ஷண்முகன் விளங்குகிறான். சுட்டெரிக்கும் தீயின் குணம் அவனுக்கு. ஜோதிட சாத்திரத்தில் "செவ்வாய்" என்ற கிரகம் ஷண்முகனைக் குறிக்கிறது.

மூலாதாரம், ஸ்வாதிஸ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞா என்ற ஆறு சக்கரங்களும் கொண்ட ஸ்தானங்கள் அவனுடைய எல்லையாகும். திரோதானம் (அல்லது) மறைப்பு எனக்கூறப்படும் மாயையிலிருந்து கிடைக்கும் விடுதலை அவனது கருணையாகும். ஷண்முகன் அருள் இல்லையென்றால் முக்தி என்பது கிடையாது. ஷண்முகன் குடி கொண்டிருக்குமிடம் நமது தேகத்தில் "நாபி"யில் தான். நாபிதான் ஒரு அக்னி குண்டம். "எமன்" எனப்படும் காலன் குடியிருக்கும் இடம் நமது "நாபி" தான். நமது நாபி நமது உயிரின் நிலை. நாபி இருப்பதால் நமது உடலில் உயிர் தங்குகிறது. ஷண்முகம் நாபியின் எதிர். நாபிக்கு அடியில் இருப்பது மூலாதாரம் என்னும் முதற் சக்கரம். அங்கு தான் ஸ்ரீகணேசன் இருக்கிறார். அந்த கணபதியின் தம்பியான இந்த ஷண்முகன்தான் நமது தேகத்தில் உள்ள ரத்தத்தின் அதிதேவதையும், ரத்த ஓட்டத்தையும், அழுத்தத்தையும் காக்கும்

கடவுளாக இருக்கிறார். கணேசன் சர்வேஸ்வரன் என்றால் அவரது தம்பி ஷண்முகன் "அருள் நந்தி" தேவர் ஆகும். ஷண்முகனின் செயலால் தான் நமது சித்தம் விருத்தியடைந்து மனம் புத்தி, எண்ணம் என்ற நிகழ்ச்சிகள் நமக்குள் நடந்து கொண்டிருக்கின்றன.

யோக சாத்திரம் சித்தத்தை அடக்கும் முறையை வலியுருத்துகின்றன. "சித்த விருத்தி" என்பது புலன்களின் செயலால் மனம், எண்ணம் என்று எப்போதும் சிற்றறிவுக்கு வேலை கொடுத்துக்கொண்டே இருப்பதுதான். இதைத்தான் நாம் யோக பயிற்சிகொண்டு அடக்க வேண்டும். அப்படி அடக்கப்பட்ட நிலையைத்தான் "**சித்த விருத்தி நிரோதம்**" என்று யோக நூல்கள் கூறுகின்றன. தமிழில் சித்த விருத்தி நிரோதத்தை "**புலனடக்கம்**" என்று கூறலாம். இதுதான் யோகத்தில் வெற்றி கண்ட பல நிலைகளில் ஒன்றாகும். இதற்கு அதிதேவதை ஸ்ரீ கணநாதன்தான்.

எனவே சித்த விருத்தி ஷண்முகனாலும் சித்த விருத்தி அடங்கிய நிலை (புலனடக்கம்) ஸ்ரீகணநாதனாலும் ஏற்படும் நிகழ்ச்சிகளாகும். ஷண்முகனின் செயலால் தான் பிராணன் மூலாதாரம் முதல் நமது ஆக்ஞா வரை சஞ்சாரம் செய்கிறது. ஷட்சக்கரம் என்ற ஆறு சக்கரங்களின் செயல் இந்த ஸ்ரீஷண்முகனின் ஆட்டமாகும். இந்த ஆட்டத்தினால்தான் பஞ்சகிருத்தியம் (அல்லது) ஐந்தொழில்கள் என்ற புலன்களின் செயல்கள் நடைபெறுகின்றன. சரித்திரத்தில் ஸ்ரீ ஷண்முகனின் அருள் பெற்று பல அரிய காரியங்களை சாதித்த முனிவர்கள் மற்றும் ஞானிகளுக்குள் மிகச் சிறப்பானவர்கள்.

**1. ஔவையார் 2. நக்கீரன் 3. அருணகிரிநாதர் 4. குமரகுருபரர் 5. பாம்பன் ஸ்வாமிகள்** (சமீபத்தில்) 6. **குறுமுனி** என்றழைக்கப்படும் (18 சித்தர்களுக்குள் தலைசிறந்தவரும் பரமேஸ்வரருக்கு இணையான சக்தியும் அம்சமும் கொண்ட) **அகத்தியர்** போன்றவர்கள். இவர்களில் **ஔவையார், நக்கீரன், குறுமுனி** போன்றவர்கள் ஸ்ரீ கணநாதனையும் ஸ்ரீஷண்முகனையும் உபாசித்து இருவரது கருணைக்கும் பாத்திரமாகி பல சாதனைகள் புரிந்துள்ளனர். அதாவது,

**ஔவையார்:**

இவர் ஷண்முகனின் பூரண அருளைப் பெற்றவர். "ஞானபழம்" கிடைக்காத காரணத்தால் கயிலாசத்திலிருந்து பிரிந்து தனித்து சென்று

வாழ்ந்த ஸ்ரீ ஷண்முகனை சமாதானப்படுத்தி மீண்டும் கயிலைக்கு சென்று அம்மையப்பனோடு இணைந்திருக்கச் செய்தார். மேலும் முருகனின் மேல் பல பாடல்கள் செய்துள்ளார். அது மட்டுமின்றி ஸ்ரீ கணநாதனின் பூரண அருள் பெற்று கணநாதனால் அவரது தும்பிக்கையில் அமர்ந்து கயிலைச் சென்றவளாகும். மேலும் ஸ்ரீ கணநாதனின் விஸ்வரூப தரிசனம் பெற்று (திருக்கோவிலூரில் உள்ள 8 வீரட்டானத்தில் ஒன்றான சிவன் கோவிலில்) **விநாயகர் அகவல்** என்ற ஸ்தோத்திர பாடலையும், **ஒளவைக்குறள்** போன்ற பல யோக நூல்களையும் இயற்றினார்.

## அகத்தியர்

குறுமுனி (அல்லது) அகத்தியரும் ஸ்ரீகணநாதன் ஸ்ரீஷண்முகன் ஆகியோரால் பிரம்ம உபதேசமாக பல ஞான போதங்களைப் பெற்று பல நூல்களை இயற்றியுள்ளார். **சித்த வைத்தியம்** போன்ற மருத்துவ நூல்களை செய்தார்.

## நக்கீரர்

நக்கீரனும் ஸ்ரீஷண்முகனின் பூரண அருள்பெற்று "திருப்பாணாற்றுப் படை" என்ற நூலினை இயற்றினார். முதலடியை ஸ்ரீஷண்முகர் அவருக்கு எடுத்துத் தந்தார். மேலும் ஸ்ரீ கணநாதனின் பேரருளைப் பெற்று "**தருமி**" என்ற ஏழை புலவனுக்காக **ஸ்ரீருத்ரனே** நேரில் மனித வடிவில் வந்து போட்டியிடும்போது "*நெற்றிக் கண் திறப்பினும் குற்றம் குற்றமே*" என்று வாதாடி ஸ்ரீருத்ரனை வெற்றி கொண்டவர் இவர். ஸ்ரீகணநாதனைப் பற்றி ஒளவையாரைப்போல் இவரும் ஒரு அகவல் பாடி இருக்கிரர்.



## பிரணவம் காட்டும் ஸ்ரீ மூலகணபதி

சில தத்தவங்களை விளக்குவது இங்கு பொருத்தமாக இருக்கும்

| | |
|---|---|
| 1. பிரணவம் | ஓம் (அ, உ, ம் என்பவை அடங்கியது.) அ=படைத்தல், உ=காத்தல், ம=அழித்தல் |
| 2. பிரணவ மூலம் | சிறுநாக்கு (அண்ணாக்கு) இதன் தத்துவம்தான் ஸ்ரீரங்கம் கோவில் உணர்த்துகிறது. அண்ணாக்கு =அண்+நாக்கு =அண் – தெய்வம். தொங்கும் = நாக்கு. தொங்குவது – வான் = மதி என்ற இரண்டு மண்டலஙக்ளிலிருந்து தொங்குகிறது என்று பொருள். |
| 3. பிரணவாகாசம் | மொத்தம் நான்கு ஆகாசங்கள் உள்ளன. 1. பூதாகாசம் 2. பிரணவாகசாசம் 3. சித்தாகாசம் 4. பரமாகாசம். யோகத்தில் நாம் பூதாகாசத்தைத் தாண்டிச் சென்று விட்டாலே மேல் நிலைகளுக்கு சுலபமாகச் செல்லாம். மேலே உள்ள கடைசி இரண்டு ஆகாசங்கள் (சிதாகாசம், பரமாகாசம்) ஸ்ரீகணநாதனின் ஆதிக்கத்தில் உள்ளன. |
| 4. பிரணவ பீடம் | சிறு நாக்கிற்கு இப்படி ஒரு பெயர் உண்டு நமது பிராணனின் மூலம் இங்கு தான் இருக்கிறது. பிரம்ம நிஷ்டாபரம் இங்கு தான் உள்ளது. அது ஒரு பெரும் தவநிலையாகும். இங்கு அண்ணாக்கில் பஞ்ச கோசங்களும் அடங்கும் எல்லா கலைகளும் இங்குதான் தோன்றுகின்றன. இந்த பிரணவ பீடம் என்ற சிறு நாக்கு (அ) அண்ணாக்கின் உள்ளே 51 அட்சரங்களும் அடங்கும். இந்த அட்சரங்கள் தான் உலக சிருஷ்டி தத்துவத்திற்கே ஆதாரமானவை. ப்ரும்மா முதல் சதாசிவன் வரை பிரணவ பீடத்தில் அடக்கம். இந்த பிரணவத்தின் அதிபதி ஸ்ரீகண நாதன் ஆவார். |
| 5. பிரணவ தேகம் | ஐந்து தேகங்கள் உண்டு என்று வடலூர் இராமலிங்கம் ஸ்வாமிகள் உணர்த்தியுள்ளார். அதில் பிரணவ தேகம் மிக முக்கியமானது ஆகும். இருள் தேகம், மருள்தேகம், சுத்த தேகம் |

| | |
|---|---|
| | என்பவை "ஓம்" என்ற பிரணவம் மறைந்தவைகள். இதற்கு அடுத்தது ஞானதேகமாகும். "**ஞானதேகம்**" அடைவது தான் தவத்தின் உச்சக் கட்டம் அதற்கு மேல் இறைவனோடு இணைந்திருப்பது ஒன்றுதான் மிச்சம். நமது ஸ்தூல தேகம் சூட்சும தேகமாக மாறி இருப்பதுதான் இந்த தேகம். இதற்கு அதிபதி ஸ்ரீகணநாதன் ஆகும். மேலும், "**பிரணவ பீடம்**" என்ற அண்ணாக்கில் தான் **பிரணவ தேகம்** பெற்று தவத்தில் முன்னேறுவது தெரியும். பிரணவ பீடம் என்கிற அண்ணாக்கில் தான் மனிதன் தெய்வாம்சமாக மாறுவதும் உணரப்படுகிறது. தெய்வத்தன்மை பெறுவது என்று பொருள். அதாவது மகர்லோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் ஆகியவை யாவும் அடங்குவது இந்த பிரணவபீடம் என்ற அண்ணாக்கில்தான். அதுதான் ஸ்ரீமகா லக்ஷ்மியின் ஸ்தானமும் கூட. சர்வம் பிரம்ம மயம் ஜகத் என்பது அங்குதான். அதுதான் **பிந்து** மத்ய **ஸ்தானம்** ஆகும். அங்கு மேல் நோக்கு கதியில்தான் எல்லாம் இயங்கும். |
| **6. பிரணவநாதம்** | ஸ்ரீகணநாதனின் செயல் இது. பஞ்ச கோசத்தில் **ஆனந்தமயக் கோசம்** என்பதின் அதிபதி ஸ்ரீ கணநாதன் (தந்திமுகன்). ஆனந்தமயக் கோசத்தில் என்ன நடக்கிறது. ஸ்ரீகணநாதனின் செயலான "**பிரணவ நாதம்**" எங்கும் பரவி சாதகனை சொக்க வைத்து விடும். அதாவது, அவனது ஜீவனை பிரணவ நாதம் கவ்வி விடும். அப்போது அந்த நாதம் ஆனந்த அலைகளாக மாறி அவனை மயங்க வைக்கும். அதனை மீறி தவத்தில் முன்னேறித்தான் "**விஞ்ஞான மயம்**" அடைய வேண்டும். அதுவே பேரறிவு பெரு நிலம் ஆகும். அந்நிலையில்தான் வேதம், உபநிஷத் கீதை போன்ற ஞான போதனைகள் தோன்றின. எனவே, பிரணவ நாதத்தின் அதிபதியான ஸ்ரீ |

| | |
|---|---|
| | கணநாதன் துணையும் அருளுமின்றி "ஞான உபதேசங்கள்" கிடைக்காது என்பது உறுதி. பிரணவ நாதம் தான் ஈஸ்வரன். அதில் பேதமில்லை. பிரணவ நாதமே முக்காலம் உணர்ந்த அறிவாகும். "**மகத் தத்துவம்**" என்று ஸ்ரீ வித்தை விளக்குவது இனதத்தான், அஷ்டலக்ஷ்மி தான் "மகா குண்டலினி." அதுவே பிரணவ நாதம்.<br>'ஜலம்' என்ற அப்பு தத்துவத்தின் ஒரு கூறுதான் பிரணவம். பிரணவே நாதமே அதன் சொரூபம். லக்ஷ்மி நாதம் அதுதான். ஜல தத்துவமே பிரணவ தேகம். பிரணவ தேகத்தை யோகத்தில் அடைவதுதான் "**பிரணவ சித்தி**" எனப்படுகிறது. |

வள்ளலார் கூறியது ஐந்து விதமான தேகங்கள். அவைகள்:-

| | |
|---|---|
| **1. இருள் தேகம்** | விலங்குகளுக்கு |
| **2. மருள் தேகம்** | மனிதர்களுக்கு |
| **3. சுத்த தேகம்** | தேவர்களுக்கு |
| **4. பிரணவ தேகம்** | (பற்றற்ற) ஞானிகளுக்கு இதுவே கணநாதனின் உடலாகும். பிரணவ தேகம் என்பது ஒரு மிகவும் சூட்சுமமான தேகமாகும். |
| **5. ஞான தேகம்** | பெரும் தவமுனிகளுக்கு (அகத்தியர் போல) |
| மற்றும் ஒன்று | பிசாசுகளுக்கு என்று ஒரு தனி தேகம் உண்டு. ஸ்தூலத்தைத் தேடி அலையும் இது எதிரில் வந்தவரை பற்றிக் கொள்ளும். |

இதில் மனிதன் யோகத்தில் தவத்தில் இறுதியாக அடைய வேண்டியது "**ஞான தேகமும், பிரணவ தேகமும்**" தான். இதில் பிரணவ தேகத்தை அடைந்த சித்திக்கு "**பிரணவ சித்தி**" என்று பெயர். இந்த சித்தியை அடைந்தவர்கள் ஔவையார் மற்றும் நக்கீர தேவர் போன்றவர்கள். இதன் சிறப்பு என்னவென்றால் பிரணவ தேகம் என்பது கணபதியின் உடலாகும். அவரது பூரண அருளால் ஏற்படும் பெரும் சித்தி ஆகும். எனவே தான் **ஔவையும், நக்கீரரும்** கணநாதனை புகழ்ந்து பக்தியோடு பாடிய தத்துவ பாடல்கள் "அகவல்" என்ற முறையில் நமக்கு தரப்பட்டுள்ளதை இனி நாம் காணலாம்.

# நக்கீர தேவர் அருளிய விநாயகர் அகவல்

சீர் தரு மூலச் செழுஞ்சுடர் விளக்கே
கார்நிற மேனிக் கற்பகக் களிறே
அல்லல் வினையை யறுத்திடு ஞான
வல்லபை தன்னை மருவிய மார்பா
பொங்கர வணிந்த புண்ணிய மார்பா
சங்கர னருளிய சற்குரு விநாயக!
ஏழை யடியேன் இருவிழி காண
வேழ முகமும் வெண்பிறைக் கோடும்
பெருகிய செவியும் பேழை வயிறுந்
திருவளர் நுதலில் திருநீற் றழகுஞ்
சிறுத்த கண்ணுஞ் சீதளப் பார்வையும்
நறுந்திகழ் நாசியும் நாண்மலர்ப் பாதமும்
நவமணி மகுட நன்மலர் முடியும்
கவச குண்டலக் காந்தியும் விளங்கச்
சிந்துரத் திலகச் சந்தனப் பொட்டும்
ஐந்து கரத்தின் அழகும் வீற்றிருக்கப்
பாச வினையைப் பறித்திடும் அங்குச
பாசத் தொளியும் பன்மணி மார்பும்
பொன்னா பரணமும் பொருந்துமுந் நூலும்
மின்னா மெனவே விளங்குபட் டழகும்
உந்திச் சுழிய முரோமத் தழகுந்
தொந்தி வயிறுந் துதிக்கையுந் தோன்ற
வேதனு மாலும் விமலனு மறியாப்
பாதச் சதங்கை பலதொனி யார்ப்பத்
தண்டைச் சிலம்புந் தங்கக் கொலுசும்
எண்டிசை மண்டல மெங்கு முழங்கத்
தொகுதொகு துந்தமி தொந்தோ மென்வே
தகுதகு திந்திமி தாள முழங்க
ஆடிய பாத மண்டர்கள் போற்ற
நாடிமெய் யடியார் நாளுந் துதிக்கக்
கருணை புரிந்து காட்சி தந்தருள
இருளைக் கடிந்தே யெங்கும் நிறையப்

பொங்குபே ரொளியாய்ப் பொன்மலை போலத்
திங்கள் முடியான் றிருவுள மகிழ
வந்த வாரண வடிவையுங் காட்டிச்
சிந்தை வளர்ந்த சீரடி யார்க்கு
இகபர சாதன மிரண்டு முதவி
அகவினைத் துன்ப மகந்தை யறுத்து
மூலா தார முச்சுடர் காட்டி
வாலம் பிகைதன் வடிவையுங் காட்டி
மாணிக்க மேனி மலர்ப்பதங் காட்டிப்
பேணிப் பணியக் பீஜா °ரமும்
ஓமென் றுதித்த ஓங்காரத் துள்ளே
ஆமென் றெழுந்த அ°ர வடிவும்
இடைபிங் கலைக ளிரண்டின் நடுவே
கடைமுனை சுழுமுனைக் கபாலமுங் குறித்து
மண்டல மூன்றும் வாயுவோர் பத்துங்
குண்டலி யசபை கூறிய நாடியும்
பூதமும் பொறியும் புகழ்குண மூன்றும்
வாதனை செய்யு மறிவையுங் காட்டி
ஆறா தார அங்குச் நிலையைப்
பேறாகி நின்ற பெருமையுங் காட்டிப்
பஞ்ச மூர்த்திகள் பாகத் தமர்ந்த
பஞ்ச சக்திகளின் பாதமுங் காட்டி
நவ்வொடு மவ்வும் நடுவணை வீட்டில்
அவ்வு மாக்கினை அநாதி சதாசிவம்
மைவிழி ஞாம மனோன்மணி பாதமும்
நைவினை நணுகா நாத கீதமும்
கண்டு வணங்கக் கண்ணைத் திறந்து
விண்டல மான வெளியையுங் காட்டிப்
ஐம்பத்தோ ரெழுத் தட்சர நிலையை
இன்ப சக்கர விதிதனைக் காட்டிப்
புருவ நடுவணை பொற்கம லாசான்
திரு விளை யாடலுந் திருவடி காட்டி
நாதமும் விந்தும் நடுநிலை காட்டிப்
போதம் நிறைந்த பூரணங் காட்டி

உச்சி வெளிதனி லுள்ளொளி காட்டி
வச்சிரம் பச்சை மரகத முத்துப்
பவளம் நிறைந்த பளிங்கொளி காட்டிச்
சிவகயி லாயச் சேர்வையுங் காட்டிச்
சத்தம் பிறந்த தலத்தையுங் காட்டித்
தத்துவந் தொண்ணூற் றாறையும் நீக்கிக்
கருவி கரணக் களங்க மறுத்து
மருவிய பிறவி மாயையை நீக்கி
உம்பர்கள் ரிஷிகள் ஒருவருங் காணா
அம்பர வெளியி னருளையுங் காட்டிச்
சத்தி பராபரை சதாநந்தி நிராமய
நித்தியி ரூபி நிலைமையுங் காட்டி
அடியவர் ஞான வமிர்தமா யுண்ணும்
வடிவை யறியும் வழிதனைக் காட்டி
நாசி நுனியில் நடக்குங் கலைகள்
வாசிவா வென்று வாங்கிப் பிடித்து
நின்மல வடிவாய் நிறுவித் தப்புறம்
விண்மய மான விதத்தையுங் காட்டித்
தராதல முழுதுந் தானாய் நிறைந்த
பராபர வெளியைப் பணிந்திடக் காட்டி
என்னுட லாவி யிடம்பொருள் யாவுந்
தன்னுடை வசமாந் தவநிலை காட்டி
நானெனு மாணவம் நாசம தாகத்
தானெனை வந்து தயக்கந் தீர
ஆன குருவா யாட்கொண் டருளி
மோன ஞான முழுது மளித்துச்
சிற்பரி பூரண சிவத்தைக் காண
நற்சிவ நிட்கள நாட்டமுந் தந்து
குருவுஞ் சீடனுங் கூடிக் கலந்து
இருவரு மொருதனி யிடந்தனிற் சேர்ந்து
தானந்த மாகித் தற்பர வெளியில்
ஆனந்த போத அறிவைக் கலந்து
புவனத் தொழிலைப் பொய்யென் றுணர்ந்து
மவுன முத்திரையை மனத்தி லிருத்திப்
பெண்டு பிள்ளை பண்டு பதார்த்தங்

கண்டவை மாயை கனவெனக் காட்டிப்
பாச பந்தப் பவக்கடல் நீக்கி
ஈசன் இணையடி யிருத்தி மனத்தே
நீயே நானாய் நானே நீயாய்க்
காயா புரியைக் கனவென வுணர்ந்து
எல்லா முன்செய லென்றே யுணர
நல்லா யுன்னருள் நாட்டந் தருவாய்
காரண குருவே கற்பகக் களிறே
வாரண முகத்து வள்ளலே போற்றி
நித்திய பூசை நைவேத் தியமும்
பத்தியாய்க் கொடுத்துப் பரமனைப் போற்றி
ஏத்தி யனுதினம் எளியேன் பணியக்
கூற்றினை உதைத்துக் குளிர்பதந் தந்து
ஆசு மதுர வமிர்த மளித்துப்
பேசு ஞானப் பேறெனக் கருளி
மனதில் நினைத்த மதுர வாசகம்
நினைவிலுங் கனவிலும் நேசம் பொருந்தி
அருண கிரியா ரவ்வை போலக்
கருத்து மிகுந்து கவிமழை பொழிய
வாக்குக் கெட்டா வாழ்வை யளித்து
நோக்கரு ஞான நோக்கு மளித்து
இல்லற வாழ்க்கை யிடையூ றகற்றிப்
புல்ல ரிடத்திற் புகுந்து உழலாமல்
ஏற்ப திகழ்ச்சி என்ப தகற்றிக்
காப்ப துனக்குக் கடன்கண் டாயே
நல்வினை தீவினை நாடி வருகினுஞ்
செல்வினை யெல்லாஞ் செயலுன தாமால்
தந்தையும் நீயே தாயும் நீயே
எந்தையும் நீயே ஈசனும் நீயே
போத ஞானப் பொருளும் நீயே
நாதமும் நீயே நான்மறை நீயே
அரியும் நீயே அயனும் நீயே
சக்தியும் நீயே சதாசிவம் நீயே

புத்தியும் நீயே புராந்தகன் நீயே
பத்தியும் நீயே மோட்சமும் நீயே
ஏகமும் நீயே என்னுயிர் நீயே
தேமும் நீயே தேகியும் நீயே
உன்னரு ளன்றி யுயிர்த்துணை காணேன்
பின்னொரு தெய்வம் பேசவு மறியேன்
வேதன் கொடுத்த மெய்யிது தன்னில்
வாத பித்தம் வருந்திடு சிலேட்டுமம்
மூன்று நாடியு முக்குண மாகித்
தோன்றும் வினையின் துன்ப மறுத்து
நாலாயிரத்து நானூற்று நாற்பத் தெட்டு
மேலாம் வினையை மெலியக் களைந்து
அஞ்சா நிலைமை யருளியே நித்தம்
பஞ்சாட் சரநிலை பாலித் தெனக்குச்
செல்வமும் கல்வியுஞ் சீரும் பெருக
நல்வர மேனதரும் நான்மறை விநாயகா
சத்திய வாக்குச் சத்தா யுதவிப்
புத்திர மேதரும் புண்ணிய முதலே
வெண்ணீ றணியும் விமலன் புதல்வா
பெண்ணா முமையாள் பெற்றிடுந் தேவே
அரிதிரு மருகா அறுமுகன் றுணைவா
கரிமுக வாரணக் கணபதி சரணம்!
குருவே சரணம் குணமே சரணம்
பெருவயிற் றோனே பொற்றாள் சரணம்
கண்ணே மணியே கதியே சரணம்
மாதை வாவி மலர்த்தடத் தருகில்
தானத்தில் வாழந் தற்பரா சரணம்!
உச்சிப் புருவத் துதித்துல களிக்குஞ்
சச்சி தானந்த சற்குரு சரணம்
விக்கின விநாயக தேவே ஓம் ஓம்!
அரகர சண்முக பவனே ஓம் ஓம்!
சிவசிவ மகாதேவ சம்போ ஓம் ஓம்!

# விநாயகர் அகவல் விளக்கங்கள்

ஸ்ரீ கணநாதனைப் போற்றி ஔவை பாடிய "விநாயகர் அகவல்" என்பதில் வரும் பல யோக நிலைகளுக்கு உரிய விளக்கங்கள் இங்கு கீழே தரப்படுகின்றன. அகவலை படித்து அதன் பொருளை நன்கு உணர இவை உதவும்.

| | |
|---|---|
| அங்குசம் | – என்பது ஞானம் கொண்டு மனதை அடங்குதல் பக்தி, வைராக்யம் கலந்த "திடச்சித்தம்." |
| மூன்று கண்ணும் | – ஞான சொரூபத்தோடு விளங்கும் ஸ்ரீ கணநாதம் சாரீம். |
| மும்மதம் | – யோக நிலையில் ஏற்படும் ஆனந்த கண்ணீருடன் கூடிய தபோநிலை. |
| சொற்பதம் கடந்த துரியம் | – "துரியம்" என்பது விழிப்பு கனவு உறக்கம் என்ற மூன்று நிலைக்கு அப்பாலுள்ள நான்காவது யோக நிலையாகும். "சொல்" அறுபட்டு போனால்தான் இது சித்திக்கும் – பெரும் ஞான மௌனநிலை. |
| மூஷிகன் | – நமது பிராண சலனம் எலியாக வர்ணனை செய்யப்பட்டுள்ளது. |
| ஐந்தெழுத்து | – பஞ்சாட்சரம் "நமசிவாய" என்ற மந்திரம் |
| ஞானத்தெளிவு | – தெளிவுள்ள ஞானம் கருவிகள் ஒடுங்கிய நிலை – ஐம்புலன் தன்னையடக்கும் உபாயம் ஐம்புல கதவையடக்கி இருவினை – இணைவயாவும் புலனடக்கத்தை உணர்த்துகின்றன. |
| தலம் ஒரு நான்கும் | – சாமீபம், சாரூபம், சாயுஜ்யம், சாலோகம் என்பவை இறைவனோடு ஒன்றியிருக்கும் தவநிலைகள் இவை. இந்த நான்கும் பெரும் தவ நிலைகள். |
| மலம் ஒரு மூன்றும் | – ஆணவம், கர்மம், மாயை என்ற மலங்கள். |
| ஒன்பது வாயில் ஒரு மந்திரத்தால் | – நமது தேகத்திலுள்ள ஒன்பது துளைகள் வரியாக பிராண சக்தி வீணாகிறது. இதனை |

| | |
|---|---|
| அடைத்து | ஓம் என்ற ஒரு மந்திரம். |
| ஆறு ஆதாரத்து அங்குசம் | – மூலாதாரம் முதல் ஆறு ஆதார சக்கரங்கள் இயங்குகின்றன. இதன் செயல்தான் நமது உடலின் மனதின் இயக்கம். இவைகளின் செயல்களை தடுப்பது யோகம். |
| பேரா நிறுத்தி | – ஆறு ஆதாரங்கள் பெயர்ந்துதான் புலன்கள் செயல்படுகின்றன. இதனைத் தடுப்பது யோகம். |
| பேச்சுரை அறுத்தே | – ஸ்ரீ வித்யை பூர்த்தி கட்டம் பேச்சு, சொல், நிறுத்துவது. பெரும் மௌனம் |
| இடா பிங்களை எழுத்தறிவித்து | – இடை பிங்களை என்ற சூரிய, சந்திர நாடிகள் எவ்வாறு இயங்குகின்றன என்ற அறிவு பெற்று |
| இடையில் சுழுமுனை கபாலம் காட்டி | – இடை பிங்களையின் முடிவின் சுழுமுனை நாடி உள்ளதையும் அதன் இயக்கத்தையும் உணர்ந்து |
| மூலாதாரத்து மூண்டெழுகனலை | – குண்டலினி என்பது ஒரு பெரும் யோக சக்தி. யோகாக்னியான அதை "கால்" கொண்டு எழுப்ப வேண்டும் என்கிறார். "கால்" என்றால் "மூச்சு" என்று பொருள். அதாவது மூச்சையடக்காமல் அடக்கி (மூக்கைப் பிடிக்காமல் மூச்சை பேச்சால் சொல்லால் அடக்கும் "ஸ்ரீ வித்யை" மூலம்) குண்டலினி என்னும் யோக அக்னியை மூலாதாரத்திலிருந்து எழுப்பி கிளப்பி மேல் நோக்கிச் செலுத்தி "யோகத்தில்" முன்னேறும் தத்துவத்தை உணரும்படி அருள் செய்ய வேண்டுகிறார் ஔவையார். |
| ஆதித்தன் இயக்கம் | – சூரிய நாடிக்கு மற்றொரு பெயர் ஆதித்தன் (சித்தர்கள் பாணியில்) அதனை நன்கு அறிய வேண்டுகிறார். யோக சித்திகள் பெற்றவர்களுக்குதான் இது சாத்தியம். |
| ஷண்முக ஸ்தூலம் | – புலடைக்கமும் ஆதார சக்கரங்களின் நிவிர்த்தியும் இது குறிக்கும். |
| அமுதநிலை | – அதுவே சிரஞ்சீவி நிலையது. அதன் அதிபதி ஸ்ரீ கணநாதன் ஆவார். எனவே மகா |

| | |
|---|---|
| | லக்ஷ்மியான சீதை தந்த வரம் ஸ்ரீ கணநாதன் அருளாகும். அதை ஆஞ்சநேயர் பெற்றார். |
| புரியட்டகாயம் | – மனம், புத்தி, அகங்காரம், தத்துவம் ஆகியவை கொண்ட தொகுப்புதான் புரியட்ட காயம் என்பது. அதுவே "தேவதாரு" எனப்படும். பிரம்ம நிஷ்டையில் உள்ளவர்களின் முதல் உடம்பு அது. அதாவது மனித உடலில் ஸ்தூல தேகம், சூட்சும தேகம், காரண தேகம், காரிய தேகம் என்ற நான்கும் உள்ளன. இதில் கடைசியில் உள்ள காரிய தேகம் என்பதைத் தான் புரியட்டகாயம் என்பது. இதை பிரம்ம ரிஷிகள் மட்டுமே பெற்று உணர்ந்து அறிய முடியும். அஷ்டாங்க யோகத்தின் முடிவு நிலை அது. |
| அமிர்த நாடி | – நாடிகளில் அமிர்த நாடி என்று ஒன்று உண்டு. இதன் அதிதேவதை ஸ்ரீகணநாதன் ஆவான். அவரது அருளின்றி இது செயல்படாது. இதனைப் பெறுவது எல்லோருக்கும் சாத்தியமல்ல. மிகப் பெரும் தவச்சீலர்களுக்கு மட்டுமே உரித்தானது. இந்த அமிர்த நாடியைத் தான் சுழுமுனை நாடி என்று அழைக்கின்றனர். இதில் இரண்டு வகை உண்டு.<br>1. மேல் சுழுமுனை<br>2. கீழ் சுழுமுனை<br>மேல் சுழுமுனையில் எல்லா சித்திகளும் அடங்கியுள்ளன. அமுதம் உண்ணும் பெரும் சித்தி இது. யோகிகளுக்கும் தவசீலர்களுக்கும் முனிவர்களுக்கும் மட்டுமே கிடைக்கும் அரிதான ஒரு வரமாகும். இந்த சுழுமுனை மேலும், அமுதநிலை என்பது சிரஞ்சீவி நிலையைக் குறிக்கிறது. எப்படியெனில் அந்நிலைக்கு "ஜீவாம்மிர்தம்" என்று ஒரு பெயர் உண்டு. அந்நிலையில் யோகியின் தேகம் தேவர்களைப் போல் முழுவதும் வீரியம் கொண்டு விளங்கும். அதை சம்பூர்ண ஆனந்த |

| | |
|---|---|
| | |
| இடை பிங்களையின் எழுத்து | – இடை பிங்களை என்று இரண்டு நாடிகள் நமக்குள் உள்ளன. இதில் ஒவ்வொன்றும் செய்யும் செயல்களை உணர்த்தும் அருளைப் பெறுவதுதான் யோகம். |
| சுழுமுனை | – சுழுமுனை, நடுநாடி, சூட்சும நாடி என்று பல விதமாக அழைக்கப்படும். தெய்வீக நாடி (அ) ஞான திருஷ்டி தரும் நாடியைப் பற்றி அறிந்து கொள்ளும் படியான அருளை வேண்டுகிறார். |
| மூன்று மண்டலங்கள் | "சூரிய மண்டலம்"<br>"சந்திர மண்டலம்"<br>"அக்னி மண்டலம்"<br>என்று மூன்று மண்டலங்கள் நமக்குள் உள்ளன. மனிதனின் சிற்றறிவு புலன்கள், மனம் புத்தி, சித்தம் எண்ணம், பேச்சு என்ற இவை யாவும் செயல்பட இந்த மண்டலங்கள் ஆவன செய்கின்றன. யோகம் என்பது நமது தேகம், அறிவு யாவற்றையும் அடக்குவது. எனவே, இந்த மூன்று மண்டலங்களையும் அழித்து அடக்கியிருக்கும் நிலைதான். யோக நிலையாகும். இதனைத் தான் ஔவையார் அகவலில் ஸ்ரீகணேசரிடம் வேண்டுகிறார். |
| நான்றெழு பாம்பு | – மூன்று மண்டலங்கள் வழியாக (அ) ஆறு ஆதார சக்கரங்களையும் அடக்கி அதன் மூலம் எழுகின்ற குண்டலினி சக்தியை பாம்பாக ஔவை வர்ணித்து அகவலில் குண்டலினி சித்தி பெற வேண்டி வணங்குகிறார். குண்டலினி (அசபை) = அஜபா என்ற மந்திர சித்தி மூலம் குண்டலினியை எழுப்புவது. |
| குமுதன் | சந்திர நாடி (புலன்களை இயக்குவது |

| | |
|---|---|
| கருத்தினில் கபாலவாயில் | – சிற்றறிவில் பேரறிவு கலக்கும் பெரும் ஞான போதனை. |
| வாக்கு மனமில்லா மனோலயம் | – வாக்கு மனம் என்ற இயற்கையின் செயல்களை யாவும் செயலற்று இறைவனோடு பரபக்தியிலுள்ள யோக நிலையது. |
| இருள் + வெளி இரண்டுக்கு ஒன்று | – பகல், இரவு என்று இல்லாமல் தேகம் எப்போதும் ஒரே நிலையில் உறக்கம், களைப்பு சலனமின்றிருக்கும் யோக நிலை. (இயற்கையை வென்ற நிலை) |
| அருள் தரும் ஆனந்தத்தில் அழுத்தி | – ஆனந்த மயக்கோசம் என்னும் நிலையை கண்டோம். அங்கு மயங்கி விடாமல் இறைவன் அருள் கொண்டு மேலேறி ஞானத்தை பெறும் தவம். |
| செவியில் | – எல்லையில்லா ஆனந்தம் அருள் வழி – இறைவன் அருள் வாக்கை (அல்லது) ஞான போதத்தை பரமாகாசத்தில் பெற்று ஞானப்பாலுண்டு அதனால் ஆனந்தம் பெறும் நிலை. |
| சத்தத்தில் சிதாசிவம் | – ஓசை நாதமாக விளங்க |
| சித்தத்தில் சிவலிங்கம் | – சித்தம் புலடைக்கத்தில் எண்ணத்தில் அசைவு இல்லாமை கொண்டு பேரறிவில் கலப்பது. |
| கரும்பு | ஞானம், சித்திகள் இவைகளைப் பெற்று |
| வேடமும் நீரும் | – திருநீறு பூசிகொண்டு சிவ வேடமணிந்த உண்மை சிவனடியார்கள், ஞானிகள் யோகிகள், தவசீலர்கள் போன்ற நல்ல ஆத்மாக்களை தரிசனம் செய்தல், அவர்களுடைய சதசங்கம் பெறுதல் போன்றவை. அதன் மூலம் தவத்தை பெருக்குதல். |
| மெய்த் தொண்டர் குழாத்துடன் | – மெய்த்தொண்டர்களை கண்டு அவர்களின் சங்கத்தில் அருளைப்பெறுதல். |

**கைத்தல நிறை கனி** அதுதான்.

**கைத்தல நிறைகனி**

கைத்தல நிறைகனி என்ற தத்தவத்திலிருந்து (தெய்வ அனுகூல்யம்) தான் "**வசித்வம்**" என்ற பெரும் அஷ்ட மகாசித்தி நிலை தோன்றுகிறது. ஓங்காரத்தின் முடிவு தான் மகாமாயை – பற்றற்ற உள்ளம் அடையும் நிலையது. அருணகிரி தன்னுடைய "கைத்தல நிறைகனி" என்று தொடங்கி ஸ்ரீகண நாதனைப் போற்றிப் பின்னர் தனது பாடல்களை பாடியுள்ளார். அதன் பொருள் அதுவே.

பிரணவ சொரூபம்

"**மண்**" என்ற பிரிதிவி பூதத்திற்கு அதிபதி ஸ்ரீ கணநாதன் ஆவார். அந்த "மண்" என்பதன் நான்கு பகுதிகளில் ஒன்று தான் "பற நாதம்" மற்றவை பற பிந்து, பற சிவன், பறசக்தி. அதுவே பிரணவத்தின் "**அகாரம்**" ஆகும். இவை அதிகிரமண சக்திகள் ஆகும்.

ஸ்ரீ இராமன் அகல்யை விடுவித்ததும், அகல்யையின் கணவர் கௌதம ரிஷி அவளுக்கு சாபம் தந்ததும் இந்த பறநாதம் துணை கொண்டு தான். பரநாதம் தான் பிரணவ சொரூபம். பிரணவ சொரூபத்தின் நான்கு கால்கள்தான் பரா, **பஸ்யந்தி, மத்தியமா, வைகரி** என்பனவாகும். பிரணவம் ஸ்ரீ கணநாதனாகும். எனவேதான் ஸ்ரீ கண நாதனின் செயலால் பல கார்யங்கள் அவதாரங்களில் நடக்கின்றன.

**ஸ்ரீ பரமேஸ்வரனுக்கு ஐந்து முகங்கள் அவையாவன**

1. ஈசானம்
2. தத்புருடம்
3. அகோரம்.
4. வாமதேவம்
5. சத்யோஜாதம்

என்பவை. இதில் ஈசானமே சமயத்தில் சத்யோஜாதமாக செயல்படுகிறது. மேலும், இதில் சத்யோஜாதம் என்ற ஈசனின் தத்வம் தான் மூல கணபதி ஆகும். எனவே பரமேஸ்ரனை ஆராதிக்கும் யாவரும் இதனை உணரவேண்டும். ஸ்ரீ கணநாதனே சமயத்தில் நாராயண சொரூபமாக கூட இருக்கின்றார். எனவே அரியும், சிவனும் ஒன்று. இதை அறியாதவன் வாயில் மண் என்று ஔவைக் கூறியதும் இங்கு நினைக்கப்பட வேண்டும். எனவே ஸ்ரீ கணநாதன் சைவம் வைணவம் என்ற இரு மதங்களுக்கும் பொதுவானவராக இருக்கிறார்.

# ஓம்காரத்தில் ஸ்ரீகணநாதன்

மனிதன் ஒரு தெய்வீகமான பிறவி. மிருகங்களுக்கும் மனிதனுக்கும் உள்ள ஒரு பெரும் வேறுபாடு மனமும் அவனது சுவாசமும். ஏற்கெனவே கூறியபடி நமது சுவாசம் தெய்வத்தின் ஆணைப்படி நமது பூர்வ ஜென்ம கரும பலன்களுக்கு ஏற்றவாறு செயல்படுமாறு இறைவன் நம்மைப் படைக்கிறான். அவ்விதமே சுவாசிக்கத் தேவையான உடல் உறுப்புகளும் நமது பூர்வ ஜென்ம கர்ம 'வினைகளுக்கேற்றவாறு நல்ல நிலையிலும் சில சமயம் குறைகளோடும் படைக்கப்படுகின்றன. மனிதன் நாளொன்றுக்கு ஒரு இரவு ஒரு பகல் சராசரியாக விடும் மூச்சுக்காற்று 21,600 மூச்சுகள் என்பது யோக நூல்களின் கணக்கு. இன்னும் குறிப்பாக விவரத்துடன் சொல்ல வேண்டுமெனில் 21,600 x 5 = 1,08,000 என்று சொல்லவேண்டும். ஏனென்றால் சுவாசம் ஐந்துவித பிராணன்களான பிராணன், அபானன், வியானன், உதானம் மற்றும் சமானன் என்பவைகளுடன் நடக்கும் ஒரு காரியமாகும். இவற்றின் ஸ்தானங்களும் நிறங்களும் வருமாறு:

| வாயு | இடம் | நிறம் |
|---|---|---|
| பிராணவாயு | இருதயம் | சிவப்பு (இரத்த நிறம்) |
| அபானன் | மலத்துவாரம் | இளஞ்சிவப்பு |
| சமானன் | நாபி | வெண்மை |
| உதானன் | கழுத்தில் | புகை வண்ணம் (சாம்பல்) |
| வியானன் | எல்லாப் பாகமும் | நெருப்புபோன்ற நிறம் |

இப்படி சுவாச காரியங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. நமது சுவாசத்திற்கும் எண்ணத்திற்கும் தொடர்பு உண்டு. சுவாசம் இருந்தால் எண்ணமுண்டு; சுவாசம் இல்லையேல் எண்ணமில்லை. (இது 18 சித்தர்களுள் போகர் என்பவர் கூறியது.)

எனவே, எண்ணமும் சுவாசமும் ஒன்றுகொன்று பிணைந்து செயல்படுகிறது. யோகம் என்பது ஜீவாத்மாவைப் பரமாத்மாவோடு இணைப்பது என்பது பொருள். எங்கு எப்படி இணைப்பது? யோகத்தில் தேகம் மறந்த நிலை மூச்சு பேச்சு எண்ணமற்ற சமாதியில்தான் இறைவனோடு மனிதன் உறவாட முடியும். சமாதியிலும் பலவிதங்களுண்டு. இதில் **நிர்விகல்ப சமாதியில்** மனிதன் தன் நிலை மறந்து பேரின்பத்தில் திளைத்து மீண்டு

வராமல் போக அவனது உயிர் 21 நாள்களில் கூட்டைவிட்டுப் பிரிந்து போய்விடுகிறது. இங்கு அவன் தெய்வீக நிலையைப் பேரின்ப அலைகளாக ஆனந்த வடிவில் அனுபவிக்கிறான் என்றாலும் இறைவனின் ஞான உபதேசம் கிடைப்பதில்லை. எவரும் மூச்சையடக்கிச் சென்றவர்கள் அவ்விதம்தான் உலகைவிட்டுச் சென்றனர். எனவே, மூச்சையடக்கினால் மட்டும் தவமாகாது. வெறும் பதஞ்சலியோகம் (ஹடயோகம்) இந்தக் காலத்திற்கு உதவாது.

எனவே, அவருக்குப்பின் வந்த மகரிஷிகள், சித்தர்கள் ஆகியோர் வேறு பல உபாயங்களைக் கையாண்டனர். அதுவே ஜபயோகம், தியானயோகம், இராஜயோகம், ஸ்ரீவித்யா உபாசனை, அத்வைத விசாரம் போன்ற சுலபமான வழிகளாகும். இல்லற வாழ்வில் அனைவருக்கும் ஏற்றதாக இவை அமைந்துள்ளன. மேலும் ஜபங்களில் பல தேவதைகளுக்குரிய மந்திரங்கள் உள்ளன. உபாசனைக்கேற்ப மக்கள் ஏற்ற மந்திரங்களை ஒரு குருவினிடமிருந்து உபதேசமாகப் பெற்று ஜபித்து அம்மந்திரத்திற்குரிய தேவதையைப் பூசித்து அதன் அருளைப் பெறவேண்டும். இவ்விதம் யோகத்தில் தொடக்க நிலையி லுள்ளவர்களுக்கு இதுபோன்ற தேவதா மந்திரங்கள் தேவை. இந்த யோகமுறையில் மேல்நிலையில் உள்ளவர்களான யோகிகள், மகான்கள், சித்தர்கள் போன்றவர்கள் ஒரு தேவதைக்குரிய மந்திரத்தை ஜபிக்காமல் **ஓம் என்ற பிரணவ மந்திரத்தை** மட்டுமே ஜபிப்பார்கள். அத்துணைப் பெருமை வாய்ந்தது பிரணவ மந்திரம். ஓம்காரத்தின் சிறப்பைச் சற்று ஆராய்வோம்.

**ஓம்காரத்தைப் பற்றிச் சில குறிப்புகள்:**

**ஔவையார்**

"*ஓம் என்ற மூல கணபதியே காப்பு உண்மையுடன்,,,,,,,,,,,ஆதி காப்பாம்*" இதில் நாம் அறிவது **ஓம்** என்ற பிரணவமே மூல கணபதியாகும். அவரே பிரணவப் பொருள். அவரே முழுமுதற் கடவுள். அவரே ஆதிமூலம். இந்தப் பிரணவத்திலிருந்துதான் சகல புவனங்களும் தோன்றின. ஸ்ரீகணநாதனே சர்வ சிருஷ்டிக்கும் முன்னிருந்த ஆதிப்பரம்பொருளும். பேரறிவும், அமைதியும் ஆவார்.

**திருமூலர்**

திருக்கைலாயத்திலிருந்து வித்தைகளைக் கண்டுணர்ந்த இவர் 18 சித்தர்களில் ஒருவராகவும் சைவ சித்தாந்தத்தில் பெரும் தலைவராகவும்

கருதப்படுபவர். இவர் எழுதிய **திருமந்திரம்** என்னும் சைவ சித்தாந்த யோக நூலில் ஓம்காரத்திலிருந்துதான் சிருஷ்டிக்குக் காரணமான ஐந்து மகா பூதங்களும் பிறந்தன என்கிறார். அந்த ஐந்து மகா பூதங்களானவன: (நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்) என்பன. இதில் நிலமும் நீரும் மட்டும் பெரும் தெய்வீகத் தத்துவங்களாகும். அவைகள்தான் அம்மையும் அப்பனுமாக, ஆதி தம்பதிகளான ஸ்ரீபரமேஸ்வரரும், ஸ்ரீஅம்பிகையுமாக உள்ள சக்தி சொரூபங்களாகும்.

**"ஓம்"** என்ற பிரணவமே **"துரியம்"** என்ற பெரும் யோக நிலைக்கு ஆதாரமாகும். எனவே, இந்தப் பிரணவத்தின் அதிபதி ஸ்ரீகணநாதன் பெரும் யோகநிலைக்குச் செல்ல அருள்புரிபவர் ஆவார். மேலும், அவரது பெருமைகளைப் பல இடங்களில் இந்த நூலில் கூறப்பட்டுள்ளது. எனவே, மீண்டும் கூறுவது தேவையில்லை. இப்படிப் பல ஆன்றோர்கள் அவரது பெருமைகளைக் கூறியுள்ளனர். அந்தப் பெருமைக்குரிய ஸ்ரீகணநாதனின் சொரூபங்களான ஓம் என்ற பிரணவத்தை உபாசித்து அதன் சப்தத்தை உச்சரிப்பைத் தியானித்து அவ்விதம் பலகாலம் சிந்தனையில் ஆழ்ந்து பிரணவத்தின் ஒலி தானாக அறிவில் ஒலிக்குமாறு யோகத்தில் முன்னேற வேண்டும். **"ஓம்"** என்ற கணநாதனின் அம்சமான மந்திரத்தை உபாசிக்கும் சாதகனுக்கு யோகத்தில் பலவிதமான ஓசைகளைக் கேட்க வேண்டி வரும். அவை யாவும் இவனது கவனத்தைச் சிதறடிக்க வரும் சோதனைகளாகும். ஓம் என்று ஒலித்ததும் அந்த ஒலி முடிவடையும் இடத்தை **அர்த்த மாத்திரை** (அல்லது) **வாரூணி** என்று உபநிஷத்துகள் வர்ணிக்கின்றன. அவ்விதம் தியானிக்கும் சமயம் ஒரே எண்ணமாகத் தாரணையில் அதைத் தியானித்து வரும்போது, **"ஜோதி தரிசனம்"** கிடைக்கும். முக்குணங்களைக் கடந்த நிலையில் தான் அது கிடைக்கும். அங்குச் சாதகனின் மனம் லயமாகிறது. அதுவே **"மனோலயம்"** என்று ஔவையின் விநாயகர் அகவலில் கூறப்படும் பெரும் யோகநிலையாகும். பிறகு பற்றற்ற ஞானியாகி ஞான ஒலியைக் கேட்பான் அவன். அதுவே நாதோபாசனை என்பதாகும். தனக்குள்ளிருந்து வரும் தெய்வீக நாதத்தைத் தியானத்தில் நிஷ்டையில் கண்டு உணர்வதே நாதோபாசனை யாகும்.

மேலே இதுவரை கூறியதுபோல் அப்யாசம் செய்து துரியம் என்ற யோகநிலைக்குச் செல்வது யோகிகளின் வழிமுறையாகும். அவ்விதம்

துரியநிலையை அடையும் முன் "**பரமாத்மாவின் சங்கநாதம்**" கேட்கும் (இருமுறை). அதற்குமுன் பலவிதமான ஓசைகளும் ஒலிகளும் கேட்கும். உதாரணமாக:

**வாத்திய ஒலிகள்** – மத்தளம், பேரிகை, குழல், யாழ், வீணை, கோலாட்டம், மணி, கிங்கிணி, சலங்கை போன்றவை.

**மற்றவை** – கடல் அலை, மேகம் உருளுதல், நீர் வீழ்ச்சி, நீரோட்டம்.

**உயிரினங்கள்** – வண்டின் ரீங்காரம், பூச்சிகளின் சப்தம், மற்றும் பல (நுட்ப அலைகளாக)

இவை போன்றவற்றை உதாசீனம் செய்து **சங்கநாதத்தைக்** கேட்கவேண்டும். நாதம் உள்ளவரை மனம் அங்கிருக்கும். நாதத்தின் முடிவில் மனம் அழிந்துவிடும். அதுவே "**மனோன்மணி**" என்ற உன்னத நிலையாகும். அங்குப் பிரம்ம பிரணவ நாதத்தில் (துரியம்) எல்லாம் லயமாகி ஜீவன் சிந்தையற்ற நிலையை அடைகிறது. அதுவே ஜீவன் முக்தி. துரியத்தை அடுத்த பெரும் தவநிலை **துரியாதீதம்** என்பது. அங்குதான் இறைவனின் ஞான உபதேசம் கிடைக்கிறது. அந்நிலையை அடைந்தவர்கள்தான் பெரும் தவசீலர்களான ஞானசம்பந்தர், ஔவையார், திருமூலர் போன்றவர்கள். சித்தர்கள் வழியும் அவ்விதம் பெரும் தவநிலையாகும். **தோடுடைய செவியன்** என்று சம்பந்தரை மக்கள் பெருமையுடன் அழைக்கும் விளக்கம் இவ்வாறு இறைவனின் ஞானபோதத்தைக் கேட்கும் பக்குவமும் தவமும் அருளும் பெற்றதுதான் என்பதை உணர வேண்டும். எனவே, "**பிரணவமே**" **துரியம்**. பிரணவமே எல்லாம். அதற்கு அதி தேவதையான ஸ்ரீகணநாதனைப் போற்றிப் பணிவது நமது கடமையாகும்.



# யோகத்தில் ஸ்ரீமகா கணபதி

## யோக முறைகள்

**ஸ்ரீவித்யை:–** ஸ்ரீவித்தை என்பது மந்திரங்களின் உதவியுடன் அலைபாயும் சித்தத்தை அடக்கி, நிஷ்டையில் சென்று ஸ்ரீதேவியின் அருளைப்பெறும் வழிமுறை யாகும். ஸ்ரீ சங்கரர் சௌந்தர்ய லஹரியில் பரா, பஸ்யந்தி, மத்யமா, வைகரி என்று ஒலியின் பல வடிவங்களை (அல்லது) நிலைகளை வர்ணித்து, முடிவில் "பரா" என்ற தவநிலையை எட்டிப் பிடிக்கவேண்டும் என்கிறார். இதில் அலைபாயும் சித்தத்தை / எண்ணத்தை அடக்கி மனத்தை உள்நோக்கிச் செலுத்த வேண்டும். இவ்வாறு மனத்தை அடக்குவது முதற்கட்ட பயிற்சியாகும். இதில் அலைபாய்வதற்குக் காரணமே ஸ்ரீமகாகணபதி யாவார். அடக்கிவிட்டால் மனம் அடங்கும். வித்தைக்கு அதிபதியும் இவரே ஆவார். எனவே, சித்த விருத்திக்கும் சித்த விருத்தி அடங்கிய யோக நிலைக்கும் அதிபதிதான் இந்த ஸ்ரீமகாகணபதி ஆவார். இவரைத் தொழுதால் வெற்றி நிச்சயம்.

**பதஞ்சலியோகம்:–** எட்டு அங்கங்களைக்கொண்ட இது பதஞ்சலி முனிவரால் கண்டுபிடிக்கப்பட்ட யோக முறையாகும். எட்டு அங்கங்களாவன: இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியானம், சமாதி என்பன.

**விளக்கங்கள்:**

**இயமம், நியமம், ஆசனம்:** இவைகள் நாம் அளவோடு உண்டு புலன்களை உபயோகித்து நமது முயற்சி, செயல், உழைப்பு ஆகியவற்றைக்கொண்டு வாழ்வதும், பிறருடைய எந்தப் பொருளையும் விரும்பாமல் பெறாமல் இருந்து பற்றற்ற நிலையில் வாழ்க்கையைச் செலுத்தி, யோகத்தில் இறையுணர்வில், முக்தி நிலையில் நாட்டத்தைச் செலுத்தி மரணமில்லாப் பெருவாழ்வு பெற முயற்சி செய்யும் தினசரி வாழ்க்கையைக் குறிக்கிறது.

**ஆசனங்கள்:** யோக முறைக்கு உதவியாக உள்ளன. இதில் பற்றற்ற நிலைக்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி ஆவார். எனவே, வெற்றிக்கு யோகத்தில் இவர் அருள் வேண்டும்.

**பிராணாயாமம்:**— பிராணன் என்றால் மூச்சுக்காற்று. அதனை யடக்குவது பிராணாயாமம் என்ற கலை. மூச்சுக்காற்று இறைவனின் செயலால் நடக்கிறது. மனிதன்/ நாளில் 21,600 தடவை சுவாசித்துக் காற்றை இழுப்பதும் விடுவதுமான செயலைச் செய்து கொண்டிருக்கிறான். பிறப்பிலேயே இறைவன் எத்தனை தடவை ஒரு மனிதன் தன் வாழ்வில் சுவாசிக்க வேண்டும் என்பதை அவனது பூர்வ ஜென்ம கர்ம பலனுக்கேற்பத் தீர்மானித்து அதற்கேற்றவாறு அவனது உடலமைப்பை ஏற்படுத்தித் தருகிறான். எத்தனை தடவை விதித்துள்ளதோ அத்தனை தடவை மூச்சுவிட்டபின் மனிதன் இறக்கிறான். இடையில் யோகத்தை ஏன் வைத்தான்? மூச்சையடக்கும் பயிற்சியை ஏன் முனிவர்கள் கடைப்பிடித்தனர்? சுவாசம் இயங்குவது இறைவனின் செயலால் என்று முன்பு சொன்னோம். பின் எதற்கு அதைக் கட்டுப்படுத்துவது? காரணம் எண்ணமும் மூச்சுக்காற்றின் இயக்கமும் ஒன்றுக்கொன்று இணைக்கப் பட்டுள்ளது. எண்ணத்தைத் தாண்டி மௌனத்தில்தான் இறைவனைக் காண, அவனுடன் உறவாட முடியும். எனவே, எண்ணத்தை நிறுத்த அதனுடன் உலவும் மூச்சை யடக்கி, அவ்விதம் எண்ணமற்ற நிலைக்கு வரும் சாதனை முறையாகப் பதஞ்சலி முனிவர் அக்காலத்தில் "அஷ்டாங்க யோகம்" என்ற முறையைக் கையாண்டார். இந்தமுறை அவரது காலத்திற்கு உகந்ததாக இருந்தது. கலியுகத்தில் இந்தமுறை செல்லாது. மேலும், மூச்சுடன் மோதினால் விபரீதம்தான் உண்டாகும்.

**பிரத்யாஹாரம்:**— புலன்கள் இயற்கையில் புறத்தில் நமக்கு வெளியில் உள்ள பொருள்களின்மேல் நாட்டமாக இருக்கின்றன. புலன்கள் யாவும் தானாகச் செயலற்று அடங்கிவிட்டால் மனிதன் இறக்கிறான். யோகத்தில் இந்தப் புலன்களை யடக்கிவிட்டால் மனிதன் இறப்பதில்லை. மாறாகச் சமாதி நிலையில் இருக்கிறான். இதுதான் சாவாமல் செத்து இருக்கும் "மரணமில்லாப் பெருவாழ்வு" என்பதாகும். பெரும் தவமுனிவர்கள் பிரம்ம ரிஷிகள் கண்டு அனுபவித்த பெரும் தவநிலையாகும். சமாதி என்பது மேற்கூறிய சமாதி நிலைக்குச் செல்லப் புலன்கள் அடங்கி உள்நோக்கிப் பாயவேண்டும். அதற்கு முற்பிறவியில் சித்தனாக இருந்திருக்க வேண்டும் (அல்லது) தவமுனிவனாக இருந்திருக்க வேண்டும்.

**சமாதி** என்பது சாதாரண மனிதனுக்குச் சாத்தியமானதல்ல. ஆனால் அவ்விதம் ஒரு தவநிலை யிருப்பதையும் அதனை அடையும் நோக்கத்தையும் மனிதன் முயற்சியில் கொள்ள வேண்டும். இறைவன் அருளின்றிச் சாதாரண மனிதன் "சமாதி" என்ற நிலையை அடைய முடியாது.

பிரத்யாஹாரம் என்பது புலன்களின் நாட்டம் நமக்கு வெளியே செல்வது தடைபட்டுவிட்டது என்ற நிலையைக் குறிக்கும். அதாவது, புலன்களின் வெளிச்செல்லும் தன்மை அழிந்துவிட்டது என்று பொருள். ஆனால், புலன்கள் அடங்கி உள்நோக்கு முகமாக **அந்தர்முகம்** எனப்படும் அகக்கண் நோக்கிப் பாயவேண்டும். அங்குதான் பிரத்யாஹாரத்தினைத் தாண்டிய மேல்நிலைகளான தாரணை, தியானம், சமாதி என்பவை உள்ளன. எனவே, "தியானம்" என்ற சொல், சாதாரணமாகக் கண்களை மூடியிருக்கும் நிலையைத்தான் குறிக்கிறது. உண்மையில் **தியானம்** என்ற நிலை பிரம்ம நிஷ்டையைக் குறிக்கிறது. சாதாரண மனிதன் தியானம் என்ற நிலையை அடைவது ஓர் இயலாத காரியம். அது தவமுனிவர்கள், சித்தர்கள் மகான்களுக்கே சொந்தமானது. இந்தத் தியான நிலை என்பது, மேற்கூறியபடி "**தாரணை**" என்ற மனம் ஒன்றுபட்ட / குவிந்த நிலையைத் தாண்டிய நிலையான சமாதி என்பது எண்ணற்ற மூச்சு பேச்சு அற்ற நிலையாகும். எண்ணம், மூச்சு, பேச்சு ஆகிய இவற்றின் செயலுக்கும் செயலிழந்த நிலைக்கும் அதிதேவதையே ஸ்ரீமகாகணபதி ஆவார். எனவே, யோகத்தில் ஸ்ரீமகாகணபதியின் அருளின்றி எதுவும் நடக்காது. மேலும், மூச்சையடக்கிய நிலைக்குக் "கும்பகம்" என்று பெயர். அதன் அதிதேவதையும் ஸ்ரீமகாகணபதி யாவார். எனவே, அவர் யோகத்தில் பெரும் நிலைகளை ஆட்சி செய்யும் அதிபதியாக உள்ளார்.

### ஸ்ரீசங்கரரின் அத்வைதம்

அத்வைதம் என்பது மனிதனும் இறைவனும் இரண்டற ஒன்றாகக் கலந்து நிற்கும் தன்மையை உணர்வதாகும். ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இணைவதே அது. ஜீவாத்மா தன் நிலைமாறிப் பரமாத்மாவோடு இணைய வேண்டும். ஜீவாத்மா எவ்வாறு மாறும்? ஜீவாத்மா என்பது என்ன? அதில் அடங்கியிருப்பவை யாவை? இதனைப் புரிந்துகொள்ள வேண்டும். ஜீவாத்மா என்புது பல பிரிவுகளாகச் சிதறி இருக்கிறது. அதுவே மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு அந்தகரணங்களும், ஐம்புலன்களும், ஐம்புலன்களைச் செயல்பட வைக்கும் சக்திகளான தன்மாத்திரைகளாகவும் அவ்விதம் புலன்களின் செயல்களால் ஏற்படும் எண்ணம், பேச்சு, மூச்சு போன்ற செயல்களாகவும் ஜீவாத்மா தன்னிலை மறந்து செயல்படுகிறது. இதனை மாற்றி ஐம்புலன்கள் ஒடுங்கிய நிலையில், மூச்சு, பேச்சு, எண்ணமற்ற அமைதியில் நிற்கும், பிரம்ம நிஷ்டையில்தான் ஜீவாத்மா பரமாத்மாவுடன் இணைந்து "**அத்வைதம்**" என்ற இரண்டறக் கலந்து நின்று

தன்மயமாகியிருக்கும் அனுபவத்தைப் பெறுகிறான். அதாவது

1. மூச்சு, பேச்சு, எண்ணமற்ற நிலைவேண்டும். (புலன்வழி போகா நிலை)
2. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற பிரிவுகள் மறைய வேண்டும்.
3. பரமாத்மாவின் நினைவு ஒன்று மட்டுமே நிலைத்திருக்கும் "பற்றற்ற நிலை" நூறு சதவிகிதம் வேண்டும். இதுவே தவமாகும்.

அ) மேற்கூறியவற்றில் மூச்சின் செயல் மனத்தின் காரியமாகும். இதற்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி ஆவார். **திருமூச்சு** என்ற தெய்வீக மூச்சு அவருடையதாகும். மூச்சு, மற்றும் பேச்சின் பல நிலைகள் மாறிச்சென்று கலந்துவிடவேண்டும். இதற்கு அதிபதி ஸ்ரீமகா கணபதிதான். **சித்த விருத்தி** எனப்படும் அலைபாயும் மனத்தை அவ்விதம் அலைபாய வைப்பதும், அதனை அடக்கி ஆளும்போது தெளிந்த சித்தமாக இருப்பதும் ஸ்ரீமகாகணபதியின் செயலாகும். அவ்விதம் தெளிந்த சித்தத்தில் தான் இறைவன் குடி கொண்டிருக்கிறான். மூச்சின் கலைகளான இடா, பிங்களா, சுழுமுனை என்றவை ஸ்ரீமகாகணபதியின் ஆட்சிக்கு உட்பட்டவைகளாகும். இதில் சூரிய நாடியான '**பிங்கலை**' முற்றிலும் ஸ்ரீமகாகணபதியின் அருளின்பேரில் கிடைப்பதாகும்.

குறிப்பு:– பொதுவாக இடது நாசியில் வரும் சுவாசத்திற்கு "**இடா**"என்றும், வலது நாசியில் வரும் சுவாசத்திற்குப் "**பிங்களை**" என்றும் இன்று யோக நூல்கள் வர்ணிக்கின்றன. "**பிராணாயாமம்**" என்னும் மூச்சையடக்கும் யோகப் பயிற்சியிலும் சாதகர்கள் வலது நாசியில் வரும் சுவாசத்தை பிங்களை (அல்லது) சூரிய நாடி என்று நினைக்கின்றனர். ஆனால், உண்மை அது அன்று. பதஞ்சலி யோக நூல்கள் விளக்கும் சூரியநாடி வலது நாசியிலிருந்து வருகிறது என்று கூறுகிறதே தவிர, எப்போது, எந்த யோக சாதனையில், அவ்விதம் சூரிய நாடி வலது நாசியில் வரும் என்று கூறவில்லை. இடது வலது நாசிகள் வழியாக மாறிமாறிச் சுவாசம் நடப்பது இயற்கையின் செயல். அதனால் வலது நாசி வழியாகச் சுவாசம் வந்தால் அது சூரியநாடி (அல்லது) பிங்களை என்று சொல்வது தவறு. உண்மையான சூரிய நாடியை யோக முறையில், 'சித்தர்கள்' கண்ட முறையில்தான் செயல்பட வைக்கவேண்டும். அவ்விதம் சூரிய நாடியை இயங்க வைத்த நிலையே சாதகனுக்கு ஒரு பெரும் சித்தியாகும். அந்தச் சித்திக்கு அதிதேவதையே ஸ்ரீமகாகணபதி ஆவார். எனவே, சூரிய நாடி செயல்பட ஸ்ரீமகா கணபதியின் அருள்வேண்டும். ஆக

யோகிகளுக்கு அவர் அருள் மிகமிக அவசியம். மேலும், அகங்காரம் என்ற நமது எண்ணத்தை நீக்குவது மிகக் கடினம். நான் / எனது / என்உடல் என்ற தத்துவங்கள் நீக்கப்பட்ட நிலையாகும் அது. தேவர்களுக்கே அது சாத்தியமாகாத ஒன்றாகும். **பிரம்ம ரிஷிகளுக்கு மட்டும் அகங்காரம் நீங்கி இருக்கும்.** மற்ற ரிஷிகளுக்குக் கூட அந்நிலை கைக் கூடாது. எனவே, **அகங்காரம்** முற்றிலும் நீங்கிய நிலையான **பிரம்ம நிஷ்டையில்தான் பரமாத்மாவுடன் ஜீவாத்மா கலக்க முடியும்.** அதுவே, அத்வைத அனுபவம். அதுவும் ஒரு சில வினாடிகளே நின்று மறையக் கூடிய தெய்வீக நிலையாகும். அவ்விதம் அகங்காரம் நீங்கிய நிலைதான் **முற்றிலும் பற்றற்ற நிலை** என்பது. அந்தப் பற்றற்ற மனத்திற்கு அதிதேவதையே ஸ்ரீமகா கணபதி ஆவார். ஆகையால்தான், முனிவர்களுக்குக் கூட ஸ்ரீமகா கணபதியின் அருள் கிடைப்பது நிச்சயமில்லை. அவர் அருளின்றி அத்வைதம் என்ற பரமாத்மாவுடன் இரண்டறக் கலக்கும் சித்தி கைக் கூடாது.

ஜீவாத்மாவுக்குள் இருக்கும் பகுதிகள் பல. அவை பின்வருமாறு:

1 அந்தகரணங்கள் நான்கு
(மனம், புத்தி, சித்தம், அகங்காரம்)

2 பஞ்ச கர்மேந்திரியங்கள்,

3 1. பஞ்ச ஞானேந்திரியங்கள்

4 2. பிரணவ நாதம்

பொதுவாக, யோக சாதனையில் சாதகன் செய்ய வேண்டியன: (யோகத்தில் ஸ்ரீமகா கணபதியின் செயல்கள்):

1 எண்ணத்தை நிறுத்துதல் = **சித்தம் தெளிதல்** =
அதன் அதிதேவதை ஸ்ரீ மகாகணபதி.

2 பேச்சை நிறுத்துதல் = பேச்சின் அதிபதி ஸ்ரீ மகா கணபதி

3 மூச்சை நிறுத்துதல் = மூச்சின் அதிபதி ஸ்ரீ மகா கணபதி

4 புலன்களை அடக்குதல் = சித்த விருத்தி அடங்குதல் =
இதன் அதிபதி ஸ்ரீமகா கணபதி.

5 புலன்கள் (அந்தர்முகமாக) உள்நோக்கிச் செலுத்துதல் =
இதன் அதிபதி ஸ்ரீகணபதி.

6 தியான நிலையை அடைதல் = தியானம் ஸ்ரீ கணேசனின்
ஆதிக்கம்.

7 தியானத்தில் முதிர்ச்சி பெறுதல் = அகங்காரம் நீங்குதல் =
இதுவும் ஸ்ரீகணேசன் அருள்

8 பிரம்ம நிஷ்டை அடைதல்
பஞ்சகோசங்களைக் கடந்து விஞ்ஞானமயத்தில் நிலைப்பது

9 பிரம்ம விருத்தி பெறுதல். இதன் அதிபதி ஸ்ரீ கணபதி

10 பிரம்ம உபதேசம் பெறுதல். அதாவது இறைவனின் திருவாக்கை ஞான உபதேசமாகப் பெறுவது. அதுவே ஞானசம்பந்தர் பெற்ற (தோடுடைய செவியன்) என்ற பெரும் யோகநிலை பிரணவத்தின் அருளால் ஏற்படுவது இது. பிரணவம் ஸ்ரீமகா கணபதியின் அருள்கொண்டு வருவது.

எனவே, மனிதன் தெய்வமாக மாறுவதும், தெய்வத்துடன் இணைவதும், தெய்வத்தின் ஞானஉபதேசத்தைப் பெறுவதும் ஸ்ரீமகாகணபதியின் அருளின்றி நடக்காத செயல்களாகும்.

**மேலும் ஸ்ரீகணேசனின் ஆதிக்கத்திலுள்ள சில தத்துவங்கள்:**

பஞ்ச பூதங்களும் அவரிடமிருந்து தோன்றுகின்றன. மேலும் பிருதிவி என்னும் (மண்) பூதம் அவரது இருப்பிடமாகும். பிருதிவி என்றால் வெறும் மண் அல்ல. "**மண்**" என்பது சுத்த சத்துவ குணம். பரபிரம்மம் அதுவே. மண்தான் பிரணவ நாதம் அதன் அதிபதி ஸ்ரீமகா கணபதி ஆவார். மண் என்ற பிருதிவி பூதம்தான் பரமன். அப்பு (அல்லது) ஜலம்தான் **அம்பிகை**. எனவேதான், மண்ணும் ஜலமும் இணை பிரியாதவை. ஜலத்தை மண் கவருகிறது. அம்மை அப்பன் இருவரின் ஒற்றுமையை இது குறிக்கிறது. எனவே, மண் என்ற பிருதிவி பூதத்தின் அதிபதியாகவும் அப்பு என்ற ஜலம் என்ற பூதத்தின் அதிபதி யாகவும் ஸ்ரீகணபதி விளங்குவதால், இவரது அருள் இன்றி யோகிகள் வெற்றி காண முடியாது. **சங்கநாதம்** கேட்க முடியாது. ஐம்புலன்களை அடக்க முடியாது. பிரம்ம ஞானமும் பெற முடியாது. எனவே ஸ்ரீ மகா கணபதியின் அருள் யாவருக்கும் தேவை. மேலும், ஸ்ரீமகா கணபதியின் ஆட்சி நடக்கும் பகுதிகளைப் பார்ப்போம்.

**2. கும்பகம் என்ற சித்தி ஸ்ரீமகா கணபதியின் அருள்:**

அ.) அஷ்டாங்க யோகத்தில் பிராணாயாமம் என்ற மூச்சையடக்கும் பயிற்சி உள்ளது. இதனை அடக்க அவர் அருள் தேவை. மூச்சு அவரது ஆதிக்கத்தில் உள்ளது. மூச்சையடக்கிய நிலையான கும்பகம் அவரது ஆதிக்கத்தில் உள்ளது.

ஆ.) பேச்சும் அவரது ஆதிக்கத்தில் உள்ளது. பேச்சின் அந்தர்கதம் மற்றும் ஸ்தம்பனம் அவர் அருள்.

**3. பஞ்ச கோசங்களும் மகா கணபதியும்:**

பஞ்ச கோசங்கள் ஆத்மாவை மறைக்கின்றன. அவற்றைத் தாண்டித்தான் ஆத்மாவின் போதனைகளை அறிய முடியும். அதுவே ஸ்ரீவித்யை. அவ்விதம் பஞ்ச கோசங்களையும் தாண்டிச் செல்ல ஸ்ரீமகாகணபதியின் அருள் தேவை. கடைசியில் உள்ள இரண்டு கோசங்களும் இவரது ஆதிக்கமாகும்.

**4. ஏழு ஸ்வரங்களும் கணபதியின் ஓம்காரத்தில் உண்டு:**

நாதோபாசனையில், ஓம்காரம் ஏழு ஸ்வரங்களான ஸ, ரி, க, ம, ப, த, நி என்பவை தனக்குள் அடக்கி இருககிறது. அந்த ஓம்காரம் என்னும் பிரணவத்தின் மற்றும் அதன் நாதத்தின் அதிபதி ஸ்ரீமகா கணபதி ஆவார். எனவே, நாதோபாசனையிலும் அவரது அருள் மிக அவசியம்.

**5. அம்பிகையும் ஸ்ரீமகா கணபதியும் ஒன்று:**

மனித தேகத்தை இயக்கும் சக்தி அன்னை மகா சக்தி. அவளது அருளின்றி ஜடமாகிவிடும் நமது தேகம். அந்த இயக்கும் சக்தியாகவும் ஸ்ரீமகா கணபதி இருக்கிறார். எனவே, ஸ்ரீ அம்பிகையின் செயலையும் இவர் செய்ய வல்லவர். வல்லப கணபதியின் தத்துவமும் இங்கு நினைவு கூறலாம். எனவே ஆதிசக்தியின் செயலையும் செய்யும் ஆற்றல் இவருக்கு உண்டு. எனவேதான், ஸ்ரீவித்தையிலும் இவரது துணை தேடப்படுகிறது. முழுமுதற் கடவுள் என்றும் அழைக்கப்படுகிறான்.

**6. ஐங்கரங்கள் கணபதிக்கு மட்டுமே உண்டு:**

தேவதைகளுக்கு அதிகபட்சமாக நான்கு கரங்கள் இருப்பது தெரிந்ததே. ஐந்து கரங்கள் கொண்ட ஒரே தெய்வம் ஸ்ரீமகா கணபதிஆவார். ஐந்தொழில்களான படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து காரியங்களை அவை உணர்த்துகின்றன. எனவே, எல்லாம் செய்ய வல்லவர் ஸ்ரீமகா கணபதி என்பது தெளிவு.

**7. கணபதியே குண்டலினி:**

குண்டலி சக்தி என்பது ஒரு பெரும் தெய்வீக சக்தி என்பது யாவரும் அறிந்ததே. அந்தக் குண்டலினி சித்தியைக் காணாத மகான்களோ/ யோகிகளோ இல்லை. காரணம், ஒருவன் யோகி (அ) சித்தர் ஆவதற்கு முதற்படியே குண்டலினி சித்திதான். அதுதான் அவர்களுக்கு L.K.G. பாடம் போன்றது. அங்கிருந்துதான் அவர்களது யோகசாதனை / முயற்சி யாவும் தொடங்குகிறது. அந்தக் குண்டலினி சக்தி மற்றும் / சித்திக்கு

அதிதேவதைதான் இந்த ஸ்ரீமகா கணபதி ஆவார். ஸ்ரீமகா கணபதியின் இடையில் ஆபரணமாக தரித்துள்ள நாகம் உணர்த்துவது என்னவொன்றால் குண்டலினி சித்திக்கு அவரது அருள் அவசியம் என்பதுதான். மேலும், குண்டலினி நமது மூலாதாரம் என்ற முதற் சக்கரத்திலிருந்து உறக்கத்திலிருந்து விழித்து மேலே கிளம்பும். அந்த மூலாதாரத்தின் அதிபதியும் இவரே.

### 8. கணபதியே நாராயணன் அம்சம்:

ஸ்ரீமந் நாராயணனின் அம்சத்திலும் இவர் கலந்துள்ளார். அவரது சக்திகளுக்கு ஆதார சக்தியாகவும் விளங்குகிறார். எனவே, விஷ்ணு மாயையும் இவருக்கு அடங்கி நடக்கும் என்பது தெளிவு. வைணவர்களும் இவரை விஷ்வக்சேனர் என்று ஆராதிக்கும் தத்துவம் இதுவே.

### 9. கணபதியே நவகிரகங்களில் குரு பகவான்:

நவகிரகங்களில் மிகப் பெரியதும் எல்லா மங்கள காரியங்களையும் நடத்தும் கிரகமாகவும், எந்தக் கிரகம் பார்த்தால் கோடி தோஷங்கள் நிவர்த்தி ஆகும் என்று ஜோதிட நூல்கள் வர்ணிக்கின்றனவோ அப்படிப்பட்ட "வியாழன் (அல்லது) குரு (தேவ குரு)" என்ற கிரகம் ஸ்ரீமகா கணபதியின் அம்சமாகும். எனவேதான், அவரது அருளை வேண்டாதார் எவரும் இலர்.

### 10. சுழுமுனை:

இந்நாடி தான் ஞானதிருஷ்டிக்கு வித்து. அதன் மூல இருப்பிடம் காதுக்கும் மூக்கின் துவாரத்திற்கும் இடையே உள்ளது. இதைச் சுழுமுனை என்றும் கூறுவார்கள். இதன்மூலம்தான் தேவ வாக்கு நமக்குக் கிடைக்கிறது. ஞானக்கண் செயல்படுகிறது. ஞானதிருஷ்டியில் பல விஷயங்கள் இந்தச் சுழுமுனை (அல்லது) சுஷூம்னை மூலம்தான் மகரிஷிகளுக்கும் கிடைக்கிறது. மேலும், பரமாத்வோடு தொடர்பும் கிடைக்கிறது. இந்தச் சுஷூம்னை என்ற ஒரு இணைப்பிற்கு அதிதேவதை ஸ்ரீமகா கணபதி ஆவார். எனவே, இவரது துணையின்றி வேத ரிஷிகளும் செயல்பட முடியாது. இந்தச் சுழுமுனை நன்கு இயங்கத்தான் ஸ்ரீகணபதியைத் தொழும்போது தலையில் காதின் அருகில் நாம் குட்டிக் கொள்கிறோம். அவரின்றி சுஷூம்னை செயல்படாது.

### 11. கணபதியே பிரணவம்:

மேஷம் முதல் மீனம்வரை பண்ணிரண்டு இராசிகள். இதில் மேஷம் முதல் சிம்மம் வரையுள்ள ஆறு இராசிகளும் தேவகதி. சிம்மம் முதல் மகரம் வரை மனித கதி. மகா குண்டலி ஸ்தானம் என்பது இந்த பண்ணிரண்டு

இராசிகளில் தேவதாருவின் சஞ்சாரமாகும். தேவதாரு என்பது பிரஜாபதி உலகம். தெய்வ சொரூபங்களான இராமர், கிருஷ்ணர் போன்ற அவதாரங்கள் அங்கிருந்தே தோன்றுகின்றன. அதற்குத் தலைமை ரிஷபம். **ரிஷபம்தான் பிரணவ ஸ்தானம்.** தெய்வப் போக்கின்முதல் காரணம். பிருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பஞ்ச பூதங்களும் ரிஷபத்தில் அடக்கம். அந்த ரிஷப ராசியே ஸ்ரீமகாகணபதியின் உடலாகும். அவரே பிரணவஸ்ரூபன். நாராயணன் அம்சமும் அவரே. எனவே, ஸ்ரீமகா கணபதியின் அருளும், வழிபாடும் யாவருக்கும் அவசியம். நவக்கிரகங்களில் **கேது பகவான்** இவரது அம்சமாகும். அவரை **ஞானகாரகன் (அல்லது) மோட்சக்காரகன்** என்று ஜோதிட சாஸ்த்திரம் வர்ணிக்கிறது. இந்தக் கேது பகவான் ஸ்ரீமகா கணபதியின் அம்சமாகும். எனவே, ஞானமும் மோட்சமும் தேவை என்றால் ஸ்ரீமகா கணபதியின் அருள்வேண்டும்.

**12. திருமூச்சுக்கு அதிபதி ஸ்ரீ மகா கணபதியே:**

நமது ஸ்வாசம் சாதாரணமானது. புலன்கள், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், காம க்ரோத, லோபம், மதம், மார்ச்சர்யம் போன்ற தீய குணங்களின் சேர்க்கையோடும் ரஜஸ், தமஸ் போன்ற தீய குணங்களும் கூடிய மனிதனின் பாழ்நிலையில் உருவாகி ஒடிக் கொண்டிருப்பதாகும். இதற்குச் **சிறுமூச்சு** என்று பெயர். அது யோகத்தில், தவத்தில், புலனடக்கம் கொண்டு பிறவிக்கடலை நீக்கிக் கடந்த மகான்களும் 18 சித்தர்களின் ஸ்வாசத்திற்கு **"திருமூச்சு"** என்று பெயர். பாபங்கள் கலக்காத **தெய்வீக ஸ்வாசம்** ஆகும் அது. அதன் அதிபதி ஸ்ரீமகாகணபதி ஆவார். எனவே, யோகிகளும் சித்தர்களும் வானவரும் போற்றும் ஒரே தெய்வம் ஸ்ரீமகா கணபதி.

**13. சூரிய நாடி, சந்திர நாடி:**

சூரிய நாடி, சந்திர நாடி என்றும் (சூரிய கதி, சந்திர கதி என்று) யோகத்தில் சாதகனின் தேக இயக்கங்கள் மாறிமாறிச் செயல்படுவதும் ஸ்ரீமகா கணபதியின் காரியமாகும். புலன்கள் செயல்படுவதே இவரது செயலாகும். எனவே, மனிதன் பூமியில் உயிர்வாழத் தேவையான புலன்கள் இவரது கருணையில்தான் செயல்படுகின்றன. புலனடக்கமும் இவரது கருணையே.

**14. ஐந்து தேகங்கள்**

ஐந்து தேகங்கள் யோகத்தில் கூறப்படுகின்றன. வடலூர் இராமலிங்க ஸ்வாமிகள் (வள்ளலார்) ஐந்துவிதமான தேகங்கள் உள்ளன என்று கூறுகிறார். அவைகளாவன:

அ. இருள்தேகம்,
ஆ. மருள்தேகம்,
இ. சுத்ததேகம்,
ஈ. பிரணவதேகம்,
உ. ஞானதேகம்

என்பவைாம். இவைகளைப்பற்றி வேறு ஓரிடத்தில் விரிவாக காணலாம். யோகத்தில் புலனடக்கத்தில் சாதகன் வெற்றி பெற்று முக்திக்கு வித்தான யோக சரீரத்தைப் பெறுகிறான். இதுவே **பிரணவ தேகம்** (அல்லது) சுவர்ண தேகம் என்று அழைக்கப்படும். இந்தப் புனித தேகத்திற்கு அதிபதியே ஸ்ரீமகா கணபதி ஆவார். எனவேதான், யோகிகள் போற்றும் கணபதியின் அருளை யாவரும் விரும்புகின்றனர். **பிரணவ தேகம்** பெற்றால்தான் பிரம்ம லோகம் செல்ல முடியும். சிரஞ்சீவி என்ற நிலையைப் பெறுவதே அதற்குப் பின்னர்தான். **சோடச மகா சித்தியும்** அங்குதான் உண்டாகிறது. ,

**15. விநாயகருக்குக் கஜமுகன் என்ற பெயர் உண்டு:**

கஜமுகன் என்றால் கஜம் + முகம்;
கஜம் என்றால் பரமன்,
முகம் என்றால் நிற்குமிடம்

சுத்த சாத்வீக தன்மையில் உள்ள பேரருள் ஸ்தானம் அது. அதற்கு அதிதேவதை இந்த ஸ்ரீமகா கணபதி ஆவார். **கைலாய பதம்** என்று அழைப்பார்கள். அந்தப் பேரருள் ஸ்தானத்தில்தான் தேக தத்துவமும், ஆத்ம தத்துவமும் இணைகிறது. அதைத்தான் ''மகாமேரு'' என்று ஸ்ரீவித்யை என்ற உபாசனா மார்க்கம் கூறுகிறது. அதன் அதிதேவதை இந்த மகா கணபதி ஆவார். எனவே, ஸ்ரீவித்தையிலும் அவரது பங்கு மிக முக்கியமானது.

**16. ஞானஉபதேசத்திற்கு ஸ்ரீமகாகணபதி:**

மனித உடல் பஞ்ச கோசங்களான அன்னமயம், பிராணமயம், மனோமயம், ஆனந்த மயம், விஞ்ஞானமயம் என்று பல பகுதிகளாக இயற்கையில் அமைந்து ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் பிரித்து வைத்திருக்கிறது. இவற்றை மீறி பஞ்ச கோசங்களையும் தாண்டி மனிதன் பிரம்ம நிஷ்டையில் இருக்கும்போது ஜீவாத்மாவுடன் பரமாத்மாவின் தொடர்பு வலுக்கிறது. இதில் **ஆனந்தமய கோசம்** என்பது பிரம்மானந்த பேரலைகள் கொண்ட நிலையாகும். அதுவே **பிரணவ நாதமாகும்**. நம்மை சொக்கவைக்கும் அது. இங்கு யோகிகளின் மதியும் மயங்கிவிடும். அதனை மீறி **விஞ்ஞானமயம்** என்ற உத்தம நிலைக்கு அவர்கள் தவத்தில் முன்னேற வேண்டும். விஞ்ஞான

மயத்தில்தான் இறைவனின் ஞானஉபதேசம், பிரம்ம உபதேசம் ஆகியவை போதனைகளாகக் கிடைக்கின்றன. அவ்விதம் விஞ்ஞானமயத்தில் கிடைத்ததுதான் வேதம், உபநிஷதம், கீதை என்பன. இங்கு மேற்கூறிய **ஆனந்தமயகோசம்** என்னும் பேரானந்த அலைகள் சூழ்ந்த யோகநிலைக்கு அதிதேவதைதான் ஸ்ரீமகா கணபதி ஆவார். அவரது அருளின்றி ஆனந்தமயகோசத்தைத் தாண்ட முடியாது. அவ்விதம் வெற்றி பெற்றாலொழிய ஞானஉபதேசம் கிடைக்காது. எனவே, ஸ்ரீமகா கணபதியின் அருளின்றி இறைவனின் ஞானபோதம் கிடைக்காது. தேவர்களும் அவரை வணங்குவது அதனால்தான். வர்ணாஸ்ரமத்தில் பிரம்மசர்யம் என்ற பகுதி பிரபல்யமானது. பீடாதிபதிகளாக பெரும்பாலும் திருமணம் ஆகாத பிரம்மச்சாரிகள்தான் வருகிறார்கள். மனிதனின் உடலில் இரத்தம் இருக்கிறது. ஒரு பகுதி இரத்தம் சுக்கிலமாக (வீரியமாக) மாறுகிறது. இந்த வீரியத்தைப் பிரம்மசாரிகள் பாதுகாக்கிறார்கள். இதில் பல சக்திகள் மறைந்துள்ளன. பீடாதிபதிகள் இவ்விதம் பிரம்மச்சர்ய விரதத்தைக் கடைப்பிடித்துப் பெரும் ஆற்றல்களையும் தெய்வீக சக்திகளையும் பெறுகிறார்கள். இந்த வீர்யம் (அல்லது) சுக்கிலம் யோக சாத்திரத்தில் சித்தர்கள் பாணியில் **வெண்ணீர்** என்று அழைக்கப்படுகிறது. இதன் அதிதேவதையே ஸ்ரீமகா கணபதி ஆவார். எனவே, பீடாதிபதிகளும், யோகிகளும், பிரம்மசாரிகளும் விசேஷமாக வணங்க வேண்டிய தெய்வம் இந்த ஸ்ரீமகா கணபதி ஆவார்.

**17. ஓம்காரம் மற்றும் பஞ்சபூதத்தில் கணபதி:**

பஞ்ச பூதங்களாவன மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பன. இவற்றில் **மண்** (பிருதிவி) என்பது மிகவும் சக்தி வாய்ந்தது. மீதி எல்லாம் அதில் அடங்கும். இந்த மண் என்ற பூதத்திற்கு அதிபதி ஸ்ரீமகாகணபதி ஆவார். ஸ்ரீமகா கணபதி ஓம்காரத்தின் சொரூபமாக விளங்குகின்றனர். அவரே "ஓம்" என்ற மூல கணபதி ஆவார். ஓம்காரமே பிரணவம் எனப்படும். பிரணவத்தில் அதாவது, "ஓம்" என்ற ஒலியில் உள்ள எழுத்துகளாவன – அ, உ, ம என்ற மூன்றும், ஓம் என்ற சொல் ஒலித்த பின்னர் அதை முடிவடையும் இடம் "ம்" என்ற நிலையில் அதை அர்த்த மாத்திரை என்பார்கள். மண் என்ற பிருதிவி பூதத்தின் கூறுகள் நான்காகும். அவை

பறநாதம் (அகாரம்)
பறபிந்து (உகாரம்)
பறசிவன் (மகாரம்)
பறசக்தி (அர்த்த மாத்திரை)

என்பதாகும். மண் என்ற பூதத்தின் அதிபதியான ஸ்ரீமகா கணபதியின் உடல்தான் இந்த மேற்கூறிய நான்கு பகுதிகளும் ஆகும். எனவே, பிரணவத்தின் சொரூபமான ஸ்ரீமகா கணபதியின் உடலாக ஓம்காரம் விளங்குகிறது.

## 18. பரமாகாசத்தில் ஸ்ரீமகா கணபதி

பூதாகாசம், பிரணவாகாசம், சிதாகாசம், பரமாகாசம் என்று நான்கு வகை ஆசாசங்கள் யோக நிலைகளில் உள்ளன. ரிஷிகளும், யோகிகளும் தங்கள் சாதனையில் முன்னேற்றத்தில் இவற்றைக் கடந்து சென்று பரமாகாசத்தின் உச்சத்தில் இறைவனுடன் உறவாடும் நிலையை அடைகிறார்கள். இதில் பிரணாவாகாசம் என்ற பெரும் தவநிலைக்கும் அதிபதி ஸ்ரீமகாகணபதி ஆவார். எனவே, இவரது கருணையின்றி யோகிகள் முன்னேற முடியாது. பரமாகாசமும் இவரது அருளின்றிக் கிட்டாது. எனவேதான் முழுமுதற் கடவுளாக அவரைக் கருதுகின்றனர்.



# ஸ்ரீமகா கணபதி ரகசிய போதனைகள்
# (அமரகவி சித்தேஸ்வரிடம் அறிந்த ஞானம்)

மேற்கூறிய போதனைகளில் உள்ள தத்துவங்களில் விளக்கம் தரவேண்டிய முக்கியச் சொற்கள்:– **1) திருமூச்சு, 2) ஏகோபித்த மனமே பிரணவம், தெய்வ நிலை, உயிர்நிலை, அஷ்டாங்க யோகசித்தி, பூர்ணஞானம், மனசாட்சி** என்பதும், **3) துரியம், 4) அத்யாத்ம ஞானம், 5) உச்சி, 6) தத்துவ ஞானபோதம்** அதன் விளக்கங்களைக் கீழே காணலாம்.

**1. மூச்சு**

நாம் சுவாசிப்பது அசுத்தமான காற்று. உண்மையில் சுத்தமான மூச்சுக் காற்று நமக்குள் உள்ளது. பிறக்கும் முன் கருவில் சுத்தமாக இருந்த அது பிறந்தபின் பிரிந்து நமது எண்ணமாகவும் சொல்லாகவும் பேச்சாகவும் மூச்சாகவும் மாறிப் புலன்களுடன் சேர்ந்து வெளிமுகமாகச் செயல்பட்டு அசுத்தமாகி உள்ளது. இதனைச் சுத்தம் செய்து மீண்டும் சுத்தமான காற்றாக மாற்றவேண்டும். இந்தச் சுத்தமான மூச்சுக்காற்று தெய்வீகமானது. அஷ்டமாக சித்தியையும் தரவல்லது. இதனை மீண்டும் பெறுவதே யோகம். இந்தச் சுத்தமான மூச்சுக் காற்றைத்தான் **திருமூச்சு** என்று யோகங்களும் சித்தர் பாடல்களும் புகழ்கின்றன. திருமூச்சு என்பதுதான் "அமுதகலை" (அல்லது) **சோடச கலையின் ஊற்று** எனப்படுவது. அதுவே ஞான திருஷ்டி. இதன் அதிபதி ஸ்ரீகணநாதன் ஆவார். எனவே, அவரது அருளின்றி இழந்த இதனைப் புலனடக்கத்திலும் தவத்திலும் மீண்டும் பெறுவது இயலாத காரியம். எனவே, எல்லா யோகிகளும் தவசிரேஷ்டர்களும் விரும்புவது ஸ்ரீகணநாதனைத்தான் என்பது உண்மை.

**2. மனமே பிரணவம்**

பிரணவம் பல இடங்களில் பலவிதமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. எனினும் மனத்தைக் கொண்டு பிரணவத்தை வர்ணிக்கவேண்டும் என்றால் எப்படிக் கூறலாம் என்று பார்ப்போம்.

அ) "மனம்" என்பது வெளிநோக்குத் தன்மை உடையது. அதாவது, அந்தர்முகம் எனப்படும் தியானநிலைக்குச் செல்லாமல் புலன்வழியாகத் தேகத்திற்கு வெளியே உள்ள பொருள்கள்மீது செல்லும் தன்மை கொண்டது.

ஆ) மனம் சலனமுள்ளது. சித்தர்களை இதனை ஒரு குரங்கிற்கு

உதாரணமாகச் சொல்கிறார்கள். சதா அலைபாயும் தன்மையுடையது. ஐம்பூதங்களில் (காற்று) வாயுத் தத்துவம் இதனைச் சேர்ந்தது. எனவே, காற்றைப்போல அலையும் இதனை அடக்கவேண்டும். அதுவே யோகம் / தவம் என்பதாகும்.

**இ) மனம் அலைபாய்வதால் தன் தெய்வீகத் தன்மையை இழக்கிறது.** எனவே, மனம் அலைபாய்வதை நிறுத்திவிட்டு, "ஏகோபித்து" (அ) ஸ்திரமாக ஒரே நிலையில் நின்றுவிட்டால், அதற்குத் தெய்வீகத் தன்மை வந்துவிடுகிறது. அவ்விதம் ஏகோபித்த மனதுதான் "பிரணவம்" என்ற பொருளாக மாறிவிடும். அந்தப் பிரணவத்தின் அதிபதியே ஸ்ரீகணநாதன்தான். எனவே, அவனருளின்றி அலையும் மனம் அலையாமல் சிதறும் மனம் சிதறாமல் 'ஏகாக்கிர சித்தத்துடன் ஏகோபித்து இருக்கும் தெய்வ நிலை' என்று அழைக்கப்படும் பிரணவம் பொருளாக மாற முடியாது. எனவே, ஸ்ரீகணநாதன் அருளைப் பெற நாம் முயல வேண்டும். புலன்களின் செயலும் அவரே. அவற்றின் ஒடுக்கமும் அவரே என்பது இங்கு உணரப்படுகிறது.

**3. அஷ்டயோக சித்தி:**

முன்வினைப் பயனாகப் புலன்கள், மனம், புத்தி, தேக இயக்கம், எண்ணம், மூச்சு பேச்சு போன்ற இவை யாவும் செயல்படுகின்றன. கர்மவினைக்கு ஏற்றவாறு நமது தேக அமைப்புகள் பிறப்பில் உருவாகின்றன. கர்மவினைக்கு ஏற்பச் செயல்களும் தேகத்திலும் அறிவிலும் நடக்கின்றன. யோகத்தில் இவற்றை அடக்குவதுதான் முக்கியச் சாதனையாகிறது. அதற்கு மனத்தைத்தான் கடிவாளமாகப் பிடித்து அடக்கப்படுகிறது. அந்த மனம் அடங்கினால் மற்றவை எல்லாம் அடங்கிவிடும். மனம் அப்படி அடக்கப்பட்டால் அதுவே தெய்வ நிலை (அல்லது) பிரணவ சாதனை (அல்லது) அஷ்டாங்க யோக சித்தி என்று பதஞ்சலி யோக சாத்திரமான "**அஷ்டாங்க யோகம்**" கூறுகிறது. எனவே, மனத்தின் ஏகோபித்த நிலைக்கு அதிபதியான ஸ்ரீகணநாதனை யோகம் பயிலும் அனைவரும் அன்போடு வணங்குகின்றனர். மேலும், ஆறு ஆதார சக்கரங்களில் முதன்மையான மூலாதார சக்கரத்தின் அதிதேவதையும் இவரே. எனவே, அஷ்டாங்க யோக சித்தி என்றால் ஆனைமுகனைத் தொழுது வெற்றிபெற வேண்டும் என்பது தெளிவாகிறது.

**4. ஏகோபித்த மனமே உள் "உயிர்நிலை"**

மனிதன் உயிரோடு இருப்பதன் சாட்சி அவன் மூச்சு, பேச்சு, சொல், மனம், புத்தி, தேக இயக்கம் இவை செயல்படுவதாகும். யோகம் (அ) தவத்தில்

இவை யாவும் அடங்கிவிடுகின்றன. அதுவே ஏகோபித்த மனம். அதாவது மேற்கூறிய தேக சலனங்கள் யாவும் அடங்கிவிட்ட நிலை இறப்பைக் குறிக்கும். அதாவது, மனிதன் இறந்த நிலையில்தான் அவனது தேக சலனங்கள் யாவும் செயலற்று அடங்கிவிடுகின்றன. அந்த இறப்பில் நாம் உள்ள நிலையை அடைவதுதான் "ஏகோபித்த மனம்" என்ற நிலை. எனவே, இறப்பைக் கடந்த ஆனால் இறவாத நிலையது. அதுவே நிஷ்டை(துரியம்) அஷ்டாங்க யோக சித்தி என்பது. எனவே, மனம் அடங்கி ஏகோபித்திருக்கும் நிலைதான் நமது உயிர்நிலை என்பதை நாம் அறியவேண்டும். அதனை அடைவது சுலபமல்ல. பல ஜன்மங்களில் செய்த தவப்பலன்களால் மட்டுமின்றி இறைவனின் பேரருள் துணையுடன் சென்று இறப்பை வெல்லும்நிலைதான் ஏகோபித்த மனம் என்னும் நமது உயிர்நிலையைப் பிடிப்பது. அதன் அதிபதி ஸ்ரீகணநாதன் ஆவார். அவர் அருளின்றி வெற்றி இதில் கிட்டாது என்பது உண்மை.

### 5. பூரண ஞானத்திற்கு ஸ்ரீகணநாதன் துணை

ஞானம் இரண்டு வகை:

1. புலன்களால் அறிவது,
2. இறையுணர்வால் அறிவது (ஏகோபித்த மனத்தால் அறிவது).

முதலாவது சிற்றறிவு, இரண்டாவது பேரறிவு தரும் ஞானம். ஞானிகள், சித்தர்கள், பிரம்ம ரிஷிகள் இவர்கள் யாவரும் புலன்களை அடக்கி, மனத்தை அடக்கி, ஏகோபித்த மனம் என்று மேற்கூறிய நிலையை அடைந்துதான் இறைவனின் பெரும் கருணையால் கிடைக்கும் "ஞான போதங்களைப்" பெற்றார்கள். உதாரணமாக "ஞானப்பாலுண்ட" திருஞானசம்பந்தர் பெற்ற போதமாகும். அப்படித் தெய்வீக ஞானபோதனைகளைப் பெற ஏகோபித்த மனம் வேண்டும். அதற்கு ஸ்ரீகணநாதன் துணை அவசியம். எனவே, ஸ்ரீகணநாதன் அருளைக்கொண்டு "ஞான உபதேசம்" (அல்லது) " பிரம்ம உபதேசம்" பெற முடியும்.

### 6. ஏகோபித்த மனம்தான் துரியம்:

விழிப்பு, கனவு, உறக்கம் என்ற மனிதனின் மூன்று நிலைகளைத் தாண்டி நான்காவது துரியம் என்ற நிலையுண்டு. இது சாதாரண மனிதனுக்குச் சாத்தியமில்லை. யோகிகளுக்கும், தவச்சிரேஷ்டர்களுக்கும், பிரம்ம ஞானிகளுக்கும் உரிய யோக நிலையாகும். ஔவைக் குறள் என்ற யோக நூலில் ஔவையார் துரியத்தை பின்வருமாறு வர்ணித்துள்ளார். மண்டிலம் ஒரு மூன்றும் (சூரிய, சந்திர, அக்னி) வாயு ஓர் பத்தும் (பிராணன்,

அபானம், வியானன், உதானன், சமானன் என்ற ஐந்து முக்கிய பிராணன்களும் நாகன், கூர்மன், தேவதத்தன், தனஞ்சயன் மற்ற உப பிராணன்களும் இவைதான் நமது உடலை இயக்கும் சாதனங்கள். இவைகள் அடங்கிவிட்டால் அதுவே "இறப்பு") அடங்கிய வீடு என்று வர்ணிக்கிறார். எனவே, துரியம் என்ற நிலைதான் ஏகோபித்த மனம். அதுவே சாதாரண மனிதனுக்கு இறப்பு. யோகிகளுக்கும் ஞானிகளுக்கும் இறவாமல் இறந்து கிடக்கும் "துரியம்" (அ) ஏகோபித்த மனம் என்ற யோக நிஷ்டை யாகும். இந்த துரியம் என்ற நிலையைத்தான் சப்த லோகங்களிலுள்ள "**மகர் லோகம்**" எனப்படுகிறது. எனவே, ஏகோபித்த மனம் என்ற பிரணவம்தான் ஸ்ரீகணநாதன் என்பதையறிந்து யோகிகளும் ஞானிகளும் அவரைப் பணிந்து யோகநிலைகளில் ஞானத்தைப் பெறுகிறார்கள். ஆகவே, ஏகோபித்த மனமே பிரணவம் தெய்வநிலை, உயிர்நிலை, மனசாட்சி, அஷ்டாங்க யோகசித்தி, பூரண ஞான ஊற்று என்று பல்வாறு வர்ணிக்கப்படுகிறது.

**7. ஏகோபித்த மனமே "மனசாட்சி"**

நமது எண்ணங்களையும் செயல்களையும் இறைவன் நமக்குள்ளிருந்து கவனித்துக் கொண்டிருக்கிறான். ஆனால் நம்முடன் அவன் பேசுவதில்லை. மகான்களின் மனத்தில் பேசுகிறான். போதனை செய்கிறான். இதெப்படி? அதுவே புலனடக்கத்துடன் கூடிய மனத்தின் ஏகோபித்த நிலை (அல்லது) மனதடக்கம். அதுவே துரியம் (அல்லது) பிரணவத்தின் செயலாகும். எனவே, துரியம் என்ற நான்காவது யோக நிலையில்தான் நமது மனதானது நம்முடன் உறவாடும் நிலைக்குப் பக்குவமாகிறது. அந்தப் பக்குவ நிலைதான் "மனசாட்சி" எனப்படுகிறது. மனம் ஏகோபித்தால் அது பிரணவம் என்று அறிந்தோம். அதுவே ஸ்ரீகணநாதனின் செயலாகும். எனவேதான், அவரை பிரணவப் பொருளே என்றழைக்கிறோம். ஆகவே, பிரணவமே (ஸ்ரீகணநாதனின் அருளே) நமது மனசாட்சியாக அதாவது பேசும் மனமாகச் செயல்படுகிறது (தவத்தில்).

**8. அத்யாத்ம ஞானம்:**

சர்வம் பிரம்ம மயம் என்ற அறிவு பெற்று விட்டால் மனிதன் முக்தி அடைந்து விட்டான் என்று பொருள். ஜீவனை மாயை மறைக்கிறது. மாயைதான் 36 தத்துவங்களும் ஆகும். நினைவுதான் மாயை. நினைவு என்பது நமது பூர்வ ஜன்மங்களில் நாம் செய்த கர்ம வினையின் மொத்த உருவமான நமது எண்ணம், பேச்சு, அறிவு, ஞாபகம், உணர்வு என்ற செயலெல்லாம். அந்த

நினைவே ஸ்ரீகணநாதன். அவரது அருளின்றி "நினைவு" என்ற காலச் சக்கரம் அழியாது. பூர்ணமாக நினைவு அழிந்த நிலை எந்த மனிதனுக்கும் யோகிக்கும் ஞானிக்கும் கிடைக்காது. அது இறைவனுக்கே உரிய தகுதியாகும். பாதி நினைவு அழியும் நிலையே உயர்ந்த பிரம்ம ஞானிகளுக்கும் சித்தர்களுக்கும் கிடைக்கும் பரிசு. அவர்கள் பாதி இறைவனாகும். எனவே எண்ணமற்ற நினைவில்லா பிரம்ம நிஷ்டைக்கு ஸ்ரீகணநாதன் துணை வேண்டும்.

**9. உச்சி**

யோக நூல்களில் உச்சி நமது என்பது சகஸ்ராரம் என்ற சக்கரம் ஆகும் என்பது (Pituitary gland). அதன் அதிபதி ஸ்ரீகணநாதன் ஆவார். அதன் செயலால்தான் நமது புலன்கள் அறிவு மற்றும் எல்லா இயக்கங்களும் நடைபெறுகின்றன. யோகத்தில் இது "கடைநிலை" என்று கருதப்படுகிறது.

பண்டைய காலத்தில் யோகத்தில் (பெரும் ஹடயோகத்தில்) மூச்சையடக்கி, ஷட்சக்கர சித்தி, குண்டலினி சித்தி, கும்பக சித்தி, பிரணவ மந்திரம் போன்ற பல சித்திகளைக் கண்டவர்கள் கூடத் தனது யோக சக்தியை மூலாதாரம் எனப்படும் முதல் ஆதார சக்கரத்திலிருந்து மேலேற்றி முடிவில் சகஸ்ராரம் எனப்படும் இந்த உச்சியை அடைந்தபின் மண்டையைப் பிய்த்துக்கொண்டு ஜோதியை (உயிரை) வெளியேற்றுவார்கள். அவ்விதம் சென்றவனுக்கு மறுபிறவி கிடையாது என்று உபநிஷத்துகள் கூறகின்றன.



## மகான்களின் (அமரகவி) வாழ்க்கையும் சாதனையும்

"பரமாத்மா" ஆதியில் பேரறிவாக இருந்து அனைத்து உலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கும் "**ஓம்**" என்ற பிரணவமாக மாறிப் பின்னர் மனிதனுள்ளே "**அருட் சக்தியாக**" அல்லது தெய்வீக ஞானமாக மாறி, முடிவில் "புலன்வழி" இயங்கும் மனிதனின் சிற்றறிவாக மாறி இருக்கிறான். இதுவே படைப்பின், தபசின், தத்துவத்தின் "**சாரம்**" ஆகும். அதாவது, பேரறிவு பிரணவமாகி, அருட்சக்தியாகி முடிவில் சிற்றறிவாக மாறி இருக்கும் இந்நிலையை யோகச்சக்தியினால், தெய்வ வழிபாட்டினால், ஆன்மீகப் பெரியோர்களின் துணைகொண்டு சுய முயற்சியில் மாற்றி, மீண்டும் ஆதிமூலமான பேரறிவில் சென்று நிற்பதே சாதகனின் குறிக்கோள். இதற்காகவே வேதம், உபநிடதம், வழிபாட்டு முறை, ஆகமங்கள், புராணங்கள் போன்ற தத்துவப் பாடங்களை இறைவன் மகரிஷிகளின்மூலமாக நமக்கு அளித்திருக்கிறான்.

இந்த உண்மைகளின் மூலமான உண்மையான ஆதாரத்தை (மூலப் பொருளை) அதாவது, பரமாத்மாவை உணர்ந்து அவனுடன் உறவாடும் நிலையில்தான் "**மனிதனுக்கு ஞான ஒலியாக**" இறைவன் போதிக்கின்றான். அந்நிலையை அடைந்த "**வேத வியாசர்**" வேதங்களை இயற்றினார். ஸ்ரீகிருஷ்ணன் பகவத் கீதையை அளித்தான். சமீப காலத்தில் அத்துணை உயரம் தவத்தில் உயர்ந்த ஞானி நெரூர் **ஸ்ரீசதாசிவ பிரம்மேந்திரர்** ஆவார். அவர் அடைந்த பிரம்மானந்தத்தில் (ஆத்ம ஆனந்தம்) சர்வம் பிரம்ம மயம் என்று அதிசயித்து ஆனந்த மயத்தில் திளைத்துப் பல இடமாகச் சுற்றி ஜீவசமாதி அடைந்தார். அவர் அடைந்த யோக நிலைக்கு '**பிரகிருதிலயம்**' என்று பெயர். இறைவன் இரண்டு வழிகளை (அல்லது) வரங்களை வைத்திருக்கிறான்.

1. **பேரின்பம்** – அதுவே நெரூர் ஞானியின் நிலை. (ஆனந்தமயம்)
2. **ஞான போதம்** – ஞானசம்பந்தர் போன்ற அமரகவிகள்

எதைக் கொடுப்பது என்று தீர்மானிப்பது இறைவன் செயல். இரண்டும் ஒரே தவநிலையாகும். ஒன்று பேரின்பம், மற்றொன்று பேரறிவு ஞானம். இதில் நெரூர் ஞானி அடைந்தது பேரின்ப வெள்ளம். மகான்களையே ஆனந்தத்தில் ஆழ்த்தி விடும் மகத்தான சக்தி அது. அந்த **ஆனந்த மய கோசம்** என்ற நிலைக்க அதிதேவதை **ஸ்ரீகணநாதன்** ஆவார். எனவே அவரது அருளின்றி ஞானபோதம் கிட்டாது. ஞானமும் அவர் அருளே.

# திருமூலரும் அமரகவி யோகமும்

(யோக நித்திரையில்)

## உடல் தத்துவ விளக்கம்

1. "அமரன் தவம்" திருமூலன் நிஷ்டை ஒக்கும். வாக்கின் வழி அமரன், மூலன் நின்றது "அஜபை ஊர்ஜிதம்". அமரன் சாதனை "ஸ்ரீவித்தை பூர்த்தி". எதிர்காலம் இதனைப் பற்றும், உலகெங்கும் "நிஷ்டை". அசாத்தியம், இனி, மானிட வாழ்வில். "மூச்சின் வழி" அது.

அமரன் (அல்லது) அமரகவி என்பது பெரும்தவநிலையைக் கண்ட ஞானிகளை அழைக்கும் ஒரு சொல். திருமூலநாயனாரின் நிஷ்டையும் அமரகவி சித்தேஸ்வரரின் பிரம்ம நிஷ்டையும் ஒரே நிலையைக் கொண்டவை. திருமூலரின் நிஷ்டை "அஜபா காயத்திரி சித்தி" என்ற வழியின்மூலம் அடைந்தது. "அஜபா சித்தி" என்பது காயத்திரி மந்திரத்தை உச்சரிக்காமல் உச்சரித்து, ஜபிக்காமல் காயத்திரி மந்திரச் சித்தியில் நிலைத்திருக்கும் அறிவு. அதாவது, எண்ணத்தை நிறுத்திப் பெரும் மௌனத்தில் ஆழ்ந்திருக்கும் நிலை அஜபா சித்திக்கு இணையானது. பொதுவாகச் சித்தர்கள் பிறவியிலேயே இந்நிலையில் தோன்றுகின்றார்கள். அமரகவிகளின் நிஷ்டை "வாக்கின்வழி" என்பதன் பொருள் என்னவென்றால், ஆதி சங்கரரின் சௌந்தர்ய லகரி விளக்கும் ஒலியின் தத்துவங்களான (சப்தம்) "பரா பஸ்யந்தி, மத்தியமா, வைகரி " என்பவற்றின் வழியாகப் பிரம்ம நிஷ்டையை அடைவது. அதாவது, இதில் "மத்தியமா" என்பது நாம் வாய் திறந்து பேசும் (சப்தம்) மொழிகளாகும். அதாவது, சொல் அல்லது பேச்சாகும். நமது எண்ணம் சொல்லாக மாறி வாயிலிருந்து வெளிவந்த நிலை "வைகரி" என்பது. நமது பேச்சின் மூலமான எண்ணத்தில் தோன்றிய நிலை அல்லது) எண்ணத்தின் பிறப்பிடம். இதற்கு மேலும் இரு நிலைகளான "பரா, பஸ்யந்தி" என்பனவற்றின் சித்தி பெற்றால் இறைவனுடன் உறவாடும் பெரும் யோக நிலையை எய்தலாம். அதாவது, "பரா" என்பது இறைவன் நம்முள் அந்தர்யாமியாகப் பேசுகின்ற நிலையை அறியும் பிரம்ம வித்தையாகும். எனவே, திருமூலரைப்போல் மூச்சை அடக்கி, மந்திரச் சித்தியில் முழுவதும் செல்லாமல் எண்ணத்தை (வாக்) அடக்கி மனோலயம் பெற்றுப் "பரா" என்று கூறப்படும் பிரம்ம நிஷ்டையைத் தனது சாதனையில் அடைந்துவிட்டவர்தான் அமரகவி என்பது பொருள்.

**திருமூலன் கூறியது. (திருமந்திரம், பாடல் 704)**

2. **"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே".**

திருமூலரின் திருமந்திரம், சைவ சித்தாந்த சாத்திர நூல்களில் தலை சிறந்து விளங்குவதால் **தமிழ்த் திருமறை** என்று போற்றப்படுகின்றது. இவர் அறுபத்து மூவருள் ஒருவர். இவர் மூவாயிரம் ஆண்டுக்காலம் வாழ்ந்து ஆண்டுக்கு ஒரு பாடல்வீதம் 3000 பாடல்களை ஆறு தந்திரங்களாகத் திருமந்திரம் என்ற பெயரில் உலகுக்கு அளித்துள்ளார். திருமந்திரம் உயிர், உடல் இவற்றின் பிரிவு மற்றும் சேர்க்கைத் தத்துவங்களை நன்கு விளக்கியுள்ளது.

குறிப்பாக, 704 ஆவது திருமந்திரப் பாடல் உணர்த்தும் உண்மை என்னவென்றால், சராசரி மனிதன் நாளொன்றுக்கு 21,600 என்ற அளவில் சுவாசம் விடுகின்றான். அதாவது, வல இடச் சுவாசங்கள் ஒவ்வோர் இரண்டு வினாடிக்கும் மாறுவதான தத்துவத்தை உடையது. மேலும், "உடம்பு" என்று திருமூலர் குறிப்பிடுவது நமது சொரூபம் (அல்லது) புலன்கள். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை கொண்ட "**நுண்ணுடம்பு**" ஆகும். எனவே, உயிரானது தேகத்தில் மூச்சுக்காற்று முழுவதுமாக வீணாகிவிட்டபின், உடலைவிட்டுப் பிரிந்துவிடுகிறது. எனவே, மூச்சை அடக்கி, நாளொன்றுக்கு விரயமாகும் மூச்சு மற்றும் பிராணச்சக்தியைத் தடுத்து நிறுத்தித் தனது ஆயுளை நீட்டிப்பதே பண்டைக்கால முனிவர்களின் தவமுறை. இதற்கு ஓரளவு "மந்திர **சித்தி**"யின் உதவியும் தேவைப்படுகின்றது. இதனைக்கொண்டு யோகத்தில் சுவாசத்தை அடக்கி செய்து 3000 ஆண்டுகள் உயிர் வாழ்ந்தார் திருமூலர். எனவே, "உயிர்" என்ற ஆத்ம சக்தி வெளியேறினால், மனிதன் இறந்துவிடுகிறான்.

இந்த இறப்பு என்ற நிலையைத் தேகத்தில் தடுப்பதே உடம்பை வளர்க்கும் உபாயம். அதாவது, புலனடக்கத்தில் மனம் ஒருநிலைப்பட்டு, உடலின் பிராணச்சக்தியாக விரயமாகும் உயிரின் வேகத்தைத் தடுத்து நிறுத்துவதே ஆகும். இதுவே உடம்பை வளர்த்து உயிரை வளர்க்கும் மார்க்கமாகும். புலனடக்கத்தின் அதிதேவதை ஸ்ரீமகாகணபதி ஆவார். எனவே, அவர் அருளின்றி நிஷ்டை கைக்கூடாது. எனவேதான், அவரை முழுமுதற் கடவுள் என்கிறோம்.

**"அமரன்" உபாயம் அதில்:**

**3. உடலில் சித்தி "அகோரம்" மீறல்**
**மண்ணின் அலைகள் விண்ணில் சாய**
**விண் அதில் "அமர கோசம்"**
**சங்க நாதம் பெற்றபின்.**

புலன்கள் "பிரக்ருதி" என்ற இயற்கையின் (ஐம்பூதங்கள்) ஆதிக்கத்தின் விளைவுகள். மேலும், பிறந்தவுடன் உயிரானது மூச்சாகவும், பேச்சாகவும், அறிவாகவும் பிரிந்துவிடுகின்றது. இதனை மீண்டும் உயிருடன் இணைந்திருக்கும் நிலையே "சமாதி" என்பது. மேலும், நமது உடலில் ஐந்து முக்கியப் பிராணன்களும், பஞ்ச உப பிராணன்களுமாகத் தசவித வாயுக்கள் செயல்படுகின்றன. பசி, தாகம், ஜீரணம், தேக உணர்வு, அங்க அசைவுகளான இவை யாவும் மேற்கூறிய தச வாயுக்களின் செயல்களாகும். புலன்களும் இதற்கு ஒத்துழைக்கின்றன. எனவே, மேற்கூறிய வாயுக்களின் கீழ் நோக்கிய செயல்கள் **"அகோரம்"** எனப்படும்.

அகோரம் என்ற இதனைவென்றுவிட்டால், நமது மூச்சுக்காற்றானது கீழேயிருந்து மேல்நோக்கு முகமாகச் செயல்படும். பண்டைக்கால முனிவர்கள் கண்ட நிலையான இதுவே **"காயசித்தி"** என்பதாகும். அந்நிலையில் பெரும் புலனடக்கம் ஏற்பட்டுப் புலன்களின் சக்தி **வாக்** மௌனத்தில் அடங்குகின்றது. அதாவது, யோகச்சாதனையின் மேல் நிலைகளில் **ஆனந்தம், அமைதி** (சாந்தி) **இறைவனின் ஞான உபதேசம்** என்ற மூன்று நிலைகள் உள்ளன. இம்மூன்று நிலைகளும் பெறும் சித்தர்கள் மற்றும் மகரிஷிகள் மட்டும் உணரும் தனிப்பெருமைகளாகும். இதில் மூன்றாவதாகக் கூறப்பட்ட இறைவனின் உபதேசத்தைப் பெறுவதுதான் **"அமரகோசம்"** எனப்படும். அந்நிலையை அடைந்தவர்தான் **"சிரஞ்சீவி"** எனப்படுவார் (ஸ்ரீஅனுமான், ஜாம்பவான் போன்றவர்கள்). **"சரஸ்வதி"** என்ற அம்பிகையின் பேரருள் இதுவே யாகும். எனவே, மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருனும் யோகச்சாதனையில் அடையவேண்டிய நிலை இதுதான்.

இந்த **"அமரகோசம்"** என்ற தபோநிலையை அடைந்து இறைவனால் (திருஞானசம்பந்தரைப்போல்) ஞானபோதத்தைப் பெறுவதற்கு முன்னால் ஸ்ரீமன் நாராயணனின் **"சங்கநாதம்"** ஒலிக்கும். எனவே, சங்கநாதத்தைப் பிரம்ம நிஷ்டையில் கேட்ட பின்னரே அமரகோசம் கைக்கூடும். சங்கநாதமே 'துரியம்' என்ற நிலையை எட்டிய சாதனைக்கு ஓர் அடையாளம். இந்த துரிய நிலைக்கு அதிதேவதை ஸ்ரீகணநாதள் ஆவார்.

4. **"கேவலம் புகுமிடம் மெள்ள மெள்ள
இரு மூச்சும் மையம் கண்டு
"சோடசத்தின்" இறுதிக்கட்டம்
நாக்கின் மூலம்**

சாதாரண மனிதனின் மூச்சுக்காற்றின் மொத்த நீளம் 16 அங்குலம் என்று யோக சூத்திரம் கூறுகின்றது. இதனைக் குறைத்து மூச்சையடக்கி, அதுகொண்டு மனத்தை யடக்கிப் புலனடக்கம் பெறுவதே பதஞ்சலி முனிவர் வகுத்த அஷ்டாங்கயோகத்தின் குறிக்கோளாகும். நாசியில் மூச்சு உள்ளிழுத்தல், வெளியிடுதல், இழுத்த மூச்சை உள்ளே கும்பித்துத் தங்க வைத்தல் (கும்பகம்) என்ற இவற்றில் "கும்பகம்" என்ற வெறும் மூச்சை அடக்குவதால் ஓரளவு சுவாசத்தின் விரயத்தைக் கட்டுப்படுத்தலாம். அத்துடன் தேகத்திற்குப் புத்துணர்ச்சியும் சிறிது மனச்சாந்தியும் கிடைக்கும். ஆனால், இதனைக்கொண்டு பிரம்ம நிஷ்டையையும் இறைவனின் ஞானபோதத்தையும் பெற முடியாது. எனவேதான், ஸ்ரீவித்தை, ஸ்ரீசங்கரரின் அத்வைத விசாரம் (ஞான மார்க்கம்) என்ற இவற்றைக்கொண்டு "கேவல கும்பகம்" என்ற பெரும் தபோநிலையை அடைவதுதான் தவத்தின் குறிக்கோளாகும். **கேவல கும்பகத்தின் அதிதேவதை ஸ்ரீமகா கணபதியாவார்.** இதுவே "சோடச கலையின் சித்தி" என்று அழைக்கப்படும். இங்குதான் இறைவன் அந்தர்யாமியாக நம்முடன் உறவாடுவான்.

5. **என் தவம் இன்று "ஞானப்பால்"
தேர்வு, அதில் "சத்தியோ ஜாதம்"
கண்ட சித்தி தந்திடும் வரம்
"சிறு மூச்சு" மெள்ள மெள்ள நழுவல்"**

திருஞானசம்பந்தர் **"ஞானப்பால்"** உண்டார் என்பதன் பொருள் கேவல கும்பகச் சித்தியை அடைந்தார் என்பதே யாகும். அங்குச் "சிறு மூச்சு" எனப்படும் சாதாரண மனிதனின் சுவாசம் (விஷக்காற்று) அறவே நின்றுவிடத் தெய்வீகப் பிராணச்சக்தி சுவாசமாகச் செயல்படும். '**கண்டசித்தி**' என்று யோக நூல்களில் காணும் சித்தி இதுவே. அதாவது, மேல்கீழ் ஓட்டமான நமது மூச்சுக்காற்று யோகத்தில் மாறிக் 'கீழ்மேல்' என்று ஓடி, "அண்ணாக்கு" வழியாக இறைவன் சக்தி ஞானரூபமாகச் செயல்படுவதே யாகும். இந்நிலையே **சத்தியோ ஜாதம்** எனப்படும். சதாசிவனின் ஐந்து முகங்களில் இதுவும் ஒன்று. இந்த சத்தியோஜாதம் ஸ்ரீ மூலகணபதியின் அம்ச சொரூபம்.

6. எதிர் காலம், உயிர்ப்பு என் வாசம்
திடம்பட "கேவலம்" நாட்ட
வெகுநாள் பயிற்சி
புகுவது தஞ்சம் "உன் செயல்"

சிருஷ்டித் தத்துவத்தை (படைப்பின் இரகசியம்) வென்றுவிட்ட நிலைதான் மேற்கூறிய 'கேவல கும்பகச் சித்தி' ஸ்திரமாய் மாறிவிடுவதாகும். அஷ்டமாசித்தியும் கைவந்த நிலையது. மற்றும் ஈசன் சொற்படி நடக்கும் எல்லா விந்தைகளும், அற்புதங்களும் இங்கு நிகழ்கின்றன. இறைவனுடன் உறவாடும் பெரும் நிலைக்குரிய பீடமாகும்.

7. தற்புருடம் உயிரின் சதி
அதுவன்றிச் சொல் ஏது
வாம தேவம் வாசி நிமிரல்
எல்லாம் ஈசன் செயல்.

8. ஈசன் முகம் ஐந்து, தேவி அதில் நான்கு (பரா,
பஸ்யந்தி, மத்தியமை, வைகரி) ஏனையது
"வக்கிர துண்டம்" (சிறு மூச்சு தாண்டவம்)
"ஏகாட்ஷரி", தான் "தன்மய மாதல்"
"சொரூப சித்தி", (சொல் அடங்க வாசி நிமிரல்)
மேல் கதி, உடல் தன்வசம், "பிறப்பில் நின்றது".
ஜீவன் முக்தி.

சர்வேஸ்வரனுக்கு ஈசானம், தற்புருடம், வாமதேவம், அகோரம், சத்தியோஜாதம் ஆகிய பஞ்ச முகங்கள் உண்டு. இதில் "தற்புருடம்" என்பது நமது உயிரின் வேகம். கரும வினைக்கு ஏற்ப (மனிதனின் தெய்வீகச் சக்தி) அழிந்து புலன்வழியாக எண்ணமாகவும், பேச்சாகவும் மாறி விரயமடைவதே யாகும். மனித உடலில் மூச்சுக்காற்றானது 'மேல் கீழாகத்' தொண்டை (கழுத்துப் பகுதி) முதல் (வயிற்றுப் பகுதி) வரை கீழ்நோக்கு முகமாக 'அபானன்' எனும் பிராணனாகச் செயல்படுகின்றது.

இதன் விளைவுகள்தான் நமது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவற்றின் விகாரங்களான மூச்சு, பேச்சு என்பவை யாவும், "புலனடக்கம்" ஒன்றினால்தான் மேற்கூறிய சலனங்கள் அழியும். எனவே, கீழ் நோக்கிய சுவாசத்தை மேல் நோக்கு முகமாக, அதாவது, நாபிமுதல் தொண்டைவரை நிமிர்த்தவேண்டும் என்பதே யோக நூல்களின் சாரமாகும். ஆனால், இதில் வெற்றி காண்பது இறைவன் செயலும் அருளுமன்றி

மனிதனின் சுய முயற்சியினால் மட்டும் வரும் சித்தியன்று. எனவேதான், ஆன்மீக நெறியில் "பிரம்ம நிஷ்டை" என்ற பெரும் நிலைகளை அடைவதற்கு இறைவனின் சித்தம் அதற்கு உகந்தவாறு இருக்கவேண்டும். "அவன் அருளால் அவன் தாள் வணங்கி" என்றபடி வேத ரிஷிகள் இந்நிலையைக் கண்டவர்கள்.

இந்து மத வழிபாட்டில் நான்கு கரங்கள் கொண்ட தெய்வங்கள் பல இருக்கின்றன. ஆனால், ஐந்து கரங்கள் கொண்ட ஒரே தெய்வம் விநாயகர்ஆவார்.

**"மனம் எங்குண்டு வாயு அங்குண்டு**
**மனம் எங்கில்லை வாயு அங்கில்லை"**

என்பது பதினெட்டு சித்தர்களில் ஒருவரான போகரின் திருவாக்காகும். தென் பழனியில் இவரது சமாதி இருக்கிறது.

எனவே மனம், புலன்கள் இவைதான் நமது சுவாசத்திற்குக் காரணமானவை. சிறு மூச்சு என்ற நம் சுவாசத்தினால் நமது பிராண சக்தி உடலில் விரயமாகின்றது. இதனைத் தடுப்பதே யோகமாகும். இதற்கு மனத்தை அடக்கி, அதன்வழியாக எண்ணத்தைக் கட்டுப்படுத்திச் சுவாசத்தை (எண்ணமற்ற நிலையில்) அடக்குவது, "**ஸ்ரீவித்தை**". ஸ்ரீசங்கரரின் "**அத்வைத விசாரம்**" என்பதாகும். நேரிடையாக மூச்சை அடக்கிப் புலனடக்கம் பெற முயல்வது பதஞ்சலி முனிவரின் அஷ்டாங்க யோக மார்க்கமாகும். இக்காலத்தில் அது நடைமுறைக்கு ஆகாத ஒன்று. எனவே, "சிறு மூச்சு" என்ற நமது சுவாசம் புலன்கள், மனம் என்பனவற்றை நேரிடையாக கட்டுபாட்டில் உள்ளது. இந்தச் சிறு மூச்சின் வேகத்தை உணர்த்துவதே ஸ்ரீகணபதியின் ஐந்தாவது ஆவது கரமான "நீண்டிருக்கும் தும்பிக்கை யாகும்". "**வளைந்த தும்பிக்கை**" உணர்த்துவது, என்னவென்றால் நாம் சிறு மூச்சினை யடக்கி, மனத்தை வென்று, புலனடக்கம் பெறவேண்டும் என்பதாகும். ஸ்ரீகணபதியின் வளைந்த தும்பிக்கையில் உள்ள "**அமிர்தகலசம்**" நம்முடைய "**உயிர் நாடியாகும்**". அமிர்த கலசம் அடைதலே அஷ்டாங்க யோகச்சித்தியின் உயிர் நாடியை அறுத்தலாகும். அதுவன்றி, யோகத்தின் "**பூரணத்துவம்**" அடைய இயலாது என்பதும் அதற்கு ஸ்ரீமகா கணபதியின் பேரருள் அவசியம் தேவை என்பதாகும். எனவேதான், மாயை (மறைத்தல்) நீங்கிப் புலனடக்கம் பெற்று இறைவனின் "ஞானபோதத்தைப் பெறுவதே" இறைவனின் ஐந்து செயல்களில் அருளல் என்ற கருணையைப் பெற்றதாகும். இதுவே ஸ்ரீகணபதியின் "**வளைந்த தும்பிக்கை**" குறிப்பதாகும்.

"**ஏகாக்ஷரம்**" என்பது பிரணவமாகிய "**ஓம்**" என்பதைக் குறிக்கும். எனவே, "**ஏகாக்ஷர சித்தி**" அடைந்துவிட்டால், சாதகன் புலனடக்கம் பெற்று யோக நித்திரையில் தன்மயமாகிவிடுகின்றான். "**சொரூப சித்தி**" என்பது நமது பேச்சு, எண்ணம் இவையாவும் அடங்கி, நமது வாசியானது "**மேல் கீழ்**" என்ற பிறப்பில் ஏற்பட்ட நிலை மாறிக் "**கீழ் மேல்**" என்றபடி (நாபியிலிருந்து தொடங்கித் தொண்டைவரை) மாறிவிடும். இந்தச் சொரூப சித்தியில் நிலைத்திருந்து, தேர்ச்சி பெற்றால், தாய் கர்ப்பத்தில் (சிசுவாய்) நாம் கொண்ட "**சுயம்பு தேகத்தை**" மீண்டும் (தெய்வத்தின் தன்மை) (**சதாசிவலிங்கம்**) பெறலாம். இதுவே, "ஜீவன் முக்தி" எனப்படும் (மனிதன் தெய்வமாகிய நிலை).

* புலனடக்கம் நிஷ்டைக்குக் கட்டாயம் தேவை. இதன் அதிபதி ஸ்ரீமகாகணபதி ஆவார். மூச்சையடக்கும் கும்பகப் பயிற்சிக்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி ஆவார். புலன்களைச் செயல்பட வைக்கும் மூளையின் சக்திக்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி ஆவார். எனவே, மனிதன் மனிதனாக இருக்கும் நிலைக்கும் தெய்வமாக மாறி இருக்கும் பிரம்ம நிஷ்டைக்கும் ஆத்ம தேவதை ஸ்ரீமகாகணபதி ஆவார். எனவேதான், அவரை முழுமுதற் கடவுள் என்கிறோம்.



# அண்ணாக்குத் தத்துவமும் (ஸ்ரீரங்கம்) ஸ்ரீகணபதியும்

(மானிடன் தெய்வத்தன்மை பெறும் ஸ்தானம்)

"வேத வியாசர்" விநாயகரின் துணைகொண்டுதான் நான்கு வேதங்களையும் பதினெட்டு புராணங்களையும் படைத்தார். ஸ்ரீகிருஷ்ணரும், ஸ்ரீமகா கணபதியின் உபாசகர் என்பதற்கும் **சதுர்த்தி விரதம்** மற்றும் பல விரதங்களையும் கடைப்பிடித்து விநாயகரின் அருளைப் பெற்றார் என்பதற்கும் சான்றுகள் பல உள்ளன. ("ஸ்ரீகணேச கீதை போன்றவை) ஸ்ரீகிருஷ்ணரும் ஸ்ரீகணபதியின் அருட்கொண்டு ஸ்ரீமத் பகவத் கீதையை உலகிற்கு அளித்தார். எனவே வேதம், உபநிஷத்துகள், பதினெட்டு புராணங்கள் பகவத் கீதை போன்ற இவை யாவும் விநாயகரை வழிபட்டே தோன்றியவை யாகும். இதன் உட்பொருள் **"பிரணவம்"** எனப்படும் ஒங்காரத்தின் பொருளும், அதிதேவதையான ஸ்ரீமகா கணபதியின் அருளின்றி, இதுபோன்ற ஞான நூல்கள் கிடைக்காது என்பதே யாகும். எனவேதான் ஒங்காரநாதன், ஆதிமூலம், முன்னவன், மூத்தவன், முழுமுதல்வன் என்று பலவாறு போற்றப்படும் ஸ்ரீகணபதியின் அருள் நமக்கு மட்டுமன்றி விண்ணோர்க்கும் தேவை என்பது உண்மை. வேதம், உபநிஷத் இவை அனைத்தும் மிகவும் தெய்வீகமாகப் பறைசாற்றும் ஒரே பொருள் 'ஓம்' எனும் ஓம்காரம் தான்.

இறைவன் நேரில் வந்து பேசுவான் என்பது தவறான கருத்தாகும். அதாவது, புறக்கண்ணிற்கு எட்ட முடியாத அவன், அகக்கண்ணிற்கு மட்டும் எட்டக் கூடியவன். எனவே, **"அகக்கண்"** கொண்டு (புலனடக்கத்தில்) தான் இறைவனைக் கண்டு உணர முடியும். இதனைத்தான் திருமூலரும்,

**"எண்ணாயிரத்து ஆண்டு தவம் இருப்பினும்**
**கண்ணால் (ஊனக்கண்ணால்) அமுதனைக்**
**கண்டறிவாரில்லை".**
என்று விளக்கியுள்ளார்.

இதனையே மற்றும் ஒரு சித்தரான சிவவாக்கியர்,

**"முகத்தில் கண்கொண்டு பார்க்கும் மூடர்காள்**
**அகத்தில் கண்கொண்டு பார்ப்பதே அறிவு**

என்று உரைத்திருக்கின்றார். எனவே, இறைவனைக் காணுதல் என்பது புலனடக்கம் கூடித்தான் ஏற்படவேண்டும் என்பது தெளிவு.

புலன்கள் அடங்க மூச்சையும், பேச்சையும் அடக்கவேண்டும் என்பது யோக, ஞானவழிகளின் சாரமாகும். "புலனடக்கம்" என்பது நமது தேகத்தின் ஆறு ஆதாரச் சக்கரங்களான மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகியவற்றை வெல்வது என்று பொருள். இந்த ஆறு ஆதாரங்களுக்கும் மேலாகக் கபாலத்தின் "**உச்சி (மண்டை நடு நாடி)** என்று அழைக்கப்படும். ஆயிரம் இதழ் கொண்ட "**சகஸ்ராரம்**" என்ற எழாவது சக்கரம் இருக்கின்றது. இந்த உச்சிக்கும் அண்ணாக்கு எனப்படும் "**சிறு நாக்குக்கும்**" இடையே "பிரம்ம ரந்திரம்" என்று ஓர் இணைப்பு இருக்கின்றது. இதன்மூலம்தான் மகரிஷிகளுக்கு ஞானபோதம் கிடைக்கின்றது; விநாயகரே இதன் அதிபதியாவார். இங்கு தான் தேவலோக வாக்குகள் மறைந்துள்ளன.

மேலும், இந்தப் பிரம்மரந்திரத்தையும், விசுத்தி என்ற ஐந்தாவது ஆதாரச் சக்கரத்தையும் இணைப்பதே யோகச்சாதனையால் நாம் அடையும் பெரும் சித்தியாகும். இந்த இணைப்பைத்தான் "**சேது பந்தனம்**" என்று இராமாயணத்தில் (தத்துவ ரூபமாக) குரங்குகளால் கட்டிய பாலமாக வருணிக்கப்பட்டுள்ளது. ஆக, யோக நூல்களில் அண்ணாக்குத் தத்துவம் மனிதன் தெய்வத்தன்மை பெறும் ஸ்தானமாகச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. "ஸ்ரீரங்கம்" என்று அழைக்கப்படும் புண்ணிய ஸ்தலமே இந்த அண்ணாக்கைக் குறிப்பதாகும்.

## திருமூலர்

1. "**உச்சிக்குள் கீழது உண்ணாக்கு மேலது**
   **வைச்ச பதமிது வாய்திற வாதே**".

இப்பாடலின்கருத்து உச்சி என்ற சகஸ்ராரத் தளத்திற்கும் அண்ணாக்கிற்கும் இடையில்தான் இறைவனின் "ஞானபீடம்" இருக்கின்றது எனபதே. கபாலத்தின் இந்தப் பகுதியில்தான் இறைவன் ஞர்ன ஒலியைத் தருகிறான். ஞான போதம் இங்கு தான் கிடைகின்றது.

## ஔவை

2. **ஓம் என்ற மூலகணபதியே காப்பு**
   **உண்மையுடன் நடுமனையில் உகந்து நின்று**
   **ஆம் என்ற அமிர்த கலை**
   **உள் கொண்டேதான்**
   **அடங்க வந்த மனோன்மணியின் கிருபையாலே**

**ஊம் என்ற உண்மை தனை**
**உருப்பெற்று, கருப்பெற்று உறுதி பெற்று**
**மா வென்ற மதி தனையை ரவியில் தாக்க**
**சத் சித் ஆனந்தம் என்ற ஆதி காப்பாம்.**

உபநிஷத்துகள் விளக்கும் அஷ்டாங்கயோகத்தின் முடிவு நிலையை ஔவை அடைந்து இருந்தார். '**கைத்தல நிறைகனி**' என்று வருணிக்கப்படும் அந்நிலையில் தேவர்களும் சகல மக்களும் நமக்கு அடிமையாவார்கள். "நான் என்ற எண்ணம் இறந்த நிலையது."

ஸ்ரீ கணபதியின் பரிபூரண அருள்பெற்ற ஔவை "சத்–சித்–ஆனந்தம்" என்ற தவத்தின் கடைநிலையை அடையும் மார்க்கத்தை விளக்குகின்றார். அதாவது, ஓம் என்ற பிரணவமாகிய மூல கணபதியைத் தொழுது, பூஜித்து, உண்மையான பக்தியுடன் இடைகலை, பிங்கலை என்ற இரு பெரும் சுவாச நாடிகளும் இணையும் நடு நாடியான "**சுழுமுனை**" என்ற பேரறிவுடன் கலந்து உறவாடி "**மனோன்மணி**" என்கின்ற தேவ வாக்கைப் பெற்று (ஞானமாக) நிற்கலாம். இங்கு மூச்சானது உயிருடன் கலந்து நிற்கும். மேலும், நமது பேச்சானது ஒடுங்கி "**ஆதித்தன்**" என்றழைக்கப்படும். "**சூரியக்கலை**" நம்முள் ஒங்கி நிற்க இறைவனின் "**ஞான உபதேசத்தைப்**" பெறலாம் என்கின்றார். ஔவை அடைந்த பெரும் நிலையே "**ஸ்ரீவித்யா**" உபாசனையின் கடைநிலை அல்லது பூர்த்தி நிலையாகும்.

## காகபுஜண்டர்

3. **"சாரப்பா மனம்தனை அண்ணாக்கில் நேரே**
**சார்ந்துமிகப் பார்க்கையிலே வாசி தானும்**
**வீரப்பா மேல் அடங்கும், கீழ் நோக்காது**
**வெட்டாத சக்கரத்தை அடையலாமே.**

இதில் அண்ணாக்கில் மனத்தை வைத்துத் தியானம் செய்தால், "**வெட்டாத சக்கரம்**" என்று சித்தர்கள் வருணிக்கும் அஷ்ட மகாசித்தியைத் தரும் "**கும்பகம்**" என்ற மூச்சையடக்கிய நிலை கிடைக்கும். அதாவது, நாபியில் (அடி வயிற்றுப் பகுதியில்) வெட்டுண்ட நமது மூலப் பிராணன், அறுபட்டதால் மயிர்க்கால் துளைகளின் வழியாகத் தேகமெங்கும் சிதறி வீணாகும் பிராணனை (உயிர்) அண்ணாக்கில் சேர்த்தால் "**வெட்டாத சக்கரம்**" எனப்படும் அறுபடாத "**மூலப்பிராணனைக்**" கொண்டு மானிடன் தெய்வத்தன்மையைப் பெறலாம் என்பதாகும்.

## அமரகவி வாக்கு

4. பேச்சும் மூச்சும் பேதம் அற, உயிராகும்
காணும் அதில் மனோலயம்
உள்ளம் போதம் தரும், தலை நிமிர
மூச்சுடர் சாய அத்தன்மை
வேதத்தின் புகழ், இந்நூலும்
அமரனின் வெற்றிக்கொடி.

மூச்சும் பேச்சும் நின்று ஒன்று கலக்கத் தியானத்தில் அவை உயிராகும். "மனோலயம்" என்ற மனம் அடங்கிய அந்நிலையில் முதிர்ந்த "உள்ளம்" நம்முடன் அந்தர்யாமியாகப்" பேசும். இந்நிலையில்தான் வேதம், உபநிஷத் என்பவை தோன்றின. அந்நிலையில்தான் இந்நூலும் என்பது உண்மை. துரியம், பிரம்ம நிஷ்டை என்று பலவாக வருணிக்கப்படும். இந்நிலைக்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி ஆவார்.



# ஸ்ரீவித்யா உபாசனையில் கணபதித் தத்துவம்

ஸ்ரீவித்யா உபாசனை மார்க்கத்தில் கூறப்படும் "**ஸ்ரீசக்ர பிந்துமத்யஸ்தம்**" என்பது ஸ்ரீமகாகணபதி அருளையே குறிக்கும்.

பஞ்சாக்னியில் "**மூலாக்னி**"யைத் தவிர, மற்ற நான்கு அக்னிகளுமே ஐந்து பூதங்களாக மாறி இயங்குகின்றன. இந்த அக்னிகள் தனிப்பட்டமுறையில் ஒவ்வொன்றும் இயங்குகின்றன. ஸ்ரீசக்ர பிந்து மத்யஸ்தம் என்பது இந்த பஞ்ச அக்னிகள் ஒன்று கூடிய நிலையைக் குறிக்கும். இஃது ஒரு பெரும் தவநிலை ஆகும். அதற்கு அதிபதி ஸ்ரீமகாகணபதி ஆவார். பஞ்ச அக்னிகளும் ஒன்றுகூடிய நிலையில் அதனை "தேஜஸ்" என்று அழைக்கப்படுகிறது. தேஜோசக்தி என்பது தேகத்தின் பளபளப்பு அல்ல. அதனுள் உள்ள தெய்வீகத் தன்மை வெளிப்பட்டிருக்கும் நிலையைக் குறிக்கும்.

"**சப்த ஸ்வரங்கள்**" இயற்கையிலுள்ள அழிவில்லா நித்திய சக்திகளாகும். யோகச் சித்தாந்தத்தில் (அல்லது) மார்க்கத்தில் பஞ்ச அக்னிகள் ஒன்று கூடிய நிலையைத்தான் இந்த "**சப்த ஸ்வரங்கள்**" குறிக்கின்றன. நமது "**வீணாதண்டம்**" என்ற முதுகெலும்பில் இருந்துகொண்டு பிராணனாக இயங்கி, உடலை இயக்கும் மகா சக்திகள் **மூலப் பிராணன்** எனப்படும். சுவாசமாக நமது தேகத்தில் பிராணனாக இயங்கும் காற்று. இதுவே "சித் சக்தி" எனப்படும்.

சத்-சித்-ஆனந்தம் எனப்படும் பெரும் நிலைகளில் காணப்படும் "**சித்**" என்பது அதுவே. அந்தச் "சித்" எனப்படும் பெரும் சக்திக்கு அதிபதியே ஸ்ரீமகாகணபதி ஆவார். ஆகவேதான், அண்ட சராசரங்களின் இயங்கு சக்திக்கு ஆதாரமாக, காரணமாக மற்றும் அதிதேவதையாக இருக்கும் ஸ்ரீமகாகணபதியை முழு முதற் கடவுள் எனப் போற்றி வணங்குகின்றனர். நான்கு இதழ்த் தாமரையாகிய "**காம பீஜமாகிய**" சித் சக்தியே "**ஸ்ரீமகாகணபதி**" ஆவார். ஆகையால்தான் "புலன்களின் சலனத்திற்கும் புலனடக்கத்திற்கும்" அதிபதியாகிய இவரை விநாயகர் என்று அழைக்கின்றோம்.

பஞ்ச பூதங்களில் "அப்பு" (நீர்) எனப்படும் பூதத்தின் ஸ்தூல வடிவத்திற்கும் "பிருதிவி" மண் தத்துவத்திற்கும் இவரே அதிதேவதை ஆவார். பிருத்வி என்றால் வெறும் மண்/மண் தத்துவம் என்றுதான் மக்கள் நினைக்கின்றனர். அது மிகவும் தவறு. உபநிஷத்துக்களில்கூடப் பிரிதிவி

தத்துவத்தைப் பலவாறாக விவரித்து இருக்கின்றன. ஆக, புலன்களின்வழிச் சென்று மாயையில் சிக்கித் தவிக்கும் கர்ம வினைக்கும், மாயையைத் தாண்டிப் புலனடக்கத்தில் யோக நித்திரையில் இருக்கும் தபோ நிஷ்டைக்கும் இவரே மூலக் காரணமாகவும் அதிதேவதையாகவும் இருப்பதால்தான் வானோரும் இவரை **"முழுமுதற் கடவுள்"** என்றும் **"ஆதிமூலம்"** என்றும் கூறிப் பக்தியுடன் வணங்குவது மட்டுமின்றி, விக்னங்கள் நீங்கிட, இவரை முதற் கடவுளாக வணங்கித் தங்கள் காரியங்களைத் தொடங்குகின்றனர்.

யோக மார்க்கங்களில் கூறப்படும் **"சுவாசப் பந்தனம்"** அல்லது "கும்பகம்" என்ற சித்திக்கு அதிஷ்டான தேவதையே இந்த மகாகணபதி ஆவார். பேச்சும் சுவாசமும் அடங்கிய **"சித்தம்"** தெளிந்த பெரும் நிலைக்கு அதிதேவதையும் இவரே. சகல ஸ்தூல வடிவங்களும், சிருஷ்டியும் இவரது (சித்) சக்தியிலிருந்துதான் உற்பத்தியாகின்றன. ஆகவேதான், "முழுமுதற் கடவுள்" என்ற பெரும் பெயரைப் பெற்று இவர் விளங்குகிறார். இவரே விஷ்ணு தத்துவத்தை ஆள்பவராகவும் உள்ளார். மேலும், "பற்றில்லா **உள்ளம்**" (அல்லது) பற்றற்ற பரநிலை என்பது ஸ்ரீமகாகணபதியின் அருளாகும். அதுவன்றி ஞானம் ஏது? மானிடன் தேவன்ஆவது ஏது? எல்லாம் பற்றற்ற நிலையில் பரிபக்குவ நிலையில் கிடைக்கும் பரிசுகள். அந்த நிலைக்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி யாவார். எனவேதான், **"விநாயகன்"** (தனக்கொரு நாயகன் இல்லாதவன் என்ற பொருள்கொண்டு) என்று அழைக்கப்பெறுகிறார்.



# கணபதியின் விளக்கம்

“**வேத வியாசர்**” சொல்ல “**விநாயகர்**” பாரதம் எழுதியது யாவரும் அறிந்ததே. இந்தக் கணபதியை யாவரும் அறிவர். முழுமுதற் பொருள், மூலப் பொருள், ஆதிமூலம் எனப் பலவகையாக அழைக்கப்படுபவர் இவர். இவரை ஆராதிக்கும் முறை மிகவும் எளியது. ஒரு சிறிய துண்டுக் கற்கண்டு தந்தால்கூட மிகவும் ஆனந்தப்படுபவர் இவர். ஆனால், இவரை வெல்வது தேவர்களுக்கும் ஆகாத ஒரு காரியம். எதற்கும் எந்தக் காரிய வெற்றிக்கும் இவரது அருள்வேண்டும்.

பருத்த உடல், பெருவயிறு, தும்பிக்கை, ஐங்கரங்கள் இவற்றோடு கூடிய இவரது தத்துவம் மிகவும் ஆழமான பொருளுடையது. “**ஓம்**” என்ற ஓங்காரத்தோடு இணைந்து இவரைப் போற்றி வணங்குதல் யாவரும் அறிந்ததே. “பெரும்வயிறு,” “பேழை வயிறு,” “பருத்த வயிறு,” “ மத்தள வயிறு” என்றெல்லாம் அழைக்கப்படும் இவரது வயிற்றுள் அண்ட சராசரங்களும் அடங்கும் என்பதை உணர வேண்டும்.

இவரே ஓங்கார ஜோதியாக விளங்குகிறார். “**ஏகாக்ஷரம்**” என்று சொல்லப்படும் “**ஓம்**” என்ற நாதத்தின் அதிபதி இவரே. ஓங்காரத்தினுள் அ, உ, ம என்ற மூன்று எழுத்துகள் உள்ளன. இதில் “அ” என்ற எழுத்தின் அதிபதி இவரே. இதைத்தான் திருவள்ளுவர் தனது குறளில் “**அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு**” என்று ஆதிபகவனினின்று தோன்றியவை எல்லா எழுத்துக்களும் என்கிறார். வள்ளுவர் குறிப்பிடும் அந்த “ஆதிபகவன்” என்ற முழு முதற் கடவுள் இவரே.

மேலும், “ஓம்” என்ற சொல்லில் அமைந்திருக்கும் அ, உ, ம என்பதில் “அ” என்பது “அகாரம்” எனப்படும். அதுவே நாதத்தின் மூலம் மற்றும் “**நாதப் பிரம்மம்**” என்றும் அழைக்கப்படுபவர் ஸ்ரீமகாகணபதியே. இதைத்தான் “**யாரறிவார் அகாரம் அவனென்று**” என்று தாயுமானவர் தனது பாடலில் குறிப்பிடுகிறார். எனவே, ஓங்காரத்தின் வடிவமாகவும் ஓங்காரத்தின் அதிபதியாகவும் இருக்கும் கணபதியைப் பற்றி விளக்கும் இவ்விடத்தில் ஓங்காரத்தைப்பற்றிச் சிறிது விளக்குவது இவரை விளக்குவதற்கு இணையாகும் என்பது எமது எண்ணம்.

## ஓங்காரம்

ஓங்காரத்திலிருந்து ஐம்புதங்களான மண், நீர், நெருப்பு, வாயு, ஆகாசம் ஆகியவை தோன்றின. இதில் 'மண்' என்ற பூதத்தின் மற்றொரு பெயர்தான் பிருதிவி என்பதாகும். இதுதான் ஐம்பூதங்களில் மிக முக்கியமானது. பிரணவம் என்ற "ஓம்" என்ற அட்சரத்துள்ளே 'அ' என்ற அகாரம், 'உ' என்ற உகாரம், 'ம' என்ற மகாரம் மற்றும் அர்த்த மாத்திரை என்று உபநிஷத்தில் வர்ணிக்கப்படும் ஒலி முடிவடையும் இடத்தின் தத்துவமும் ஆக நான்கு தத்துவங்களும் அடங்கியுள்ளன. இவை நான்கும் சேர்ந்து "மண்" என்ற 'பிருதிவி' தத்துவத்தினுள் அடங்கியுள்ளன. இதுவே மற்றப் பூதங்களைக் காட்டிலும் விசேஷமாக கருதப்படும். பிரிதிவி தத்துவத்தின் சிறப்பு அம்சமாகும்.

ஸ்ரீமகாகணபதியே பிரணவமாகிய "**ஓம்**" என்பதின் அதிதேவதை யாவார். எனவே, ஓங்காரத்தின் தத்துவத்தையும் விவரங்களையும் இங்கு காண்போம்.

பெரும் வேத விளக்கங்கள் யாவும் பிரணவமான ஓங்காரத்தின் அருளினால்தான் முனிவர்களுக்குக் கிடைத்தன. "**பிரணவச் சித்தி**" எனப்படும் பெரும் நிலையை அடைந்துதான் அவர்கள் பெரும் "பிரம்ம நிஷ்டையில்" இறைவனின் அருளினால் தோன்றிய பிரம்ம உபதேசங்களை வேதங்களாகவும் உபநிடதங்களாகவும் நமக்குத் தந்திருக்கின்றனர். மேலும், ஓங்காரத்தினின்று தோன்றியவைதான் "**பஞ்ச பூதங்களான மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்**" என்பன. இத்துணைச் சக்தி வாய்ந்த நாத பிரம்ம ரூபமான இந்த ஓங்காரத்தில் இசையின் ஏழு ஸ்வரங்களான "**ஸ–ரி–க–ம–ப–த–நி**" என்பவை அடங்கியுள்ளன. ஆழ்நிலைத் தியான மார்க்கத்தில் "**சமாதி**" போன்ற நிலைகளைக் கடக்கும் யோக மார்க்கத்தில் சாதகன் இவ்வேழு சுரங்களைப் படிப்படியாகத் தானாக கேட்க முடியும் என்கிறது "**நிஜானந்தபோதம்**" என்ற தெய்வீக நூல். மேலும், தவ சிரேஷ்டர்களாக இருப்பினும் மனிதனுள் யோக நித்திரையில் கேட்கக்கூடிய ஸ்வரங்கள் "**ஸ–ரி–க–ம–ப–த**" என்ற ஆறுதான். இதில் ஆறாவது சுவரமான "**த**" என்கிற "தைவதம்" என்பதைக் கேட்பதே தவத்தின் சிகரம் எனப்படுகிறது. இந்த ஏழு சுவரங்களும் சேர்ந்த கோர்வை "**நாதம்**" என்று அழைக்கப்படுகிறது. இதற்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி ஆவார்.

ஓங்காரத்தினின்று பிறந்த இந்த ஐம்பூதங்களே நம்மைப் புலனடக்கமின்றி யோக நிலைக்குச் செல்லாமல் தடுக்கின்றன. அங்குதான் மனிதன் மனிதனாக மட்டுமே இருக்கிறான். இவற்றை மீறுவதே யோகம் எனப்படும். "சப்தம்" என்பது ஒரு ஜடப்பொருள் இல்லை. மாறாக, நாதம் என்ற நிலையில் நமது உயிராகவும் இருக்கிறது. இங்குத்தான் நமது உயிராகிய (ஓம்) சப்தத்தில் அடங்கியுள்ள ஏழு சுவரங்களின் பெருமையை விளக்குகிறது.

மேலும், இந்த ஏழு சுவரங்களே இயற்கையின் நாடி நரம்புகளாக இருக்கின்றன. இந்த ஏழு சுவரங்களும் சேர்ந்த பெரும் சக்திதான் "பிரணவம்" என்ற ஓங்காரம் ஆகும். இந்த ஸ்வரங்களே நமது உடலின் 10 நாடிகளாகவும் முதுகெலும்பின் வழிநடக்கும் செயல்களாகவும் (தண்டுவடம்) இயங்குகின்றன. ஆகவே, இவை ஏழும் சேர்ந்துள்ள பிரணவமே (ஓம்) நமது உடலின் இயக்கத்திற்கு ஆதாரமானவை. எனவே, இந்த ஓங்காரத்தின் அதிபதியான ஸ்ரீமகா கணபதி முழுமுதற் கடவுள் என்றும் ஞான முதல்வன் என்றும் போற்றப்படுகிறார். மேலும், ஏழு சுவரங்கள் அடங்கிய பிரணவத்தின் நாயகனான இவரைத்தான் "நாதப் பிரம்மம்" என்று அழைக்கின்றோம். இதுவே சிருஷ்டித் தத்துவத்தைக் குறிக்கும் அட்சரமாகும். "ஓம் என்ற பிரணவமே" சித் சக்தியாக மாறி இயங்கும் சித்தியாகும். இந்நிலையில்தான் "பரமாத்மாவின் (ஸ்ரீமத் நாராயணனின்) திவ்ய சங்கநாதம் இருமுறை தொடர்ந்து ஒலிக்கும்". இதுவே சௌந்தர்ய லகரியில் ஸ்ரீஆதிசங்கரர் கூறிய பராபஸ்யந்தி, மத்யமா, வைகரி என்ற ஒலி அலைகளில் "மத்தியமா வைகரியாக"மாறும் நிலையாகும். இயற்கையை யோகத்தில் அறியும் சக்தியை இஃது நமக்கு அளிக்கிறது.

ஓங்காரமே ஆதியும் அந்தமுமான வஸ்துவாக எதிலும் நிறைந்துள்ளது. பஞ்ச பூதங்களில் "மண், நீர்" இவை இரண்டும்தான் நமது உயிர் மூச்சுக்கு ஆதாரமாக நின்று பெரும் தவநிலையில் பரமாத்மாவான "அந்தராத்மாவுடன்" தொடர்பு கொள்ளும் சக்தியைத் தருகின்றது. இந்நிலையில்தான் ஸ்ரீகிருஷ்ணன் நமக்கு உணர்த்திய பகவத் கீதை, வேதவியாசர் அருளிய வேதம், உபநிடதம் போன்றவை அறிவில் தோன்றின. இவ்விரண்டு பூதங்களே (மண், நீர்) ஏழு சுவரங்களையும் தாங்கிச் செயல்பட வைக்கின்றன. எனவே, அண்ட சராசரங்களனைத்தையும் காத்துத் தாங்கி

நிற்கும் இந்த ஏழு சுவரங்களை நமது உயிரோடு இணைத்திருப்பது மண், மற்றும் நீர் என்ற இந்த இரு பூதங்கள்தான்.

## யோகம்

யோக மார்க்கத்தின் பல வழிகளை முன்னோர்கள் கையாண்டிருக்கிறார்கள். "யோகம்" என்பது என்ன? இதையறிந்து கொள்வதே யோகத்தின் முதற்படியாகும். இதைத் தெரிந்துகொள்ளாமல் எடுக்கும் எந்த முயற்சியும் யோகம் ஆகாது. தெய்வீகப் பலன்களையும் தரா'து.

மனிதன் பிறந்து வளர வளரப் புலன்கள் அவனைத் தன்பால் இழுக்கின்றன. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற பல நிலைகள் சிற்றறிவில் தோன்றி, "**ஒருநிலைப்பட வேண்டிய மனத்தைச்**" சிதறடிக்கின்றன. இவற்றை "மாயை" என்கிறோம். இம்மாயையை வென்றுவிட்டால் மட்டும் போதாது. மாறாக, நமக்குள் அந்தர்யாமியாக இருக்கும் "**இறைவன்**" நம்முடன் உறவாடும் நிலைக்கு மனிதன் தன் சுய முயற்சியில் முன்னேறவேண்டும். அதற்குத் தடையானவை: அவனது "**மூச்சு, பேச்சு, உயிர்**" என்பவை. பெரும் யோக விளக்கங்கள் இவ்விடம் அவசியம் என்றாலும் சுருங்கச் சொல்வதுதான் இங்கு இயலும். அதாவது, "அஷ்டாங்கயோகம்' என்ற பதஞ்சலியின் யோகச் சூத்திரத்தின்படி. மூச்சையடக்கிச் சமாதி நிலையில் இறைவனை உணருதல் என்பது இக்காலத்தில் இயலாத ஒன்று. எண்ணத்தை அடக்கி மௌன நிலையில் முதிர்ந்து ஆழ்நிலைத் தியானத்திற்குச் செல்வது கடினம். மேலும், அதன் மேற்படியில் உயிருடன் எண்ணம் சேர்ந்து, "**யோக நித்திரையில்**" சென்று இறைவனுடன் உறவாடவேண்டும் என்றால், மனிதன் எத்துணைப் பெரிய முயற்சி எடுக்கவேண்டும் என்பது புரியும். "**திருமூலர், ஆதிசங்கரர், திருஞானசம்பந்தர்**"போன்றவர்களின் நிலையை நாம் எய்தவேண்டும். அங்குத்தான் இறைவனுடன் மனிதன் உறவாட முடியும் என்றால் எத்துணைக் கடினம் இது என்பது புரியும்.

மேலும், பக்தி மார்க்கத்தில் "**ஸ்ரீவித்தை, ஸ்ரீசக்கர பூஜை, ஜபம், தபம்**" போன்ற ஆராதனை முறையில் சென்றாலும் எண்ணத்தைக் கட்டுப்படுத்தித் தன்னை மறந்த நிலைக்கு வந்துதான் இறைவனின்

ஞானஒலியைப் பெற முடியும். எனவே, ஸ்ரீவித்தை சிறந்தது. இல்லற வாழ்வில் இருப்பவர்க்கு உகந்த ஒரு "வழிபாடு" முறையாகும் சக்தியை ஆராதிக்கும் இதிலும் ஸ்ரீகணபதியின் அருள் தேவைப்படுகிறது.

எனவே, "அகாரமாகிய" இறைவனின் தெய்வீகக் குரலைத் தனது உள்ளிருந்து கேட்கும் நிலையைத்தான் "யோக நித்திரை" (அல்லது) தோடுடைய செவி என்று (திருஞானசம்பந்தருக்குச் சொன்னதுபோல) அழைக்கிறோம். அதற்கு அதிதேவதையே ஸ்ரீமகாகணபதிதான்.

ஸ்ரீமத் பகவத் கீதையை எல்லாரும் அறிவர். ஸ்ரீஇராமன் தனது அவதாரத்தில் ஆராதித்த ஸ்வாமி "ஸ்ரீ ரங்கநாதன்." ஆனால், இராமன் கீதையைப் போல் எதையும் உபதேசிக்கவில்லை. பகவத் கீதையைத் தந்த ஸ்ரீகிருஷ்ணனுக்கு ஆராதனைத் தெய்வமாக உபாசனைத் தெய்வமாக இருந்தது ஸ்ரீமகாகணபதி என்று பல சான்றுகள் உள்ளன. எனவே, "தெய்வீகப் புருஷனாக" மாறிச் சுய அனுபவத்தில் ஆதிபகவனின் அருளுடன் உபதேசத்தால் பெரும் அரிய தத்துவங்களை விளக்குவதற்கும் ஸ்ரீமகாகணபதியின் அருள்வேண்டும். எனவேதான், "எம்மதமும் போற்றும் முழு முதற் கடவுளாக ஸ்ரீமகாகணபதி" இருக்கிறார்.



# ஸ்ரீமகாகணபதியின் மூல மந்திரமும் அதன் இரகசியமும்

"**மந்திரம்**" என்பது மனம் லயித்திருக்கும் நிலையே யன்றி, வேறு ஒன்றுமில்லை. நமது உடலில் **இடை நாடி, பிங்கலை நாடி, சுழுமுனை நாடி** என்று மூன்று பிரதான நாடிகள் உள்ளன. இதில் **இடைநாடி** என்பது நமது சாதாரண மூச்சுக் காற்றுக்குக் காரணமாக இருக்கும் நாடியாகும். **பிங்கலை நாடி** என்பது காற்றிலுள்ள பிராணச் சக்தியை மட்டும் "**நாதமாக**" நமது உடலில் சேர்க்கும் பெரும் யோக நிலைக்குரிய நாடியாகும். இந்தப் பிங்கலை நாடிதான் "**சுழுமுனை**" நாடியையும் இடைகலை நாடியையும் இணைக்கும் சக்தியாகும்.

ஆதியில் பிறப்பின்முன் "**நாதவடிவில் இருந்த மனிதனின் நுண்ணுடம்பு**, பிறப்பில் **ஐம்பூதங்களின் சேர்க்கை கொண்ட "சிறு மூச்சு**" (இடை நாடி) என்று மாறிச் செயல்படுகிறது. பிங்கலை எனப்படும் சுத்தமான ஐம்பூதச் சேர்க்கைக்கு அப்பாற்பட்ட மூலப் பிராணன் என்ற சக்தியை நமது சரீரம் மீண்டும் பெறவேண்டும். அதற்குத்தான் மந்திரச் சித்தி தேவைப்படுகிறது. எனவே, எல்லா மந்திரங்களும் அதன் சித்திகளால் நமது தேகத்தைத் தூய்மைப்படுத்தித் தெய்வீகச் சக்தி அதனுள் ஏற்பட உதவுகிறது. எனவே, மந்திர சாஸ்திரம் தெய்வ வழிபாட்டில் மிகவும் அவசியம். ஏழு கோடி மகா மந்திரங்களுக்கும் அதிபதியான ஸ்ரீமகாகணபதியின் "**மூல மந்திர இரகசியங்களை**" இப்பொழுது நாம் காண்போம்.

ஸ்ரீமகாகணபதியானவர் யோகத்தில் தத்துவத்தில் மற்றும் படைப்பு, காத்தல, அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து காரியங்களிலும் அதிபதியாக ஆட்சி செய்கின்ற உண்மைகளை இனி இங்குக் காண்போம். அப்போதுதான் ஸ்ரீமகாகணபதியைச் சகல மதத்தினரும் மதத்தின் உட்பிரிவைச் சார்ந்தவர்களும் முழுமுதற் கடவுளாக ஆராதிப்பதன் உண்மை விளக்கத்தை நாம் அறிந்துகொள்ள முடியும். ஸ்ரீமகாகணபதியே "**அநாகத த்வனி**" யாக இருப்பவர். மௌனத்தின் குரல் என்ற தெய்வீகக் குரலாக இருப்பவர். அவரே அண்டமாகவும் நாதப் பிரம்மமாகவும் ஏழு ஸ்வரங்களையும் தனக்குள் அடக்கியுள்ள "**ஓம்**" என்ற பிரணவ ஒலியாகவும் இருக்கிறார். மேலும், அவரே நமது உடலில் சப்தமாகவும் மூக்கில் மூச்சுக் காற்றாகவும் "**விசுத்தி**" என்கிற நமது தொண்டையில் தெய்வக் குரலாகவும்

அடி வயிற்றில் பிரணவ நாதமாகவும் தொண்டையில் உணவை விழுங்க வைக்கும் அக்னியாகவும் எல்லா மந்திரங்களுக்கும் முதன்மையான "**ஓம்**" என்கிற பிரணவ நாதமாகவும் விளங்குகிறார். இந்தப் பிரணவ நாதமே சகல புவனங்களுக்கும் ஆதாரச் சக்தியாக உள்ளது. இதன் நாதனாகிய ஸ்ரீமகாகணபதியின் மூல மந்திரத்தைச் சற்று விரிவாக உணர்வோம்.

## மூல மந்திரம்

"**ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதியே**
**வர வரத சர்வ ஜனமே வசமானாய ஸ்வாஹா**"

## ஓம்

இதில் "**ஓம்**" என்பது சப்தகோடி மகா மந்திரத்தின் தலைவன் எனப்படும் பிரணவ நாத மந்திரம். ஓம் என்பதே "**அக்னி பீஜமாகும்**". இதில் கணபதி மகா மந்திரத்தின் பகுதிகளான "**க்லீம், க்லௌம்**" என்ற இரண்டும் கலந்து இருக்கின்றன. சகல புவனங்களையும் காத்துக் கொண்டிருக்கும் மகா சக்தியாகும். "**பிரணவம்**" என்ற இதன் சித்தியைப் பெற்றவர்கள்தான் மேலும் பெரும் தவநிலைக்குச் சென்று இறைவனிடம் நேரிடையாக உபதேசங்களையும் ஆத்மபோதங்களையும் பெற முடியும்.

## ஹ்ரீம்

இது "**அக்னியின் பீஜமாகும்**" "**சுவாசப் பந்தனம்**" எனப்படும் "**மூச்சையடக்குதல்**" என்பதில் வெற்றியைத் தரக்கூடிய மந்திரமாகும். "**ஓம்**"என்ற பிரணவம் இந்தச் சக்தி பீஜமாகவும் செயல்படுகிறது. மேலும், "**சமாதி**" நிலையை யோகத்தில் அடைவதற்கு நமது தேகத்தின் இயக்கத்திற்குக் காரணமான ஐந்து பூதங்களான மண், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம் என்பவை ஒன்றாகி, ஒரே பொருளாக மாறவேண்டும். இந்நிகழ்ச்சி நமது தேகத்தில் ஏற்பட்டுச் சமாதி நிலையை யோகத்தில் நாம் அடைய "**ஹ்ரீம்**" என்ற இந்தச் "**சக்தி உபாசனை**" மிகவும் அவசியம். இதுவே மந்திரச் சாதனையில் "**நாத பீஜத்தைச்**" சித்தி செய்து கொள்வதாகும். இது ஸ்ரீதேவியின் சித்தி யாகும். இதனால், ஸ்ரீதேவியாக, அம்பிகையாக இருந்து ஸ்ரீவித்தை உபாசனையில் அருள்புரிவதும் இந்த ஸ்ரீமகாகணபதியே என்பது உண்மை.

## ஸ்ரீம்

இது "ஸ்ரீமகாலக்ஷ்மியின் அருளைக் குறிக்கும். யோகமுறையில் ஆறுஆதாரச் சக்கரத்தில் கழுத்திற்கு மேலுள்ள "**விசுத்தி**" என்ற ஸ்தானத்தையும் இது குறிக்கிறது. இதற்கு **லக்ஷ்மி** நாதம் என்று பெயர்.

ஸ்ரீமந் நாராயணனின் சங்க நாதத்தைக் கேட்கும் பெரும் தபோநிலையில் சாதகன் கேட்க உதவும் மந்திரம் இதுவே. **ஸ்ரீநாராயண மந்திரத்தின் உயிர் நாடி** இது. உள்ளிருக்கும் நமது அந்தர்யாமியை (உள்ளத்திலுள்ள இறைவனை) யோகத்தில் எழுப்பி, அவனுடன் உரையாடுவது என்பதே இதன் பொருள்.

**க்லீம்**

எண்ணத்தையும் "**உயிர்**" எனப்படும் தத்துவத்தையும் (சப்த தன் மாத்திரை எனப்படும் ஒலியின் ஆதார ஸ்தானத்தை) சூட்சும கதியையும் உதவும் "**அக்ஷரமாகும்**". அதாவது, நாதம் என்பது சப்தத்தின் உயிர்நிலை யென்றால், அந்த நாதத்தை யறிய உதவுவது இதுவே. அதாவது, நமது அறிவின் பெரும் ஆழத்தின் திறனைக் குறிக்கும் சக்தியாகும்.

**க்லௌம்**

இதுவே "**ஹம்ஸ காயத்திரி**" எனப்படுவது. "**ஹம்ஸ ஸோஹம் ஸோஹம் ஹம்ஸ**" என்று மூச்சுக் காற்றுடன் இணைந்து செயல்பட வைக்க நாம் செய்யும் "**யோகமுறை மந்திரச் சாதனையின்**" முடிவு நிலை யாகும். "**ஹம்ஸ காயத்திரி**" என்ற இதன் சித்தி மாபெரும் சித்தியாகும். "**ரூப தன்மாத்திரை**" என்று சாஸ்திரங்கள் அழைக்கும் சக்தியைச் சித்தி செய்து கொள்வது என்பது இங்குப் பொருள். இந்த ரூப தன் மாத்திரையின் காரணமாகத்தான் நாம் பார்க்கும் பொருள்களின் ரூபம் காட்சி நமது கண்ணின் வழியாக அறிவிற்குச் சென்று மனத்தில் பதிகிறது. எனவே, காணும் எல்லாக் காட்சிகளும் ரூபங்களும் இந்த "**ரூப தன் மாத்திரை**" என்பதன் செயலாகும். எனவே, இதனைச் சித்தி செய்து கொள்வதுதான் மகான்களின் முதற் பயிற்சியாகும்.

மேற்கூறிய "**ஓம்**" என்ற பிரணவத்தின் "இந்த இரண்டு ஸ்ரீமகாகணபதி மூல மந்திர பகுதிகளான" "**க்லீம்**" என்பதும் "**க்லௌம்**" என்பதும் இணைந்திருக்கின்றன. இவைதான் நமது உடல் மற்றும் உயிர்இயக்கத் தத்துவங்களாக விளங்குகின்றன.

எனவே, நமது உயிரும் உடலும் "**மாயை**" எனப்படும் புலன்வழி மனம், புத்தி இவை செல்லாமல் தடுக்கப்பட்டு யோக நித்திரையில் நாம் இறைவனுடன் தொடர்புகொண்டு ஞான **உபதேசங்களைப்** (அருள்வாக்கு) பெரும் வழிக்குத் தேவையானது இந்த **ஸ்ரீமகாகணபதி மந்திரச் சித்தி**. எனவே, அந்தர்யாமியாகிய பரமாத்மா நம்முடன் உறவாடி **அந்தர்முகம்** எனப்படும் தவநிலையில் (புலனடக்கத்தில்) ஞானத்தை நமக்குப் போதிப்பதே சகல

யோகத்தின், தவத்தின் எல்லை/குறிக்கோள் ஆகும். இத்துணைப் பெரிய தவநிலைக்கு முழுமுதற் கடவுளான ஸ்ரீமகாகணபதியின் அருள் மிகவும் அவசியம் என்பது உண்மை. ஸ்ரீமத் பகவத் கீதையை நமக்கு அளித்த ஸ்ரீகிருஷ்ணனின் உபாசனைத் தெய்வமே இந்த ஸ்ரீமகாகணபதி யாவார். **"சதுர்த்தி விரதம்"** என்ற ஸ்ரீமகாகணபதி விரதத்தை ஸ்ரீகிருஷ்ணன் அனுஷ்டித்தார் எனபதும் அதைக்கொண்டு நான்காம் பிறைச் சந்திரனைக் கண்டதால் ஏற்பட்ட தோஷம் நீங்கப் பெற்றார் என்பதும் யாவரும் அறிந்ததே.

**கம்**

ஸ்ரீவித்யா உபாசனையில் **"ஹம்ஸ காயத்திரி சித்தி"** என்பது பெரும் நிலையாகும். இதுவே நமது உயிருக்கு உயிராக இருக்கும் பெரும் சக்தியாகும். அம்பிகையும் ஸ்ரீமகாகணபதியும் இச்சக்தியின் இருபுறமாக இருக்கின்றனர். லம்பிகா யோகம் அல்லது சித்தி எனப்படும் பெரும் தவநிலையில் உணரும் ஸ்ரீசக்கர மத்யஸ்தம் என்பது ஸ்ரீமகாகணபதியின் அருளே. **"லம்பிகா யோகம்"** என்பது நமது இரு நாக்கையும் தியானச் சமாதியில் இணைத்து இருத்தி வைக்கும் தவநிலை யாகும்.

யோக மார்க்கத்தில் ஒரு நிமிடக்காலம் பிராணனைக் கட்டுப்படுத்திச் சித்த விருத்தி நிரோதம் அல்லது சித்த ஸ்வாதீனம் என்ற மாபெரும் நிலையை அடைவதே சகல யோகமுறைகளின் சாஸ்திரங்களின் குறிக்கோளாகும். இதற்குப் பெருந்துணையாக இருந்து உதவும் அட்சரம்தான் **"கம்"** என்ற ஸ்ரீமகாகணபதியின் மூல மந்திரப் பகுதியாகும். எனவே, **"கம்"** என்ற பீஜாட்சரச் சித்தியின்றி மனிதன் இறைவனுடன் தொடர்புகொண்டு உரையாடுவது இயலாத காரியமாகும். சுருக்கமாக "மூச்சை யடக்கும் சித்தியை இந்தக் **கம்** என்ற அட்சரம் அளிக்கிறது. மூச்சு நின்றால்தான் **"நிஷ்டை"** கூடும். நிஷ்டை என்பது ஸ்ரீமகாகணபதியின் அருள்தான். இந்தக் **"கம்"** என்பதும் **"ஓம்"** என்பதும் ஒன்றே.

இதுவே (கம்) சகல அண்ட சராசரங்களின் இயக்கத்திற்கு **"அடிப்படையாக, மூல காரணமாக இருக்கும் பெரும் பிரம்ம சக்தியாகும்"**. சித்தத்தை அடக்கி ஆளுந்திறன் என்பது இதன் சித்தியே. "சித்த விருத்தி நிரோதம்" என்ற பதஞ்சலி முனிவரின் யோகச் சாஸ்திரமான ஹடயோகச் சாத்திரத்தில் கூறப்படுவது என்பது இந்தச் சித்தியே.

**ஸ்ரீமகாகணபதி மூல மந்திரத்தின் சாரம்**

**ஓம்** – இதுவே பிரணவம். இதில் **க்லீம், க்லௌம்** என்ற அக்னி அக்ஷரங்கள் இதில் அடக்கமாய் உள்ளன.

**ஸ்ரீம்** – இதுவே ஸ்ரீமகாலக்ஷ்மி அக்ஷரம். இதன் சித்தி பெற்றால் ஸ்ரீமந் நாராயணனின் "**சங்கநாதத்தைத்**" தியானச் சமாதியில் கேட்கலாம். அந்தர்யாமியாக நமக்கும் இருக்கும் "பரமாத்மா" நம்முடன் உறவாடும் பெரும் தவநிலையில் நம்மைக் கொண்டுசேர்க்கும் நிலையைக் குறிக்கும் மங்களகரமானஅக்ஷரம் இதுவே. இதற்கு "**லக்ஷ்மி நாதம்**" என்று பெயர். அஷ்டாக்ஷரி என்னும் ஸ்ரீமந் நாராயணனின் மகா மந்திரத்தின் உயிர்நாடி இதுவே.

**ஸ்ரீம்–தனம்** எனப்படுவது சங்கநாதம் கேட்பது. அதுவே கடைநிலையாகும்.

**ஹ்ரீம்** – இது அக்னி பீஜம் "**ஸ்ரீருத்ரன்**" இதற்குக் காவல். இதுவே "**ஓம்**" என்ற பிரணவமாகச் செயல்படும் சமாதி நிலையுடன் தொடர்புடையது.

**க்லீம்** – "**சப்த**" தன் மாத்திரை என்ற நமது கேட்கும் சக்திக்கு ஆதாரமான திறனை நாம் வெல்வதை இது குறிக்கும்.

**க்லௌம்** –ரூப தன் மாத்திரையை (பார்வைத் திறன்) வெல்வதை இது குறிக்கும்.

**கம்** – இது "**ஓம்**" என்பதற்கு இணையான மந்திரம் மூச்சையடக்கும் "கும்பகத்தை" மற்றும் மனோலயம் (அ) நிஷ்டையை இது குறிக்கிறது.

**கணபதயே**– கணங்களுக்கெல்லாம் அதிபதியே.

**வரவரத** – பெரும் வர பிரசாதத்தைத் தருபவர்.

**ஸர்வஜனமே** – ஸர்வ சகல தேகத் தத்துவங்களை

**வசமானாய**– தன் வசமாகும்படி செய்வீராக. அதாவது, யோக நிலையில் மேல் செல்லும்போது இடையூறுகள், தடைகள், சிறு தேவதைகளின் இடைமறிப்புப் போன்றவை நிகழலாம். இவற்றைத் தடுத்து எல்லாத் தேவதைகளும் "**நமது கடமைகளுக்கும் நல்ல செயல்களுக்கும்**" துணையாக இருக்கப் பிரார்த்திக்கும் இந்த மந்திரத்தால் "**நமது செயல்கள்**" யோகப் பயிற்சி மற்றும் (பூஜை) ஜபம், தபம் போன்ற காரியங்கள் நமக்கு நற்பலனைத் தரவேண்டும் என்பது இங்குப் பொருள்.

அஷ்ட மங்களத்திற்கும் அதிபதி இவரே. எனவேதான் சகல மங்களக் காரியங்களுக்கும் இவரை முதன்மையாக வைத்துப் பூஜிக்கும் வழக்கம் இருக்கிறது. எனவே, ஸ்ரீமந் நாராயணனின் காரியமூலமாக இருக்கும் இவரிடம் "அஷ்டலக்ஷ்மியும் குடி கொண்டிருக்கிறாள்" என்பதால் இவரை வேண்டாதவர் எவரும் இலர்.

முக்கியமான கணபதி தியானம் மற்றும் பூஜா மந்திரங்கள் சில இங்கே தரப்பட்டிருக்கின்றன

1. கணநாம் த்வா கணபதிம் ஹவாமஹே கவீம் கவீநா
முபமச்ர வஸ்தமம்: ஜ்யேஷ்டராஜம்
ப்ரம்மணாம் ப்ரம்மணஸ்பதே ஆநஸ்
ச்ருண்வன் னூதிபி: ஸீத ஸாதனம்
– கணபதி ஸூக்தம்

(இது ரிக் வேதத்தில் அஷ்டம் 2 – அத்தியாயம் 6 – மண்டலம் 2 இல் அனுவாகம் 3 இல் உள்ளது)

2. "ஓம் தத் புருஷாய வித்மஹே வக்ரதுண்டாய தீமஹி
தன்னோ தந்தி ப்ரசோதயாத்"

இது ஸ்ரீ மகா கணபதி காயத்திரி மந்திரம்

3. ஸ்ரீகணேச பஞ்ச ரத்தினம்
(ஸ்ரீஆதி சங்கரர் அருளியது)

1. முதா கராத்த மோதகம் ஸதா விமுக்தி ஸாதகம்
கலாதராவ தம்ஸகம் விலாஸி லோக ரக்ஷகம்
அனாயகைக நாயகம் வினாஸிதேப தைத்யகம்
நதாஸூப ப்ரணாஸகம் நமாமி தம் வினாயகம்.

2. மதேதராதி பீகரம் நவோதிதார்க்க பாஸ்வரம்
நமத்ஸூராரி நிர்ஜரம் நதாதிகாப துத்தரம்
ஸூரேஸ்வரம் நிதீஸ்வரம் கஜேஸ்வரம் மஹேஸ்வரம்
கணேஸ்வரம் தமாஸ்ரயே பராத்பரம் நிரந்தரம்

3. ஸமஸ்த லோக ஸங்கரம் நிரஸ்த தைத்ய குஞ்ஜரம்
தரே தரோதரம் வரம் வரேபவக்த்ர மக்ஷரம்
க்ருபாகரம் க்ஷமாகரம் முதாகரம் யஸஸ்கரம்
மனஸ்கரம் நமஸ்க்ருதாம் நமஸ்கரோமி பாஸ்வரம்.

4. அகிஞ்சனார்த்தி மார்ஜனம் சிரந்தனோக்தி பாஜனம்
புராரி பூர்வநந்தனம் ஸூராரி கர்வ சர்வனம்
ப்ரபஞ்சநாஸ பீஷணம் தனஞ்ஜயாதி பூஷணம்
கபோல தான வாரணம் பஜே புராண வாரணம்.

5. நிதாந்த காந்த தந்த காந்தி மந்த காந்த காத்மஜம்
அசிந்த்ய ரூப மந்தஹீன மந்தராய க்ருந்தனம்
ஹ்ருதந்தரே நிரந்தரம் வஸந்தமேவ யோகினாம்
தமேவ தந்தமேவ தம் விசிந்தயாமி ஸந்ததம்.

இதில் ஸ்ரீ ஆதி சங்கரரால் இயற்றப்பட்ட "இந்தக் கணேச பஞ்சரத்னம்"மிகவும் புனிதமானது. வேதங்களுக்கு இணையான இதில் சகல மங்களகரமான மந்திரங்களின் "அக்ஷரங்கள்" அமைந்துள்ளன. காலையில் எழுந்ததும் இதனைப் படிப்பது நல்லது.

# ஸ்ரீமகாகணபதித் தத்துவ விளக்கம்

அண்ட சராசரத்தையும் இயக்கி ஐந்தொழில் செய்யும் ஸ்ரீமகாகணபதியைப் புகழ்ந்து பாடும்போது ஔவையார் தனது பாடலில், "**வானோரும் காதலால் கூப்புவர் தம் கை**" என்று கூறுகிறார். எனவே, இவரே சகல லோகங்களில் உள்ளவர்களுக்கும் ஆதாரச் சக்தியைத் தரும் பரமாத்மா. ஓங்கார வடிவின் உறைவிடமும் பிரணவப் பொருளுமாகிய இந்த "**முழுமுதற் கடவுள்**" யோகத்திலும் சாத்திரத்திலும் புராணங்களிலும் எங்கும் முதன்மை பெற்று விளங்குகிறார்.

"நாதப் பிரம்மன்" என்று மறைகள் இவரை அழைக்கும். இவர் (சிதாகாசம்) வேதங்கள் தோன்றிய வெண்கதிர் எனப்படும் பேரறிவு நிலத்தின் அதிபனாகவும், காம பீஜத்தின் அதிபதியாகும். கேசரி, நிஷ்டை, கும்பகம் (மூச்சையடக்குதல்) குண்டலினி, லம்பிகா மற்றும் ஸ்ரீவித்தை பூர்த்தி (அ) மகா சோடசி சித்தி என்கிற பெரும் தபோ நிலைகளுக்கும் ஆதாரமானவர். இவர் அருளின்றி இயற்கையை வெற்றிகொண்டு யோகத்தில் மற்றும் உபாசனைமுறையில் "ஞானபோதம் (பிரம்ம உபதேசமாக) சித்தி பெற்று, நமது உள்ளத்திலுள்ள இறைவனுடன் நாம் உறவாடும் பெரும் தவநிலை எவர்க்கும் கிட்டாது. இவரது தத்துவம் 18 பாடல்கள்மூலம் இங்கு விளக்கப்பட்டிருக்கிறது.

1. **மூலகணபதி வெண்கதிர் அதிபன் சோம வட்டம்**
   **ஐந்தெழுத்தின் மூலம் ஆதி பீஜம்**
   **ஜகத் அனைத்தும் அதில் ஒடுக்கம்**
   **நாத ப்ரம்மன் என்பார் அகார ஒலி**

"மூல கணபதியே சோம வட்டம் சூழும் வெண்கதிருக்கு (சிதாகாசம்) அதிபதியாவார். "பஞ்சாட்சரம்"எனப்படும் பரமேஸ்வரனின் மந்திர ஸ்வரூபத்தின்மூலமும் சகல மந்திர எழுத்துகளுக்கும் ஆதிமூலமும் இவரே. ஜகத் அனைத்தும் இந்த ஆதி எழுத்துக்குள் அடங்கும்." இந்த ஆதி எழுத்தையே "**நாத பிரம்மம்**" (அ) அகார **ஒலி** என்பார். பரமாத்மா(அ) ஸர்வேஸ்வரன்எனப்படுபவர் இவரே. எனவேதான், சகல தேவதைகளுக்கும் நாயகனான இவரை "**விநாயகர்**" (தனக்கொரு தலைவன் இல்லை என்றபடி) மற்றும் முழு முதற் கடவுள் எனப் போற்றுகிறோம்.

"யாரறிவார் அகாரம் அவனென்று" என்று கூறியபடி, எங்கும் நிறைந்து ஞானியின் நினைவில் நிற்கும் "அகாரம்" என்று யோகச் சூத்திரம் புகழும் பரமாத்மாவை யோகமுறையில் (அ) பூசை போன்ற வழிபாட்டுமுறையில் (அ) ஞானமார்க்கமாக "ஆத்ம விசாரத்தினால்" அறிவதே பிறவிப் பெருங்கடலை நீந்துவது என்பது.

2. **சடலம் எழாது அதுவன்றி, சுக்ல வித்து**
**காம பீஜம் வேறென்ன ஆண் லிங்கம்**
**மூவெட்டும் அதில் அடக்கம், பெண்ணில் சாய்ந்து**
**பெறுவது சவம், உயிர் இழந்து.**

மானிட உடலின் அசைவுகளும் இயக்கங்களும் ஓங்காரத்தின் செயலாகும். இந்த ஓங்காரத்தின் முதன்மை எழுத்தாகிய "அ" என்கிற அகாரம்தான் பரமாத்மா ஆகும். இதுவே பிரம்ம நிஷ்டையில் மனிதனுக்குத் "தெய்வக்குரலாக" இருந்து ஞான ஒளியின் பயனான "ஞானத்தைப் போதிக்கிறது". எனவே, யோகிகளுக்கு வெளிப்படும் இந்த "அகாரம்" தான் மனித உடலின் செயலாக, இயக்கமாக வடிவெடுத்து (புலன்வழி இயக்கம்) அவனது "ஞானத்தை" மறைக்கிறது. இது இல்லையென்றால் தேக இயக்கம் முடங்கிவிடும். **காமபீஜம்** என்கிற தத்துவம் இதுவே.

ஆண், பெண் என்று இறைவனால் காரண காரியத் தத்துவமாகப் படைக்கப்பட்டு உயிர்கள் பிறவிகளை எடுக்கின்றன. இங்கு "யோகச் சித்தாந்தப்படி மனிதனின் யோகச் சக்தியே அவனது உடலில் பல உருமாற்றங்களாகி, உயிர் அணுக்களாக மாறி உயிர்களைத் தோற்றுவிக்கக் காரணமாகிறது. அப்படிப் பிறவி எடுத்த எவனும் ஒருநாள் இறக்கத்தான் வேண்டும். எனவே, நமது உயிர் இரத்தம், மாமிசம், தாதுவாக மாறி வம்ச விருத்திக்குக் காரணமாகிறது. இதுவே மனித வாழ்க்கை.

3. **யோகம் உயிர்ப்பு பெறல் வெண்கதிர்**
**தாங்கி அதுவே என் சித்தி இந்நாள்**
**சோம வட்டம் எழும் இரு நாக்கு மையம்**
**கேசரியின் சித்தி பெற்று.**

"உயிர்ப்பு" என்பது நமது உடலிலிருந்து வீணாக வெளியேறிக் கொண்டே இருக்கும் (விரயமாக) நமது பிராணச் சக்தியாகும். புலனடக்கம் இல்லாமல் ஏற்படும் இதனைப் "புலனடக்கத்தில்" தடுத்து நிறுத்துவதுதான் "யோகம்" என்பது. அங்குதான் புலன்கள் ஒடுங்கி, நமது தேக இயக்கங்கள் சலனங்கள் யாவும் ஒடுங்கி உயிரும் உடலும் ஒருங்கிணைந்து செயல்படுகிறது. சித்த சுவாதீனம் எனப்படும் இந்நிலை பதஞ்சலி முனிவரின் அஷ்டாங்க

யோகத்தில் காட்டியுள்ள "சித்த விருத்தி நிரோதம்" என்ற நிலையைத் தாண்டிய நிலையாகும். காணாக்கண், கேளாச்செவி என்று தத்துவமாக விளக்கப்படும் "கேசரிச் சித்தி" என்ற நிலை கைகூடும் பெரும் யோகப்பீடமாகும். அதுவே, சோம வட்டம் (மூலாக்னி) சுழும் யோக நிலையில் இரு நாக்குகளும் இணையும் தவ நிலையாகும். இந்தக் கேசரி என்னும் சித்தி ஏற்பட, அதன் நாயகனான ஸ்ரீமகாகணபதியின் அருள் அவசியம் வேண்டும்.

4. **மூவெட்டும் பரமன் கூடு**
**நந்தி காவல் அதற்கு – சிறுமூச்சு**
**எல்லாம்பரி பாஷை**
**மயங்காதே அதில்.**

திருமூலர் திருமந்திரம் கூறும் "மூவெட்டு என்கிற 24 தத்துவங்களே பரமனின் இருப்பிடம். இந்தத் தத்துவங்களைக் கடந்துதான் மனிதன் யோகச்சாதனையின் மேல்நிலைக்குச் செல்ல முடியும். இதனைக் கடக்கும் வழியில் இயற்கை நம்மை எதிர்க்கிறது. அதாவது, புலன்களின் சலனத்திற்கு ஆதாரமான நமது மூச்சுக் காற்றாகவும் அதனுள் உறையும் நான் என்ற எண்ணமாகவும் (தேகத் தத்துவங்களாக) செயல்பட்டு நம்மைப் புலனடக்கம் பெறாமல் செய்கின்றது. இந்த இயற்கையின் தடையைத்தான் "நந்தி" (அ) நந்திகேசுவரர் என்று சைவ சித்தாந்தம் பறை சாற்றுகிறது. நந்தனார் கூறிய நந்தி மறைந்தது என்றதன் பொருள் இதுவே. அதாவது, நந்தி என்கிற தேக உணர்வும் தேக இயக்கங்களும் அடங்கிவிடத் தன்னுள் இருக்கும் ஈசனை மனக் கண்ணால் கண்ட நிலையை "நந்தனார்" அவ்விதம் விவரித்திருப்பதை நாம் உணரவேண்டும். இதைத்தான்,

**"நந்தி என்ற வாகனமே ஸ்தூல தேகம் ....**
**நான்முகனே கண் மூக்கு செவி நாக்காகும்."**

என்று ஒரு சித்தர் பாடியுள்ளார். நந்தனார் "நந்தி" மறையாதோ என்று கூறியதன் உட்கருத்து ஸ்தூல தேகம் மறைந்து, எப்போது சூட்சும தேகத்தைக் காண்பேன் என்று கூறியதுதான். சிறுமூச்சு என்று இதனை யோகச் சாத்திரங்கள் அழைக்கின்றன. இப்படிப்பட்ட சிறுமூச்சின் (நந்தி) வேகத்தில் மயங்காமல், புலனடக்கத்தாலும், பக்தியாலும் இதனை வென்று இறைவனை நாம் உணரவேண்டும் என்பது எல்லாத் தத்துவங்களின் ஒரே முயற்சி, குறிக்கோள் மற்றும் பயனாகும்.

5. **யோகம் பிறப்பது எண்ணில்**
**சிறு மூச்சு கைக்கூடக் கூட**
**சொல் அதில் வித்தாகும்**
**எழும் பார் மூலாக்னி சோம வட்டம்**

"சிறுமூச்சு" என்பது நமது மூச்சுக் காற்றும் தேக இயக்கமும் ஆகும். ("நந்தி" என்பது இதுவே) "யோகம்" என்பதன் பொருள் இணைப்பது/சேர்ப்பது என்பதாகும். ஜீவாத்மாவுடன் பரமாத்மாவை இணைப்பது என்ற இதுவே தவத்தின் கடைநிலை யாகும். இந்தச் சித்தி நாம் நமது எண்ணத்தை அடக்கி, நிறுத்தி எண்ணமற்ற "மனோலயத்தில் சஞ்சரித்தால்தான் சாத்தியமாகும். இதற்குத் தடையாக உள்ள இயற்கைச் சக்திகள் சிறுமூச்சு என்ற நமது தேகத் தத்துவங்கள். இதனை நாம் வென்றுவிட்டால் நமது எண்ணற்ற "மனோலயம்" கைக்கூடும். அதில்தான் யோகம் என்கிற மனித–தெய்வ இணைப்பு என்கிற தத்துவம் ஏற்படுகிறது. இப்படி எண்ணத்தைக் கடந்த நிலையில்தான் நமது உடலில் உள்ள 5 அக்னிகளில் "மூலாக்னி" என்ற ஒன்று வெளிப்படும் – இதுவே "சோமவட்டம்" என்றழைக்கப்படுகிறது. இதற்கு அதிதேவதையே "ஸ்ரீமகாகணபதி" ஆவார்.

6. **மூவெட்டும் யோனி மர்மம், ஆதித்தன் கலை**
   **யாரறிவார் அதன் ரகசியம்**
   **உன் தவம் பிறப்பு தேட**
   **இரு சுவாசம் சமம் அதில்.**

மூவெட்டு 24 தத்துவங்களும் யோனியில் (தாய் கர்ப்பத்தில்) நமக்கு ஏற்படும் தெய்வீக இரகசியம் ஆகும். மனிதனின் பூர்வ கர்ம பலன்களுக்கு ஏற்ப இவை நிர்ணயிக்கப்படுகின்றன. இதுவே "ஆதித்தன் கலை" அல்லது அகாரம் என்று அழைக்கப்படும். இதற்கு அதிதேவதையே முழுமுதற் பொருளான "மகாகணபதி" ஆவார். இந்நிலையைப் பிறப்பிலேயே சித்தியாக்கிக் கொண்டு பிறப்பவர்கள்தான் பிறவி "சித்தர்கள்" எனப்படுவர். இவர்களது சுவாசம் (மூச்சுக்காற்று) வல நாடியிலும் இடநாடியிலும் சரிசமான நிலையில் செயல்படும். சாதாரண மனிதனுக்கு அவ்விதம் இருக்காது. "யோகம்" என்பது மனிதன் தன் சுய முயற்சியில் புலனடக்கத்தில் சென்று மேற்கூறிய முரண்பாடான தனது சுவாசத்தை (வலது, இடது பந்தனப்படுத்திச் சரிசமான நிலையில் செயல்படச் செய்வதுதான். இந்தச் சித்திக்கு அதிதேவதையே மகாகணபதி ஆவார். அவரே "அகாரம்" என்ற ஆதித்தன் கலையாகச், சூரியநாடியாக விளங்குகிறார்.

7. **சுக்ல பீஜம் வெண்கதிர் மாற்று**
   **மூல கணபதி அதன் முத்திரை**
   **சொல்லில் வெண்கதிர் பாய**
   **"நீ" "நீ ஆவாய்" சித்தில் அமர்ந்து.**

**"வெண்கதிர்"** எனப்படும் பெரும் யோகச் சக்தியே நமது சுக்ல தாதுவாக மாறிப் பரமாத்மாவின் ஆணையின்படி படைப்பிற்கு அடிப்படையாய் இருக்கிறது. இந்த **"வெண்கதிர்"** என்ற தேஜோமயமான பிரபஞ்சத்தை ஆட்கொள்ளும் சக்திக்கு அதிதேவதை ஸ்ரீமூலகணபதி யாவார்.

வேத வாக்கியங்கள் நாம் **"ஆத்ம விசாரம்"** செய்து தன்னிலை மறந்து இறைவனை உணரவே ஏற்படுத்தப்பட்டன. அவற்றுள், **"நீ" "நீ ஆவாய்"** என்பது ஒன்று. அதாவது, நீயே உன்னை இறைவனாகக் காணும் நிலை அது என்றால் மிகையாகாது. (அந்நிலையை அடைய யோக மார்க்கங்கள், ஸ்ரீவித்தை மற்றும் ஸ்ரீசங்கரரின் அத்வைத நியதி போன்றவை ஏற்படுத்தப்பட்டன). இதற்குத் தேவையானது நமது உடலில் உள்ள **"வெண்கதிர்"** என்ற பெரும் பிரம்ம சக்தி (உயிர்) நமது எண்ணத்தோடு கலந்துவிட வேண்டும். யோக மார்க்கத்தில் பேச்சும், உயிரும் கலந்து ஒன்றி நிற்கும் இந்நிலை பெரும் சித்தர்கள் கண்டு அனுபவித்த பெருநிலையாகும்.. "பிரம்ம **நிஷ்டை"** என்ற இதற்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி யாவார். இந்நிலையில்தான் "யோகியானவர் **சிதாகாசம்** எனப்படும் பெரும் வெளியில் நிலைத்திருப்பார்கள்" விழிப்பு, கனவு, தூக்கம் என்ற நிலைகளுக்கு அப்பாற்பட்ட யோக நித்திரை இது..

8. **என்போதம் அதுவே சுய அனுபவம்**
**சுக்கில வித்து மூச்சில் பாதி நாவில் பாதி**
**இருபுறம் அதன் நடை**
**மூச்சில் தங்குவது மனம் நாவில் சொல்.**

**"சுக்கில வித்து"** என்கிற ஜீவ சக்தியில் பிராணச் சக்தியும் நமது பேசும் சக்தியும் சரிசமமாகக் கலந்திருக்கின்றன. இதில் மூச்சில் பாதிச் சுக்கிலமும், பேச்சில் பாதி சுக்கிலமும் ஆக மூச்சும் பேச்சும் ஆன இரண்டும் சுக்கிலத்தில் கலந்திருக்கின்றன. ஆகவேதான், நமது மூச்சில் மனமும் பேச்சில் சொல்லுமாக மறைந்திருந்து நமது பிராணச் சக்தியை விரயம் செய்கின்றன. ஆகவேதான், பதஞ்சலியின் யோகச் சூத்திரத்தில் **"பிராணாயாமம்"** என்ற முறையில் மூச்சையடக்குவதால் மனம் சிறிது கட்டுப்படுகிறது. மௌன விரதத்தைக் கடைப்பிடிப்பதனால் நமது பேச்சாக மாறி வீணாகும் ஜீவசக்தி சேமிக்கப்பட்டுவிடுகிறது. "விரதங்கள், உபாசனை மற்றும் தெய்வீக வழிபாட்டு முறைகள்" என்ற இவற்றைப் பொதுவான விதிமுறைகளாக்கி மனிதன் தனது ஜீவசக்தியின்செலவைக் கட்டுப்படுத்தி இறைவனிடம் நாட்டத்தைச் செலுத்திப் பயன்பெற வேண்டும் என்பதை முன்னோர்கள் நியமித்தனர்.

9. **என்வழி சொல்லக் கேள்**
**சொல்லில் அமரனானேன் அகாரம் பெற்று**
**வென்றேன் சிறுமூச்சை அடைகாத்து**
**எழுந்தது அதில் குண்டலினி, யோகாக்னி.**

இயற்கை மனிதனைப் புலன்வழியாக ஈர்க்கின்றது. இதனால், மனிதனின் எண்ணம் எப்பொழுதும் இயங்கிக் கொண்டே யிருக்கிறது. இதற்கு நட்டுவாங்கமாக நமது "சிறுமூச்சு" என்ற சுவாசம் மற்றும் தேக இயக்கங்கள், (உடலின் பஞ்ச பிராணன்களின் இயக்கம்) ஆகியவை நம்மைப் "புலனடக்கம்" தன்னை இழந்திருக்கச் செய்கின்றன. எனவே, யோகமுறையில் எண்ணத்தையடக்கி நிறுத்தி, **"சிறுமூச்சு"** என்ற தேக இயக்கங்களைக் கட்டுப்படுத்திச் சொல்லில் **"அமரன்"** என்ற பெரும் தவநிலையைத் தான் அடைந்ததாகக் குறிப்பிடுகின்றார். இதற்கு **"அகாரம்"** என்பதின்சித்தி அவசியமாகிறது. இந்த அகாரம் என்பது "சர்வ பிரபஞ்சங்களையும் இயங்க வைக்கும் "ஓங்காரமான பிரணவத்தின் உயிர்நாடி யாகும். இதற்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி யாவார். எனவே, "ஸ்ரீமகாகணபதியின் பரிபூரண அருள்பெற்றுச் சொல்லையும் மூச்சையும் வென்று "நிஷ்டையில் ஸ்ரீமகாகணபதியால் **"அமரன்"** என்ற பெரும் யோகப் பட்டத்தைப் பெற்று ஒரு சிலரே சரித்திரத்தில், சாதனையில், புராண காவியங்களில் அடைந்திருக்கின்றனர். **திருமூலர், ஔவை** போன்று **"சிறு மூச்சை"** அடக்குவது அல்லது தேக இயக்கத் தத்துவங்களை மீறுவது மிகக் கடினம். இதற்குக் காவலாக இருப்பது **ஸ்ரீருத்ரன்** ஆவார்.

இவ்வாறு **"சிறு மூச்சு"** "சொல்லும்" அடங்கிய நிலையில்தான் குண்டலினி எனப்படும் **"யோகாக்னி"** நமது மூலாதாரத்திலிருந்து கிளம்புகிறது. இந்த மூலாதாரம் என்ற முதல் ஆதாரச் சக்கரத்திற்கும் குண்டலினி என்ற அதன் இயக்கச் சக்திக்கும் அதிதேவதையே **"மகாகணபதி"** ஆவார். எனவே, குறிப்பாகக் குண்டலினி சித்திக்கு ஸ்ரீமகாகணபதியின் அருள் கட்டாயம் அவசியம் என்பது உண்மை.

**குண்டலினி:** இதுவே நமது தேகத் தத்துவமும் ஆத்மத் தத்துவமும் யோகத்தில் இணைந்து செயல்படும் பெருந்தவ நிலையாகும்.

இதுவே **"அஷ்டதளம்"** என்று ஸ்ரீவித்தையில் அழைக்கப்படும் (சப்தத்தின் எட்டுவித ஒலிகள் இவை) **"மூலப் பிராணன்"** என்று அழைக்கப்படும் தேஜோ சக்தியே அது. சத்தத்தை முழுவதும் அடக்கிய நிலை அது. மனிதன் இறைவனுடன் இணைவது இங்குதான்.

10. **குண்டலி என்பது தீக்கதிர்**
**அனல் உயிர் எழும் அதில் சுக்கிலம்**
**கவ்வி கற்பச் சூடு இனிப்பெரு மூச்சாகும்**
**சிறு அலைகள் ஓயும் அதில்.**

குண்டலி என்பதும் பெருந் தீக்கதிர். "**மூல அனல்**" என்றழைக்கப்படும் பெரும் தேஜோ சக்தி அதுவே. எனவே, குண்டலிச் சித்தி ஏற்பட்டுவிட்டால், "**உயிராவது**" அந்நிலையில் நமது தேகத்தில் உள்ள "**சுக்கிலம்**" என்ற வெண்கதிர் அலைகளைக் கவ்விக்கொண்டு மேலெழும். அங்குச் "**சிறுமூச்சு**" என்ற நமது சாதாரண மனிதனின் தேக இயக்கத் தத்துவங்கள் செயல்படுவதில்லை. மாறாகத் தாய் வயிற்றில் நமக்கு அவள் தரும் "**ஜாடராக்னி**" என்ற "**பசி தீபாக்னியே**" பெருமூச்சாக, தேஜோ சக்தியாக, தெய்வீக அலைகளாக நம்முள் இயங்கச் சிறுமூச்சின் கிளைகளான (அ) செயல்களான சகல தேக இயக்கச் சக்திகள் அதில் ஒடுங்கிவிடுகின்றன. எனவே, நமது தாய் கர்ப்பத்தில் நமக்குத் தரும் "**ஜாடராக்னி**"தான் நமக்குப் பசியையும் தாகத்தையும் தந்து உண்ட உணவை ஜீரணிக்கும் சக்தியைத் தருகிறது. இதே சக்திதான் யோகத்தில் "**குண்டலினிச்**" சித்தியில் பெரு மூச்சாய் இயங்கித் நமது தேக இயக்கங்களைத் தனது கட்டுப்பாட்டுக்குள் கொணர்ந்து "**யோகநிலையில்**" நாம் இறைவனை உணரத் துணைபுரிகிறது. இத்துணைப் பெருமை வாய்ந்த குண்டலினிச் சித்தியில் "நமக்கு உயிராக உணர்வாக அறிவாக மற்றும் பெரும் யோகச் சித்தியாகச் செயல்படுவது "நமது தாய் வயிற்றில் அவள் நமக்கு அளித்த பசி தீபாக்னி என்ற "**ஜாடராக்னி**" தான் என்பது இங்கே குறிப்பிடப்படுகிறது. இதைத்தான் பட்டினத்து அடிகளும்,

**"முன்னையிட்ட தீ முப்புரத்திலே**
**பின்னையிட்ட தீ தென் இலங்கையிலே**
**அன்னையிட்ட தீ அடிவயிற்றிலே**
**யானுமிட்ட தீ மூள்க மூள்கவே"**

என்று தனது தாய்க்கு ஈமச் சடங்குகள் செய்யும் முன்னர் பாடினார்.

எனவேதான் "**தாயிற் சிறந்த கோவிலும் இல்லை**" என்றும், "**அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்**" என்றும் ஔவை போன்றவர்கள் உரைத்திருக்கிறார்கள். யோகச் சித்தியில் இறைவன் செயலுக்குக் கருவியாக இருக்கும் தாயை முதலில் வணங்கவேண்டும் என்பதுதான்சாத்திர வழக்கம். நீதி மற்றும் வேதம் என அறியவேண்டும். எனவேதான் பெருந் தவச் சிரேஷ்டர்களானாலும் பீடாதிபதிகளானாலும் தனது தாயைத் தன்னை வணங்க அனுமதிப்பதில்லை. தந்தை வேண்டுமானால் சன்னியாசியாகிய

(அல்லது) பீடாதிபதியாகிய அல்லது துறவியாகிய தனது மைந்தனின் பாதத்தில் வீழ்ந்து வணங்கலாம்.

11. **சவம் நீங்கும் அதில், மெள்ள மெள்ள**
**உன் காயம் திருமேனி ஆகும்**
**அமரன் ஆவான் அதில்**
**சுக்கில நாடி மூச்சைத் தாங்க**

மேற்கூறிய "**அமரன்**" என்ற நிலையை அடைந்த யோகிகளின் உடலில் சில மாறுபாடுகள் உண்டாகும். அதாவது, பிறந்து இறக்கும் சாதாரண மனிதனின் "**ஜீவகதி**" போன்றில்லாமல் "**திருமேனி**" என்றழைக்கப்படும் பெருந் தெய்வீகச் சரீரமாக விளங்கும். "**சுக்கில நாடி**" என்கிற பிரம்ம சக்தி தன்னை ஆட்கொள்ள "**சிறு மூச்சு**" என்ற சாதாரண மூச்சுக் காற்றினால் இயங்காமல் மூச்சு, பேச்சு, உயிர் ஆகியவற்றின் ஒன்றுபட்ட நிலையான "**தேவகதி**" என்ற பெருந்தவ நிலையில் தனது சரீரம் இயங்குவதை யோகிகள் உணர்வார்கள். எனவே, "சாதாரண மனிதனின் சரீரம் பிறப்பு, தேய்வு, இறப்பு என்ற காலக் கட்டத்துள் கிடந்து அழியும் நிலைக்கேற்ப இயங்கும் தன்மையான ஜீவகதியில் செல்கிறது. யோகிகளின் சரீரம் தேவகதி என்ற நிலையை அடைகிறது" – **திருமேனி** என்பது இதுவே.

12. **இந்நாள் என் தவம் "ஞானமொழி"**
**பிற்காலம் யோக வழி**
**பிறந்தேன் அதில் மையம் உண்டு**
**பெருகுவது இனி யோனி தண்டல்**

இங்கு அந்தர்யாமியான இறைவனால் (ஸ்ரீமகாகணபதி) ஞான மொழியாகப் பிரம்ம உபதேசத்தைத் தான் பெற்றுக்கொண்டிருப்பதை யோகிகள் சொல்கிறனர். பிரம்ம நிஷ்டை எனப்படும் இங்கு இறைவனுடன் தான் உறவாடும் (பெரும் நிலையான நான்கும் விளங்கிட) தன்மையை விளக்குகிறார். பிற்காலத்தில் யோகவழியின்மூலம் "**சிருஷ்டித் தத்துவத்தின்**" மூலத்தைக் கண்டு "**அயோனி**" (கர்ப்ப வாசம் நீங்கிய நிலை) தத்துவ விசேஷத்தால் செயல்படும் முறையைக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

13. **பெண் யோனி உன்னில் திறக்கும் அந்நாள்**
**இரு நாக்கு மையம் அதன் சிறப்பு**
**பெண் யோனி "ரந்திர வாயில்"**
**அது திறக்க "நீ நீ ஆவாய்"**

நமது கபாலத்திலுள்ள "பிரம்மரந்திரம்" என்ற ஓர் இணைப்பு யோகச் சூத்திரத்தில் பெருஞ் சக்தி வாய்ந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. நமது உயிர் சஞ்சரிக்கும் இந்தப் பிரம்மரந்திரம் திறக்க நமது இரு நாக்கின் மையத்தில்தான் "**ஞான ஒலி**"யானான "**அகாரம்**" என்ற நாதப் பிரம்மனின் சம்பந்தம் நமக்குக் கிடைக்கிறது. அங்குத்தான் "**ஞானோபதேசமாக**" இறைவன் மகான்களுக்குத் தெய்வீக இரகசியங்களையும் தத்துவங்களையும் விளக்குகிறான்.

பாகவதத்தில் வரும் ஒரு நிகழ்ச்சி இங்குக் குறிப்பிடத்தக்கது. "**ஸ்ரீகிருஷ்ணன்**" பாலகனாக இருக்கத் தாய் யசோதையிடம் தான் மண்ணைத் தின்றதாகச் சொல்லி வாய் திறந்து காட்டும்போது யசோதை சகலப் புவனத்தையும் தனது குழந்தையின் வாயினுள் பார்த்த தத்துவத்தின் உண்மை இதுதான். இரு நாக்கின் மத்தியில்தான் "**அகாரம்**" என்ற சப்த பிரம்மனும் தெய்வீக உணர்வில் எல்லாம் அறியும் சக்தியும் இருக்கின்றன என்பதன் உண்மை இதுவே. எனவே, யோகமுறையில் இரு நாக்கும் (பெருநாக்கும் உள்நாக்கும்) கூடும் நிலையை "**லம்பிகா**" யோகச் சித்தி என்று அழைக்கின்றனர். அந்தர்யாமியாகிய பரமாத்மா மகான்களுடன் உறவாடும் பெரும்பேறு அங்குத்தான் கிடைக்கிறது. எனவே, "**நீ நீ ஆவாய்**" என்ற வேதத்தின் மகா வாக்கியம் இந்நிலையில்தான் சித்தியாகிறது. இந்தத் தத்துவம் அறிவது என்பது "ஸ்ரீமகாகணபதியின் சித்தி" அடைவதே.

14. **"ரந்திரம் மேல் முனை ஆக்ஞை**
**கீழது விசுத்தி**
**யோகம் இருபுறம் அதில்**
**என் வித்தை விசுத்தி கேசரி பெற்று.**

நமது உடலிலுள்ள ஆறு ஆதாரச் சக்கரங்களுடன் அவற்றுக்கு மேல் ஏழாவதாக சகஸ்ராரம் என்ற 1000 இதழ்த் தாமரை போன்ற சக்கரமும் உள்ளது என்பது யோகச் சித்தாந்தம். இதில் கழுத்தின்மேல் இரு நாக்கிற்கும் இடையில் இருப்பது "விசுத்தி" என்ற சக்கரம். "**ஆக்ஞா**" என்பது நமது புருவ மத்திமம். இவை ஒவ்வொன்றும் நமது உடலின் பலவிதமான இயக்கங்களுக்குக் காரணப் பொருளாக இருக்கின்றன. யோக மார்க்கத்தில் தியானம் முதலானவற்றைச் செய்வதில் இச்சக்கரங்களில் ஒன்றினை மனத்திற் கொண்டு அந்நிலையில் மனத்தின் கவனத்தைச் செலுத்தி "**யோக நித்திரை**" பெறுவது வழக்கம். அவ்விதம் செய்யும் யோகச் (தத்துவமசி) சாதனங்களில் மகான்கள் தங்களது கவனத்தை "**விசுத்தி**" என்கிற இடத்தில் நிறுத்தித் தவத்தின்மேல் நிலையை

அடைந்தனர் என்பது விளக்கம். மேலும், இதற்குக் **"கேசரி வித்தை"** என்று அழைக்கப்படும் யோக மார்க்கமான கண்ணிருந்தும் பார்வையற்ற (தியானச் சமாதியான) "அந்தர்முகம்" எனப்படும் புலனடக்கத்தில் சென்று தனது சாதனையைப் படைத்திருக்கின்றனர். இந்தக் **"கேசரி வித்தை"**க்கு அதிபதி ஸ்ரீமகாகணபதி ஆவார்.

**15. ஸ்ரீவித்தை பூர்த்தி என்னில்**
**மூவெட்டும் நாடி**
**பெண் கர்ப்பம் உன்னில்**
**ரந்திரம் திறக்க அது உன் வயம்.**

மேற்கூறிய நிலையே "ஸ்ரீவித்தையின் பூர்த்திக் கட்டம்" ஆகும். அங்குத் (சிவஞானபோதம், திருமந்திரம் போன்ற சைவ நூல்கள் சொல்லும்) தேகத் தத்துவமான இருபத்து நான்கும் வென்று நிற்கவேண்டும். தேக இயக்கங்கள் மற்றும் சலனங்கள் ஸ்தம்பனம் ஆகிவிடும் பெரும் யோகநிலையது. மேலும், அந்நிலையில்தான், "**பிரம்ம ரந்திரம்**" என்ற கபால இணைப்பு திறந்துவிடுகிறது. அங்குதான் சாதகன் பரமாத்மாவோடு உறவாடும் நிலையைப் பெறுகிறான். தாய் கர்ப்பத்தில் நாம் இருந்த நிலையைத்தான் அது குறிப்பிட்டுக் காட்டுகிறது. பிறப்பில் மறைந்த அந்தப் பெரும் இணைப்பை (பிரம்மரந்திரம்) மீண்டும் திறக்கச் செய்வதுதான் யோகத்தின் கடைநிலை யாகும். இதற்கு அதிதேவதை ஸ்ரீமகாகணபதி ஆவார். இதுவே, ஸ்ரீவித்தை எனப்படும். உபாசனை மார்க்கத்தின் கடைநிலை. எனவேதான் ஸ்ரீவித்தை உபாசனையில் முழுமைப் பெற்ற வெற்றிக்கும் ஸ்ரீமகாகணபதியின் துணைவேண்டும் என்பது உண்மை. மேலும், மகாகணபதியே ஸ்ரீஅம்பிகையாக விளங்குகிறார் என்பது தெளிவு. எனவேதான், அவரை "முழுமுதற் கடவுள்" என்று அழைக்கின்றோம்.

**16. சுவாசம் இனிச் சமம் இருபுறம்**
**ஜீவ யாத்திரை பின் இனித் தபோ நிஷ்டை**
**இறப்பில் பிறப்புண்டு அதில்**
**நீ எழுவாய் அதில் கர்ப்பம் நீங்க**

மேற்கூறிய **"ஸ்ரீவித்தை"** யின் பூர்த்திக் கட்டமான பிரம்ம ரந்திரம் திறந்த நிலையில் **"ஞானஒலி"** பெற்றுப் பரமாத்மாவுடன் உறவாடும் நிலையில் நமது மூச்சுக் காற்றான சுவாசம் இருபுறமும் (வலது மற்றும் இடது) சரிசம நிலையில் இயங்கும். இதன்பொருள் **"உள்மூச்சு வெளிமூச்சு"** இவை இயற்கையில் மனிதனுக்குச் சமமான நிலையில் இயங்குவதில்லை. **"புலனடக்கம்"** இல்லாமையாலும் மனத்தின் கோளாறுகளாலும் பூர்வ

ஜென்ம கர்ம வினைக்குகந்தவாறு நமது பூத சடலம் ஜீவகதியில் இயங்குவதாலும்தான் இவ்விதம் சமநிலையான சுவாசம் நமக்கு இல்லாமலிருக்கிறது. இதனை மாற்றிச் சமநிலைப்படுத்திக் "**கேவலக் கும்பகம்**" என்றழைக்கப்படும் நிலையில் இறைவனோடு "**கலந்து**" ஞான உபதேசத்தைப் பெறுவதே யோகச் சித்தாந்தத்தின் குறிக்கோளாகும். பெரும் பக்தர்களும் மகரிஷிகளுமே இந்நிலையை அடைந்திருக்கின்றனர். எனவே, இவ்விதம் ஜீவகதி மாறித் "**தேவகதி**" எனப்படும் நிலையில் நமது தேகத் தத்துவங்கள் இயக்கங்கள் செயல்படும் நிலையை அடைவதே ஸ்ரீமகா கணபதியின் அருளின் காரணத்தால் என்பது உண்மை.

இந்நிலையிலுள்ள மகான்களின் சரீரத்தைத் "**திவ்விய சரீரம்**" அல்லது **திருமேனி** என்று அழைப்பார்கள். புராணங்களில் வரும் சம்பவங்களில் இந்நிலையை இவ்வாறு குறிப்பிடும் வழக்கம் உண்டு.

**17. "சவம் சிவமாகும்" அதில் துரியம் உண்டு**
**பூர்ணம் இந்நூல் "நிஜானந்த போதம்**
**அமரன் வாக்கு அதில் "சுய நிஷ்டை**
**ஸ்ரீவித்தை பூர்த்தி கண்டு"**

"தோன்றி மறையும் இம்மனித உடலைச் "**சவம்**" என்று மறைகள், தத்துவங்கள், யோகச் சித்தாந்தம் கூறுவது யாவரும் அறிந்ததே. "**சிவம்**" என்பதற்கு "மங்களம்" என்னும் முக்கியப் பொருள் உண்டு. எனவே, மேற்கூறிய "பிரம்ம நிஷ்டை"யில் சுவாசம் இருபுறமும் சமநடையில் இயங்கத் "**துரியம்**" என்றழைக்கப்படும் யோக நிலையில் "**நிஜானந்த போதம்**" உதிக்கும். **ஆக ஸ்ரீவித்தை பூர்த்திக் கட்டமான** சவம் என்கிற நமது பொய்யுடல் சிவம் என்கிற திருமேனியாக மாறிய நிலையில் ஏற்படும் "பிரம்ம உபதேசங்கள்" யாவைக்கும் ஸ்ரீமகாகணபதியின் பூரண அருள் அவசியம் தேவை என்பது தெளிவு. எல்லாவற்றையும், தன்னையும் பிரம்மமாகக் காணும் யோக நிலைக்கு அதிதேவதை ஸ்ரீ கணநாதன் ஆவார்.

**18. சொல் "மனம்" ஆவதே நிஷ்டை**
**பிரம்ம தத்துவம் அது**
**"நீ" "நீஆதல்" அதில் பிறப்பு**
**ஒரு நாள் நீயும் இறைவனும் ஒன்றே.**

"நமது சொல்லே நமது மனமாக மாறும் நிலையான **மனோலயம்** என்பதே "**நிஷ்டை**" என்றழைக்கப்படுகிறது. அதாவது சொல் அழிந்து அது நமது மனமாக மாறி செயல்படும் யோக நிலையாகும். **பிரம்ம தத்துவம்**

என்பது அதுவே. அங்குதான் மனிதன் தனது யோகச் சாதனையில், தத்துவத்தில் சிறந்து விளங்கி வேத மகா வாக்கியமான **"நீ" "நீ ஆதல்"** என்ற நிலையினை எட்டிப்பிடித்துவிடுகிறான். எல்லாவற்றையும் தன்னையும் பிரம்மமாகவே மனிதன் காணும் பெரும் யோக நிலையது. இதற்கு வேண்டிய அருள் **ஸ்ரீமகாகணபதியிடம்**தான் உள்ளது. எனவே, **ஸ்ரீவித்தையின் பரிபூரணம் (அல்லது) யோகத்தின் சிகரம்** என்பது இவரது பேரருளின் பேரில் ஏற்படும் சித்தி என்பதும் சத்தியம்.



# நிஜானந்த போதம்

## உண்மை ஞான விளக்கம்

### விநாயகன் காப்பு

1. **தோன்றும் உலகம் பரமன் கூத்து**
**இட்டார் பெரியோர் பல பேர்**
**யோனி, கர்ப்பம், பிறப்பு**
**இம்மூன்றும் அநாதி நடை.**

மனிதன், விலங்கு, தாவரம் இப்படியாகத் தோன்றும் உலகில் மனிதனுக்கு "**நான்**" "**எனது**" எண்ணங்களை யளித்து ஐம்புலன்களைக் கொண்டு அவனது சிந்தனையை "**யோக மார்க்கத்தில்**" செல்லாமல் தடுத்துத் தனக்குள் இருக்கும் இறைவனைக் காண இயலாமல் செய்யும் இறைவனே சாட்சியாக மனிதனின் உள்ளிருந்து இச்செயல்களை நடத்துவதுதான் "**விந்தை**"யிலும் "**விந்தை**" என்பது. உண்மையில் இறைவனே இத்துணை வடிவங்களாக இருந்துகொண்டு "**கர்மவினைக்கு**" ஈடாக மனிதனை உலகப் பற்றில் உழல வைக்கும் சக்தியாக இருக்கிறான். "**தன்னைத் தான் யார்**" என்று உணர்ந்துவிட்டால் மனிதன் தன்னிலையை மறந்துவிடுவான். எதிலும் எங்கும் இறைவனை அவன் காணும் சக்தி வந்துவிடும். அப்படி அது வந்துவிட்டால் மீண்டும் உலகச் சிந்தனை எட்டாது. நினைவு திரும்பாது. இதுதான் இயற்கையின் நியதி. யோகம் என்பதும் சமாதி என்பதும் வெறும் சஞ்சாரம் இல்லை. அங்குச் சென்றவன் திரும்பியதாகச் சரித்திரம் இல்லை. அத்துணை வேகம் உண்டு. அந்தப் பெரு நிலைக்குச் செல்லவிடாமல் இப்படி அவனே எல்லாமாக எதிலுமாக இருந்துகொண்டு மாயை என்னும் சிக்கலில் மாட்டிவிடுவது உலக வழக்கத்திற்காக (அல்லது) உலகம் மக்களைக் கொண்டு நடத்தப்படவேண்டும் என்பதற்காகத்தான். நேற்றைய மனிதன் நாளைய மகான் என்று அவனது பிறவிப் பெருங்கடலைக் காணத்தான் வேண்டும். அவனது கர்ம வினைக்கு உகந்தவாறு இந்த யோக நிலையை, சித்தியை, பிரம்ம சாட்சாட்காரத்தை விரைவில் அடைகிறான். மனிதன் மனிதனாக இருப்பதும் மாமுனிவனாக மாறுவதும் உண்மையில் இறைவன் தனக்குத்தானே செய்து கொள்ளும் விந்தை. இதை நன்கு சிந்திப்பதற்குத்தான் இப்பாடல் முதலாவதாகத் தோன்றியிருக்கிறது. மனிதன், ஆடு, மாடு என்று (மான், மாடு, குதிரை என்பது போல) உயிர்களுக்குப் பெயரிட்டவர் பல பேர். வழக்கத்தில் வந்த இப்பெயர்கள் நாளடைவில் வாகனங்களாகக்கூடப் (இறைவனுக்கு) புராணங்களில் இடம் பெற்று விட்டன.

எனவே, எங்கும் இருக்கும் இறைவன்எண்ணற்ற உருவங்களாக (மனிதனாக, விலங்காக, பறவையாக) இயற்கைச் சின்னங்களாக, பொருட்களாக விளங்குகின்றான். எனவே, இப்பாடல் நமது சிந்தனைக்குத் தரும் முதல் விளக்கம் உண்மை. **“இறைவன் எங்கும் எதிலும் நிறைந்துள்ளான்”** என்பது. சராசரங்கள் அனைத்திலும் இருந்துகொண்டு அதனை ஆட்டுவித்துக் காலங்கனிந்தபின் ஆட்கொள்ளும் அவன் இயல்பைப் “பரமனின் **கூத்து**” என்று இங்கே குறிப்பிடுகிறேன். இதில் யோனி, கர்ப்பம், பிறப்பு என்பவை அநாதியானவை. இதன்பொருள் என்றும் எக்காலமும் எந்த யுகத்திலும் ஜீவன்கள் பிறந்து இறந்து காலச் சக்கரத்தினுள் இருக்கவேண்டியவர்கள் என்பதுதான். இது மனிதனுக்கு மட்டுமன்று. சகல ஜீவ ராசிகளுக்கும் இந்த விதி பொதுவானது. ஔவையின் பாடல், **“புல்லாகி, பூண்டாகி .. ... ...“** என்பது வலியுறுத்தும் தத்துவம் **“அரிது அரிது மானிடராய்ப் பிறப்பதரிது”** என்பதற்கு உரிய இந்த விளக்கம் உண்மையில் தனி நூலாகவே போடலாம். அத்துணை ஆழம் நிறைந்தது இக்கருத்து. எனவே, எத்துணைப் பெரும் யோகியாக இருந்தாலும் **“பிறப்பு – இறப்பு”** என்ற சங்கிலியை விட்டு அகல இயலாது. இறந்தவன் மீண்டும் பிறந்தே ஆகவேண்டும். மறு பிறப்பு என்பது மகான்களுக்கும் உண்டு என்பதே இதன் சித்தாந்தம். மகான்கள் மீண்டும் பிறந்தால் பிறவியிலேயே மகத்தான அறிவையும் தெய்வீக உணர்வையும் பெற்றிருப்பார்களே தவிர, மறு பிறவியைத் தவிர்க்கும் ஆற்றல் எவர்க்கும் கிடையாது என்பது இப்பாடலின் கருத்து. **காகபுஜண்டர், ரோமரிஷி** போன்ற பெருஞ் சித்தர்கள் பல யுகங்களாக யோகத்தில் அமர்ந்து இன்னமும் இருக்கிறார்கள்.

2. **ஒரெழுத்தே இவை மூன்றும்**
**கர்ப்பம் கொண்டநாபி**
**பிறப்பில் வந்தது வாசி**
**யோனி தேவ ரகசியம்.**

“ஒரெழுத்து” என்று அழைக்கப்படும் **“பிரணவ நாதமே”** மேற்கூறிய யோனி, கர்ப்பம், பிறப்பு என்ற உயிர்களின் தோற்றத்தின் காரணமாக விளங்குகிறது. அதாவது, கர்ப்பத்தில் தோன்றும் உயிருக்குத் தாயின் உடலைவிட்டு வெளி வந்ததும் **“மூச்சு”** பிறக்கிறது. அதாவது, கர்ப்பத்தில் மூச்சு விடுவதில்லை. அங்குச் சிசுவுக்குச் சுயமாக சுவாசம் செய்யும் நிலை இல்லாமலிருக்கிறது. **யோனி என்பது தேவ இரகசியம்.** அதாவது, உயிர்கள் அவரவர்கள் கர்ம வினைக்கு ஏற்பக் கர்ப்பத்தில் சென்று பிறப்பை எய்துகின்றன என்பது பொருள்.

3. **கணநாதன் மூவைந்தின் ஆதி**
**உடல் சக்கரம்**
**அறியார் பலர்**
**சோடசம் தேவியின் எழுத்து..**

**"கணநாதன்"** என்ற மகாகணபதி யானவர் மூவைந்து பதினைந்து தத்துவத்தின் மேல்நிலையான "பதினாறாவது **கலை**" என்பதன் அதிபதி (ஆதிபகவன்) ஆவார். ஸ்ரீவித்தையில் குறிப்பிடப்படும் "பதினாறாவது என்ற "சோடசக்கலை" ஸ்ரீதேவி காமாட்சியின் எழுத்து ஆகும். நாபி, ஹ்ருத், கண்ட, ரசனா என்று தியாகய்யர் பாடியுள்ள பாடலில் **"ரசனா"** என்பது இந்நிலையைத்தான் குறிக்கிறது.

4. **கணநாதன் சொல்லில் "பிராணக் கலை"**
**இருமூச்சின் இணைப்பு**
**கும்பகம் பெறாது என்றும்**
**ஆனைமுகன் தந்திடும் வரம்.**

கணநாதன், நமது சொல்லில் மறைந்திருக்கும் "பிராண**க் கலை**" ஆவார். அதாவது, பிராணச் சக்தியே நமது பேச்சாக மாறி இயங்குகின்றது. அதுவே யோக மார்க்கத்தில் கூறப்படும் **"ரேசகம், பூரகம் என்ற உள்மூச்சு, வெளிமூச்சு** ஆகியவற்றின் இணைப்பு ஆகும். இவ்விரண்டு மூச்சும் சேரும் நிலை **"கும்பகம்"** என்ற மூச்சு அடங்கியிருக்கும் நிலையை அதாவது ஹடயோகத்தில் (பதஞ்சலியின்) மூச்சையடக்கிச் செல்லும் செயல் முழுமையான "சுவாசப் பந்தத்தைக்" கொடுக்க இயலாது என்பது கருத்து. மேலும், நமது சுவாசம் என்பது இறைவன் செயல். அதனைப் பூரணமாக நேரடியாகக் கட்டுப்படுத்துவது ஆபத்து மட்டுமின்றிக் **"கும்பகச் சித்தி"** என்ற யோக நிலையை அடைய முடியாது என்பது பொருள். எனவே, கும்பகம் என்ற **"சுவாசப் பந்தனச் சித்தியை"** அளிக்க வல்லவர் ஸ்ரீகணநாதன் ஒருவரே. இதனை விளக்கத்தான் மற்ற எல்லாத் தெய்வங்களுக்கும் இல்லாத ஒரு தனிச் சிறப்பை இவரது உருவத்தில் வைத்திருக்கிறார்கள். பெரும் வயிறு ஒருவகையில் **"கும்பகச் " சித்தி** எனும் மூச்சடக்கிய நிலையைக் குறிக்கும்.

5. **அமரன் போக்கு மூலாதார முச்சுடர்**
**பெரு வழியது, நிராலம்பம்**
**தகர விந்தை காட்டாது என்றும்**
**நான் அறிவேன் இரண்டின் முனை**

வேத ரிஷிகளின் சாதனை "மூலாதாரத்தின்" மூன்று அக்னியை அல்லது தேஜோ சக்தியை ஆதாரமாகக் கொண்டு செய்தது. அது மூச்சைப் பிடித்து, அடக்கிச் செய்யும் ஹடயோகச் சாதனையைக் காட்டிலும் காலத் தாமதம் ஆகும்.

ஆனால், ஆபத்து இல்லாத வழி என்பதாகும். இச்சக்திகள் மூச்சில், பேச்சில் கலந்திருக்கும். இந்த மூன்று சுடர்களின் சங்கமமே நாபியை மலரச் செய்யும் வித்தை. இஃது ஒரு பெரும் யோக நிலையாகும். அதாவது, மேல்–கீழ் என்று இயங்கும் ஆதாரச் சக்தி கீழ்–மேல் என்ற பெரும் யோக நிலைக்கு மாறும் கதியாகும். "நிராலம்பம்" என்று அழைக்கப்படும். தகர வித்தையான, யந்திர தந்திரங்கள் இந்நிலைக்கு மனிதனை உயர்த்த முடியாது. "சுழுமுனை" என்பதன் பொருள் இதுவே.

6. **அஷ்டாக்ஷரம் தேவ காப்பு**
**மேல் வரிசை தேவியின் ஆணை**
**கீழது முச்சுடர் ஏவல்**
**உள்கூடு இரண்டின் வகுப்பு.**

"அஷ்டாக்ஷரம்" என்ற நாராயண மந்திரம் இதற்குத் தேவ காப்பாகும். தேவி காமாட்சியின் அருளும் இதற்குத் தேவை. அவள் ஆணையின்றி இது சித்திக்காது. பிரக்ருதி என்னும் மாயையை (புலன்வழி மனம்) வெல்ல அவள் அருள் அவசியமாகிறது.

7. **என் தவம் முச்சுடர் வீடு**
**இரண்டு சொல்லில்**
**மற்றொன்று நாசி வசம்**
**மூன்றின் சங்கமம் நாபி அறல்.**

தவம் இம்மூன்று சுடர்களின் வீடு. சொல்லில் உள்ள இரு சக்திகளும் சுவாசத்தில் அமைந்திருக்கும் ஒன்றுமாக மூன்று தேஜோ சக்திகளும் தன்வசமாகிய நிலை. இந்நிலையில்தான் "நாபி" தன் இயற்கை நிலையை அடைகிறது. ஸ்ரீமந் நாராயணனின் பாற்கடலில் உறங்கும் நிலையில் தனது நாபியிலிருந்து பிரம்மாவைத் தோற்றுவித்த தத்துவம் இதுவே ஆகும்.

8. **மூன்றில் தொகுப்பு பிராணக்கலை**
**சொல்லில் அது எழ வாசி நிமிரும்**
**ஸ்ரீவித்தை கடைநிலை**
**என் பாக்கியம், ஆண்டவன் கிருபை.**

ஆக. **மூச்சு பேச்சு உயிர்** இம்மூன்றும் சேர்ந்த தொகுப்புத்தான் நமது "**பிராணக்கலை**". இதுவே நமது சொல்லில் மறைந்திருக்கும் மகாசக்தியாகும். இந்தப் பெரும் சக்தியைத்தான் **ஸ்ரீமகாகணபதி (அ) கணநாதன்** என்று சொல்லுகிறோம். எனவே, யோக நிலையில் பெறும் வழிக்கு (சித்தாந்த முக்திக்கு) அதிபதி ஸ்ரீமகாகணபதி ஆவார். சித்தாந்த முக்திக்கு மற்றொரு பெயர் "**மகரத்வஜம்**" என்பது. சைவ சமயத்தில் நால்வர் எனப் போற்றப்படும் அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், சம்பந்த மற்றும் திருநீலகண்டர், நாயனார் ஆகியோர் அடைந்த பெரும் யோக நிலையாகும். கணநாதனின் அருளைக்கொண்டே இது கிட்டும்.

எனவே, நமது சொல்லில் இந்த மகாசக்தி யோகச் சாதனத்தில் எழும்போதுதான் நமது சுவாசமானது மேல்–கீழ் என்ற நிலை மாறிக் கீழ்–மேல் என்று (இயற்கையை நாம் வென்ற பெருஞ் சித்தியாக) மாறும். இதுவே. ஸ்ரீவித்யா உபாசனையின் கடைநிலையாகும். இது மனித முயற்சியில் மட்டும் சித்திக்கும் பொருளன்று. ஆண்டவனின் பரம கிருபையின் மூலம் ஏற்படும் ஒருபெரும் யோகச்சாதனையும் சித்தியும் ஆகும். "நாபி" மலரும். இந்நிலையில்தான் அது "தொப்புள்" என்று அழைக்கப்படுகிறது. எனவே, "நாபி" என்பது "தொப்புள்" ஆக மாறும். பெரும் யோக நிலைதான் ஸ்ரீவித்தையின் பூர்த்திக் கட்டமாகும்.



# அமரகவியின் திருவருட்பா

1. "அற்புதம்" சங்கரன் தந்த "ஸ்ரீமுகம்"
சொல் கடந்த "துரியம்" அது. தன் வயம் ஊன்றி
நான்கு முகம் "ஸ்ரீவித்தை" என நான் வினவ
பண்டை வழி என் நூல், ஆருயிர் பேருயிர் சான்று.

ஸ்ரீகாஞ்சிக் காமகோடி மாமுனி சுவாமிகள் அமரகவியின் இந்த மகா கிரந்தத்துக்கு "ஸ்ரீமுகமாக" "அற்புதம்" என்று கூறியதைப் பெரும் பாக்கியமாகக் கொண்டு இப்பாடலை இங்கு முதற் பாடலாக "அற்புதம் சங்கரன்" தந்த ஸ்ரீமுகம் என ஆரம்பிக்கப்பட்டது. "துரியம்" என்ற பெருந் தபோநிலையில் ஸ்திதப்ரக்ஞனாக நின்று பரா, பஸ்யந்தி, மத்யமா, வைகரி எனப்படும் ஸ்ரீவித்யையின் நான்கு வித நிலைகளைக் கடந்து நிற்கும் யோகச் சித்தியின் அனுபவத்தை அற்புதத்தைத் தான் விவரிக்க, "அற்புதம்" என்ற (அருளாசி) ஸ்ரீமுகம் தனை ஸ்ரீ. ஸ்ரீ. மகா சுவாமிகள் அவர்கள் பிரசாதமாகக் கொடுத்தார். இதுவே பண்டைக்காலத்தில், வேத காலத்தின் மகரிஷிகள் கையாண்ட முறையாகும். ஜீவாத்மா – பரமாத்மா ஒன்றுபட்டு உறவாடும் பெருநிலையைத் தழுவியதாகும்.

2. மூத்தோன் அறிவான் தேவியின் கிருபை இங்கு
மண் கவர்ந்த மனம் சொல்லில் நழுவ இத்தன்மை
உயிர் எழும் அதில், சொல் அடங்கி,
"ஸ்ரீசக்கரம்"கவ்வும் மனத்தை, போதம் பெறாது.

ஸ்ரீஸ்ரீகாஞ்சிப் பரமாச்சார்யாள் ஆசிரியரின் யோக விசேஷத்தை நன்கு அறிந்தவர். ஸ்ரீகாமாட்சியின் அருள் பிரசாதம் இங்கு இத்திரு-வருட்பாவின் மூலத்தில் உறைந்திருப்பது அவளது கருணை என்றும் மனம் அடங்கித் தன்மயமாய் நிற்கும் பெரும் யோக நிலையில் "உயிர்" என்ற நமது பிராணக் கலை (மௌன நிலையில்) இவ்விதப் போதத்தைத் தரக்கூடியது. "ஸ்ரீச்சக்கரம்" என்பது நமது மனத்தையடக்க உள்ள ஒரு சாதனம். ஆயினும், "ஞானபோதம்" என்பது இறைவனின் அருள் என்பதன் உதவியில்தான் கிடைக்கும். இதுவே ஸ்ரீகாமாட்சியின் அருட் பிரசாதம்.

3. "மனோலயம்"அதில் ஆத்மசாந்தி, கடைநிலை அல்ல
உண்மை நெறி அகாரம் பெறல், ஞான ஒளி,
பிறப்பில் மறையும் இறப்பில் கூடும் அநுக்கிரகச் சித்தம் அது
உள்ளம் கடைவாசல் அதற்கு ஸ்ரீவித்தை பூர்த்தி.

எனவே, "**மனோலயம்**" என்ற மனத்தையடக்கும் உபாயம் மட்டும் போதாது. இது சாந்தியைத் தரும். இந்தப் பெரும் சாந்தி நிலை ஸ்ரீவித்யையின் பூர்த்திக் கட்டம் அன்று. "**மனோலயம்**" என்ற அடங்கிய மனத்தைக்கொய்ணடு "**அகாரம்**" என்ற பிரணவ அக்ஷரத்தின் சித்தியைப் பெறவேண்டும் (அ, உ, ம என்ற பிரணவத்தின் மூன்று எழுத்துகளில்) – இதைத்தான் ஞானஒளி என்று கூறுகிறோம். அதாவது, அந்தர்யாமியான இறைவன் நமக்குள் அருள்வாக்காக ஞானபோதமாக பிரம்ம உபதேசமாக ஞானத்தை வழங்கும் நிலையை அல்லது நாம் அந்த இறைவனுடன் உறவாடும் நிலையைப் பெறும் இந்தப் பெரும் யோகச் சித்திதான் "**அகாரச் சித்தி**" என அழைக்கப்படுகிறது. இதைத்தான் "யாரறிவார் "அகாரம்" அவனென்று – என்று ஒரு பெரும் தவ யோகியார் கூறியுள்ளார். எனவே, ஸ்ரீவித்யையின் பூர்த்திக் கட்டம் மனம் சற்று அடங்கிய "**சாந்திநிலை**" அன்று. அது ஸ்ரீவித்யையின் முதல்நிலை. "**கடைநிலை**" என்பது நமக்குள் இருக்கும் பரமாத்மா நம்முடன் உறவாடும் பெருநிலை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இதை அடைவதே தவத்தின் எல்லையாகும்.



# கேசரிச் சித்தி

(கண்ணிருந்தும் பார்வை அடங்கிய தவநிலை)

4. **நான்முகன் உலக நாதன்**
**தோன்றிடும் ரூபம் அவன் ஆணை**
**ஷண்முகன் அதன் காப்பு**
**உயிர் மண்ணில் நிற்க.**

"**பிரும்மாவானவர்**" இந்த உலகத்தின் நாதன் ஆவார். இங்கு "**உலகம்**" என்பதன் பொருள், நமது ஐம்பொறிகள் கவரப்பட்டு, நாம் உணரும் நமது பொருள்கள் அனைத்தும் – அதாவது **புலன்கள் நுகரும்** விஷயங்கள் யாவும் என்று பொருள். புலனடக்கம் இல்லாத சமயம் நாம் காணும் யாவையும் நமது மனத்தை இழுக்கின்றன. காணும் உருவம், அதில் மனத்தின் நாட்டம், எண்ணம், கற்பனை, கனவு, நினைவு என்ற இவை யாவையும் ஏற்படக் காரணமாகும். "நமது ஊனக் கண்களுக்குப் புலப்படும் உருவங்கள் அனைத்தும் இந்தப் பிரம்மனது ஆணை என்பதாகும். சண்முகப் பெருமானே இதற்குக் காப்பு. அதாவது, அவனது ஆறுமுகங்களே நமது தேகத்தில் உள்ள (பண்ணிரன்டாம் பாடல்) ஆறு ஆதாரச் சக்கரங்களைக் குறிக்கின்றன. மேலும், ஐம்புலன்களும் மனமும் சேர்ந்த ஆறு உறுப்புக்களை உருவகப்படுத்தி "**ஆறுமுகம்**" என்ற முருகனின் தத்துவத்தை முன்னோர்கள் உணர்த்தியுள்ளனர். எனவேதான், நமது ஜென்ம வினை, கர்ம வினைக்கீடாக மனிதனின் மனம், ஐம்புலன்கள், உலக விஷயங்களில் (மாயையின் வேகத்தால்) ஈடுபட்டு இறை உணர்வைத் தடுக்கின்றன. உலக இயல்பில் ஊறி நிற்கும் இந்தச் சிற்றறிவுதான் நான்முகன் அரசாட்சி. தனியாக ஸ்ரீகணநாதன் / ஷண்முகன் / லக்ஷ்மி தத்துவங்கள் என்ற தலைப்பில் விவரங்களைக் காணலாம்.

5. **மண் விநாயகன் காப்பு**
**மயிர்க்கால் வழி எல்லாம் மாய்கின்ற வாயு**
**தாரணை கொள்ளாது அதைச்**
**சொல்லில் அமர்ந்த விதி.**

"**மண்**" என்பது ஐம்பூதங்களில் ஒன்றின் அதிபதி ஸ்ரீமகாகணபதி ஆவார். மண்ணினால் பிள்ளையார் பிடித்துப் பூஜிப்பதும் மஞ்சளினால் பிடித்துப் பூஜிப்பதும் இந்தப் பெருந் தத்துவத்தைத்தான் உணர்த்துகின்றது. நமது தேகத்திலுள்ள "**பிராணச் சக்திகள்**" உடலின் எல்லாப் பாகத்தினின்றும் வெளியேறிக்கொண்டே இருக்கின்றன. ஐம்புலன்களின் செயல்களே இதற்குக்

காரணம். இப்புலன்களின் ஆட்டம் **"மண்"** என்ற இந்தப் பூதத்தின் வேகமாகும். இந்தப் பிராணச் சக்தியை விரயமாகாமல் தடுப்பது நமது **"சொல்"** கடந்த மௌன நிலையில்தான் முடியும். அதாவது, எண்ணத்தை நிறுத்தி நிஷ்டையில் ஈடுபட்டால்தான் உடலில் வெளியேறிக் கொண்டிருக்கும் நமது பிராணச் சக்தியைத் தடுத்து நிறுத்தலாம். இதுவே யோகம் – தவம் என்று பலவாறாக வருணிக்கப்படுகிறது. எனவே, மண் – என்ற பெரும் பூதத்திற்கு (ஐம்பூதங்களில் ஒன்று) அதிபதியான, **விநாயகனை முழுமுதற் கடவுள்** என்று வருணித்திருக்கின்றனர். ஆகப் பூரணப் புலனடக்கம் இந்த மகாகணபதியின் அருளினால்தான் விளங்கும். அதுவே, மூச்சுக்காற்றை நிறுத்தும் யோகமான **"வாயு தாரணை" (அ) கும்பகம்** என்பதன் மேல்நிலையின் மெய்ப் பொருளாகும். ஔவைக் குறள் என்ற ஔவையின் யோச சூத்திர நூல் இதனை ஒரு தனி பத்து பாடல்களில் விளக்குகிறது.

6. **இரு நாக்கும் கூட "கேசரி முத்திரை"**
   **சுயம்புதேடி**
   **பிரேதம் உயிர் பெறும் அதில்**
   **நாவின் வசம்**

"கேசரி முத்திரை" என்பது நமது வெளி நாக்கும் உள் நாக்கும் சேர்ந்து இணைந்து செயல்படும் பெரும் யோக நிலையாகும். அந்நிலையில் நமது கர்ம தேகம் நீங்கி நமது தேகம் யோக நித்திரையில் "தெய்வீக உடலாக" மாறுகிறது. மகரிஷிகளும் பெரும் மகான்களும் இந்த நிலையில்தான் சஞ்சரிக்கின்றனர். (**திருமேனி** என்று அழைக்கப்படுவது இந்நிலையைத்தான்).

7. **என் தவம் கேசரி முத்திரை**
   **சொல் கடந்த துரியம்**
   **வேதம், உபநிடதம் மூலம்**
   **கீதையின் வாக்கும்.**

வேதகால ரிஷிகள் இந்த நிலையை (**கேசரிச் சித்தி**)அடைந்தவர்கள். "சொல் கடந்த நிலையான **"துரியம்"** என்ற பெரும் யோக நிலை இதுதான். வேதங்கள், உபநிடதங்கள் யாவும் இந்நிலையில்தான் வேத வியாசருக்கு உதயமாயின. ஸ்ரீபகவத் கீதையும் இந்நிலையில்தான் தோன்றிற்று. நமது விழிப்பில் பெரும் புலனடக்கத்தில் இது மறைந்துள்ளது.

8. **நாபி குதம் குய்யம் முனை**
   **உயிர் அதில் அதோமுகம்**
   **நாபி இந்திரியத் தாண்டவம்**
   **கண், மூக்கு, செவி, நாக்கு.**

9. **கர்ப்பச் செயல் அது**
**ஆண்டவனின் கிருபை**
**"யோக நித்திரை" அதன் காப்பு**
**என் தவம் இன்று.**

நமது **"உயிர்"** தன் நிலையான **"நாபி – குதம் – குய்யம்–** என்ற இந்த மர்ம ஸ்தானங்களில்தான் மேலிருந்து கீழாகச் செயல்பட்டு நமது புலன்களை ஆட்டுவிக்கின்றன. இதில் நாபியின் செயல் கண், மூக்கு, செவி, நாக்கு ஆகியவற்றின்இயக்கமாகும். எனவே, **"புலனடக்கம்தான்"** நமது உயிர் நிலையில், அதாவது நமக்குப் பிறப்பினால் ஏற்பட்ட நமது தேக இயக்கத்தில் மாறுதலை ஏற்படுத்தி, நமது **"சிற்றறிவைப்"** பேரரறிவாக மாற்றும் ஆற்றல் பெறுகிறது. இதுவே **யோகம்** அல்லது **தவம்** என்பதாகும். மனிதன் அதிமானுஷனாக மாறுகிற நிலை இது. தாய் கர்ப்பத்தில் நமது உடலில் இருந்த யோக நிலைக்கு மீண்டும் நாம் சுய முயற்சியில் யோகச் சாதனையில் வருவதுதான் மனிதப் பிறவியின் குறிக்கோள். **"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்"** என்ற திருவ.ள்ளுவர் வாக்கின் பொருள் இது. (நீந்துவச' ான்பது இம்முயற்சிதான் – இது இறைவனின் அருளின்றி வெறும் மனித முயற்சியில் ஏற்படாது – எனவேதான் **"அவனருளால் அவன் தாள் வணங்கி"** என்று சைவம் கூறுகிறது. **யோக நித்திரை** என்பது இதுதான். அதாவது, கர்ப்பத்தில் பேரறிவுடன் கலந்து இருந்த நாம் பிறந்ததும் சிற்றறிவைப் பிடித்துவிடுகிறோம். இதுவே புலன் வழி. இதனை விட்டு மீண்டும் பேரறிவைப் பிடிப்பதே "யோகம்" என்பது.

10. **ஸ்ரீவித்தை பூர்த்தி கண்டேன்**
**தன் வயம் ஊன்றி**
**மனம் அதில் அருள் வாக்கு**
**போதம் நிகரில்லாக் காமக் கலை.**

மனிதன் யோகச் சாதனையில் தன்னிலை மறந்து, தான் என்ற எண்ணம் அழிந்து இறையுணர்வில் கலந்து நிற்கும் பெரும்தபோ நிலையில்தான், "இறைவனே "அருள் வாக்காக", ஞானபோதமாக, பிரம்ம உபதேசமாகக் "காமக்கலை" என்றழைக்கப்படும் ஆத்மபோதமாக நமது மனத்தில் செயல்படுகிறான். இந்நிலையைச் சுய சாதனையில் அடைவதுதான் "ஸ்ரீவித்யை" என்ற உபாசனா மார்க்கத்தின் பூர்த்திக் கட்டமாகும். அதுவன்றி வேறு எதுவும் பூர்த்தி ஆகாது.

11. **வேதம் உபநிடதம் அதன் தீர்ப்பு**
**கீதையும் கூட**
**எல்லாம் மானிடன் செயல்**
**அந்தர்யாமி பேச.**

**வேதம், உபநிஷத்,** பகவத் **கீதை** இவை யாவும் இது போன்ற நிலையில் உதித்தவைதான். வேதத்தைத் தந்த வேத வியாசரும் மானிடன்தான். கீதையைத் தந்த ஸ்ரீகிருஷ்ணன் எடுத்த அவதாரமும் **"மானிட அவதாரம்"**. எனவே, மானிடனுள் அந்தர்யாமி (இறைவன்) அருள்வாக்காகப் பேசியதன் பெறும் பயன்கள்தான் இவையாவும். ஆக, மகான்களும் மகரிஷிகளும் மனித உடலில் இருந்துதான் இத்துணை மகத்தான செயல்களை ஆற்றி இருக்கிறார்கள் என்பதை உணர்ந்து **"மனிதன்"** அந்நிலையை அடைய முயற்சி செய்யவேண்டும். வெறும் வேதத்தை, கீதையைத் தலைகீழாக ஒப்பிக்கும் யந்திரமாக இருப்பதில் பயனில்லை என்பது நமது கருத்து.

12. **கண்டு கொண்டேன் அதன் ரகசியம்**
**எண்ணில் போதம் எழ**
**சொல்லை வென்றேன்**
**நிராதாரம் புகுந்து.**

இதுபோன்று வேதம், உபநிஷத், கீதை இவையாவும் உதித்த பெருநிலையின் இரகசியம் "எண்ணத்தைக் கடந்து நின்று, நமது தேகத்தில் இருக்கும் **"மூலாதாரம் சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞா"** என்ற ஆறு ஆதாரச் சக்கரங்களைத் தாண்டி, அதாவது, அவற்றின் செயல்களான **"புலன்களை"** வென்று (அதாவது புலனடக்கத்தில்) நாம் நிற்கும் **"தபோ நிஷ்டை"**யில் நமக்குள் இறைவனால் ஏற்படும் **"ஆத்மபோதம்"**தான் என்பதை நாம் புரிந்து கொள்ளவேண்டும்.

13. **நோக்கு அதில் மனோலயம்**
**காணும் கண்பார்வை எழ**
**உள்ளம் எழுந்தது அதில்**
**மேல் நான்கும் செயல் அற்று.**

இவ்வாறு ஆறு ஆதாரச் சக்கரங்களைத் தாண்டி (புலனடக்கத்தால்) நிற்கும் நிலையில் நாம் கண்ணிருந்தும் குருடராய்க் கட்செவிபோல் காட்சி கொடுப்போம். அங்குதான் நமது **"உள்ளம்"** நம்மோடு பேசும். தன்னிலை மறந்த இந்நிலை மகத்தானது; மகரிஷிகளின் இயல்பு இதுவேயாகும். **நல்ல பாம்பு (கட்செவி)**

கண்ணால் பார்க்கும் சமயம் காது கேளாத நிலையிலும் காதால் கேட்கும் சமயம் கண்ணால் பார்க்க முடியாத நிலையிலும் உள்ள ஒரு தெய்வீகப் படைப்பு. அதாவது, கண்ணே காதாகவும் செயல்படும்படி **"யோக நித்திரை"**யில் இருக்குமாறு படைக்கப்பட்டிருக்கிறது. எனவேதான், **"கட்செவி"** என்று அழைக்கப்படுகிறது. இதுபோன்ற நிலையில்தான் யோகிகள் இருப்பார்கள் – **"காணாக்கண் – கேளாச் செவி"** என்ற இந்த நிலையில் இருப்பவர்கள். இந்நிலையைத்தான் நாம் யோகத்தில்அடைய வேண்டும் – அதுவே **"யோக நித்திரை"** எனப்படும்.

14. **மண் எழுப்பும் ஆகாயம் அதில்**
**கீதம் கேட்கும்**
**சொக்கி நிற்பார் பலர்**
**மேல் கதி காணார்.**

மேற்சொன்ன அந்நிலையில் "ஆகாசத் தத்துவத்தில் வினோதமான **"கீதங்கள்"** கேட்கும். அதனைக் கேட்டு மயங்கிவிடுவார்கள் சாதகர்கள். இந்த இனிய தெய்வக் கீதங்களைக் கேட்டு மயங்காமல், அதனைப் பொருட்படுத்தாமல் மேல்நிலைக்குச் செல்ல மாட்டார்கள். இதுவே **தெய்வச் சோதனை.** இங்குத்தான் சாதகன் தனது திறமையைக் காட்டவேண்டும் என்கிறது யோக சாஸ்த்திரம். யோகநிலையில் "**துரியம்**" என்ற பெரும் தவநிலையை அடையும் முன் பலவிதமான ஓசைகள் நமக்குள் எழும். நமது கவனத்தைச் சிந்தனையை ஓசைகள் நமக்குள் எழும். நமது கவனத்தை, சிந்தனையை, எண்ணத்தைச் சிதறிப் போகச் செய்யும் இயற்கையின் சூழ்ச்சி இது. இங்குக் கவனமாக அந்த ஒலிகளைக் கவனியாமல் இருந்து மேல்நிலையை அடைய வேண்டும். அதுவே துரியம். அப்படிக் கேட்கப்படும் ஒலிகள் மத்தளம், பேரிகை, யாழ், வீணை, குழல், சலங்கை, கிண்கிணி, இடி, கடல்அலைகள், மலை உருளுதல், பறவைகள், சங்கு, வண்டு என்பன போன்றவைகளாகும்.

15. **என்போதம் அதுவே இன்று**
**பரமன் ஆணை**
**இந்நூல் அவன் பெருமை**
**நான் எளியேன் அதற்கு**

அமரகவி இந்நிலையைத் தாண்டி நின்று பரமனின் கருணையின்பேரில் இந்த "ஞானபோதத்தைத்"தபோ நிஷ்டையில்

பெற்றுத் தந்திருக்கிறார். இந்நூல் இறைவனின் ஆணையின்பேரில் எழுந்ததாகும். இதன் மூலக்காரணம் இறைவனே. நான் வெறும் எளியேன் இப்பெருமைக்கு என்று மிகவும் எளிமையுடனும் அடக்கத்துடனும் கூறிக் கொள்கிறார்.

16. **சொல்லில் அமரனானேன்**
**ஆண்டவனின் கிருபை**
**என் தவம் "ரூப சித்தி"**
**மண்ணும் விண்ணும் கூட.**

17. **பெரும் தவம் அது மூத்தோர் வழி**
**மண்ணில் நிற்பது ரூபம்**
**விண்ணில் அது சப்தம்**
**ஜகத் அனைத்தும் இரண்டின் ஆணை.**

"ரூப சித்தி அடைந்த நான் சொல்லில் அமரனாகினேன் என்று கூறும் ஆசிரியர் "மண்" என்ற தத்துவமும் "விண்" என்ற தத்துவமும் கூடிய நிலையில் இந்த மகத்தான நிலையை அடைந்தேன் என்கிறார். இங்கு "மண்" என்ற பிருத்வித் தத்துவத்தில் "ரூபம்" என்ற பொருள்களை (பார்க்கும் அறிவு) முதலிய ஒன்று நம் உணர்வுகள் சேர்ந்து நம்மை ஆட்டுவிக்கும் விதத்தையும் "விண்" (ஆகாசம்) என்ற ஒலிக்கதிர்களின் பிறப்பிடம் என்ற இவை மறைந்து மாயையின் செயலான இந்திரியச் சலனங்களைக் கடந்து, "புலனடக்கத்தில்" நிற்கும் யோக நித்திரையைக் குறிப்பிடுகின்றார். ஆக, "கண்ணிருந்தும காணாத பெரும் யோக நிலையை இங்குக் குறிப்பிட்டுத் தனமயமாகித் தேக உணர்வின்றிக் கிடக்கும் நிஷ்டையில் எழுந்தது இந்தத் தெய்வீகக் கிரந்தம் என்பதை விளக்கியுள்ளார். மேலும், உலகனைத்தும் "சப்தம்" என்ற ஓங்காரத்தின் உருவங்கள்தான் மகாசக்தியின் சிருஷ்டித் தத்துவம் என்பது. ஸ்தூலத் தத்துவமே சகல வடிவாகவும் ரூப மாயையாகவும் இருக்கிறது என்பதை விவரித்துச் சிற்றறிவுக்கு எட்டுவது உருவம் உள்ளவை மட்டும் என்றும் பேரறிவுக்கு விளக்கமான சப்தம் என்பது இந்த உண்மையான மெய்ப்பொருள் என்றும் கூறுகிறார். (உருவமற்ற தேஜோ சக்தி).

"ரூப சித்தி" என்ற இது முன்னோர்களான வேதகால மகரிஷிகளின் சாதனை (அல்லது) கடைப்பிடித்த வழி என்று உணர வேண்டும். அதாவது, பார்வை அடங்கிய யோகநிலையை இங்கு விளக்குகிறார்.

18. **கீழ் மூன்றும் சடலப் போக்கு**
**ஜீவ கதி என்றும்**
**மண்ணைப் பற்று பிறப்பு அற**
**நித்திய முக்தன்நீ அன்று.**

நமது தேகத்தில் உள்ள சருமத்தில் (உடலின் தோல்) முதல் மூன்று அடுக்குகள் பிரேத சரீரத்தின் போக்கில் செல்லும் வஸ்து என்றும், அதை ஜீவகதி என்ற பிறப்பு, இறப்பு என்னும் சூழலில் உள்ளது என்கிறார். "மண்" என்ற தத்துவமே நமது புலன்களாகவும் மனமாகவும் செயல்படுகிறது. எனவே, "புலனடக்கம்" பெற்றுவிட்டால், மனிதன் நித்யமுக்தன் ஆகிவிடுகிறான்; மறுபிறவியில்லை அவனுக்கு.

(அதாவது மானிடனாகப் பிறந்து பிறவிக்கடல் கடக்கத் தேவையில்லை. பிறவியிலேயே சித்தராக இருக்கும் பெருந்தவ நிலையை அடைந்துவிடுகிறான் என்பதே இங்குப் பொருள்)



# மகாகுண்டலித் தத்துவம்

19. **நீ உதிப்பதுமண்ணில் எழுவது வானில்**
**"மேருவின்" செயல்**
**சுவாசம் இரண்டும் அதன் ஏவல்**
**நோக்கு அதில் பார்வை.**

மனிதன் பிறப்பது இந்த மண் என்ற தத்துவத்தில்தான் – அதாவது ஐம்பொறிகளின் ஆட்டத்திலும், மனத்தின் சஞ்சலத்திலும் உழல்வதற்குத்தான். இறப்பில் இது முடிந்து மீண்டும் மறு உடல் பெறும்வரை **"வான்"** என்ற ஆகாயத் தத்துவத்தில் நமது உயிர் உடலைவிட்டுச் செல்கிறது. எனவே, மண்ணையும் விண்ணையும் சேர்க்கும் பெருஞ் சாதனைதான் **யோகம் (அல்லது)** தபசு என்று அழைக்கப்படுகிறது. இவ்விதம் புலன்கள் தங்கள் ஆட்டத்தை நடத்தக் காரணமாயிருப்பது நமது நாசியின் இரு சுவாசங்கள்தான். இவை **"மேரு"** என்றழைக்கப்படும் நமது (புருவ மத்தியின்) **"ஆக்ஞா"** என்ற ஆறாவது ஆதாரச் சக்கரத்தின் செயல்களன்றி வேறு இல்லை. சுவாசங்கள் அடங்கினால் மனிதனின் கதை முடிந்துவிடுகிறது. யோகத்தில் இக்கட்டம் வரும். அதனைத் தாண்டுவது இறைவனின் கருணை. இவ்விதம் சுவாசத்தினால்தான் நமது **"கண்"** அதன் பார்வை இவை இயங்குகின்றன.

20. **யோகம் கண்ணின் சிறப்பு**
**பரமன் உன்னில் அங்கு**
**நீ சொல்லில் அமர்ந்தாய்**
**மண் சடலம் தாங்க.**

**"யோகம்"** – நமது கண்ணின் சிறப்பு. பரமாத்மாவே நமது கண்களில் **"ஒளி"** யாய், உயிராய் விளங்குகிறான். உயிர் உடலில் இருக்கும்வரைதான் இது கண்ணில் இருக்கும்; இறப்பில் விலகிவிடும். "பெருந் தபோ நிலையில் **"உயிருடன் நமது பேச்சு சேர"** நமது தேகம் வெறும் சடலம்போல் தெரியும். அதாவது, தேக இயக்கங்களை அடக்கி மனம் ஒடுங்கிச் சொல்லில் (அல்லது) எண்ணத்தில் உயிர் கலந்து நிற்கும் **"தபோநிலை"** என்பது இதுவே.

21. **மூச்சு பிறக்க காது அறுந்தது**
**ஒட்டு அதை நாவின் மூலம்**
**ரந்திரம் எழும் அதில்**
**கீழ்வாசல்**

பிறப்பில் அதாவது, தாய் கர்ப்பத்தைவிட்டு வெளி வந்ததும் நாம் **சுவாசம்** என்ற மூச்சுவிடும் செயலைச் செய்கிறோம். கர்ப்பத்தில் சிசுவானது இதுபோன்ற மூச்சு விடுவதில்லை. எனவே, தெய்வீகச் சக்திகள் கூடிய நிலையில் தெய்வக் குரலை (அல்லது) தேவ வாக்கைக் கேட்கும் நிலையில் கர்ப்பத்தில் நாம் இருந்தோம். பிறந்தவுடன் (அல்லது) மூச்சு விடத் தொடங்கியதும் இந்தத் தெய்வீகத் தன்மையை (தேவ வாக்கு கேட்கும் செவியை) இழந்துவிடுகிறோம். இதைத்தான் "**மூச்சு பிறக்கக் காது அறுந்தது**" என்று கூறுகிறார். இங்குக் "**காது**" என்பது "**தோடுடைய செவி**" என்று அழைக்கப்படும் பெருந்தவநிலை யாகும். **தோடுடைய செவி** 'என்ற நிலை மேற்கூறிய தேவ வாக்கை (பிரணவம்) உணரும் பெருந்தவநிலை. அதை மீண்டும் பெற நாம் என்ன செய்யவேண்டும்? பூஜை, தியானம், ஜபம், ஆத்ம விசாரம் போன்ற யோகவழிகளின்மூலம் பிரம்ம **நிஷ்டை**யை அடையவேண்டும். அதற்குப் பேச்சை அடக்கவேண்டும். மௌனத்தின் எல்லைக்குச் சென்றுவிட்டால் மீண்டும் நமது தெய்வீகத்தன்மை நம்மை வந்தடையும். இதைத்தான் "பேச்சை (அல்லது) நாவையடக்கி, அதன் உதவிகொண்டு இழந்த தெய்வீகத்தன்மையை (தோடுடைய செவியை) மீண்டும் பெறவேண்டும் என்பதை "**ஒட்டு அதை நாவின் மூலம்**" என்று யோகச் சூத்திரத்தை கொண்டு சொன்னோம். (இப்படி ஒட்டினால் நாம் "தோடுடைய செவியன் ஆகலாம்). திருஞானசம்பந்தரைத் தோடுடைய செவியன் என்று அழைப்பது மரபு. உள்ளத்திலுள்ள நமது இறைவனுடன் நாம் "**யோக நித்திரை**"யில் உறவாடும் நிலை பெற்ற நமது ஞானச் செவி இதுதான்.

22. **கேசரியின் தத்துவம் அதுவே**
**வெகு நாள் பயிற்சி**
**உடல் அதில் சிதாகாயம்**
**மூன்று லோகம் கடந்து.**

இதுவே முன் சொன்ன "**கேசரித் தத்துவம்**" பல ஜென்மங்களில் செய்த பயிற்சியினால்தான் இது சித்திக்கும். இந்தச் சித்தி ஏற்பட்டுவிட்டால், அந்தத் தபோ நிலையில் நமது உடல் "**சிதாகாசம்**" அல்லது **மஹர்லோகம்** என்ற நான்காவது லோகத்தில் சஞ்சரிக்கும் தன்மையைப் பெறும். கடந்து செல்லும் மூன்று லோகங்கள் **பூலோகம்**, **புவர்லோகம்**, **சுவர்லோகம்** என்பனவாகும். **மஹர்லோகத்தைத்தான்** "**துரியம்**" என்ற யோக நிலையாக வர்ணிக்கப்படுகிறது. சாதகனின் உடலே தேவலோகமாக மாறிவிடும் அங்கு.

23. **பூ, புவர், சுவர் அவை**
**அநாதி பிரேதம்**
**உன்னில் அது நிற்காது**
**ஸ்பரிசம் இழக்க.**

இந்த மூன்று லோகங்கள் (பூ, புவர், சுவர்) கடப்பது என்பது பிரேத உலகங்களைத் தாண்டுவது ஆகும். நமது **"தேக ஸ்மரணை"** (அல்லது) தேக உணர்ச்சி மற்றும் புலன்கள் நம்மைவிட்டு நீங்கிய தபோநிலையில்தான் நாம் இவற்றைக் கடக்கமுடியும். சாதாரண மனிதர்களுக்கு ஏற்பட்ட நிலையல்ல அது.

24 **யோனி ஸ்பரிச சுகம்**
**பிறந்த இடம் நாடி**
**நாபி அதன் வசியம்**
**ஆதாரம் கொண்டு**

**"யோனித்"** தத்துவம் என்பது ஸ்பரிசத்தால் (அல்லது) ஆண் பெண் இருவருக்கும் ஒருவரையொருவர் தொடுவதால் ஏற்படும் உணர்ச்சி. ஆறு ஆதாரங்களின் துணைகொண்டு நமது நாபி என்ற நமது தேகத்தின் பாகம் இதனை நடத்துகிறது. எனவேதான் ஆறு ஆதாரச் சக்கரங்களின் செயல்களைக் குறிப்பாக உணர்த்தும் "சண்முகப் பெருமானை ஆராதனை செய்வதும் அவன் அருளைப் பெறுவதும் மிகவும் கடினம் என்பது அவன் அருளின்றிக் காமம் என்ற உணர்ச்சியை வெல்ல முடியாது. புலன்களின் ஓட்டம், மனத்தின் ஓட்டம், ஆத்மாவின் நாட்டம் இவை உலகப் பொருள்கள் மீது இருப்பது சண்முகரது விளையாட்டு.

25. **பெண்ணும் மண்ணும் ஒன்று**
**யோனித் தத்துவம்**
**பெண்ணில் உத்பவம்**
**மண்ணில் அது காமம்**

பெண்ணும் மண்ணும் ஒன்று. தத்துவத்தில் **"யோனி"** என்ற **"ஸ்பரிச"** தத்துவத்தில் பெண்ணிடம் மயங்கும் மனிதன் தன்னைமறக்கிறான். மண்ணில் உறங்கும் உறக்கத்திலும் அவன் தன்னை மறக்கிறான். எனவேதான், இந்த ஒற்றுமை **"கர்ப்பம்"** என்ற உற்பவம் பெண்ணில் நடக்கிறது. அதுவே சிருஷ்டித் தத்துவத்தை ஈசன் நடத்தும் காலக் கட்டம். எனவே, கர்ப்பிணிகளை மதிக்கும் நமது நாட்டுப் பண்பாடு உயர்ந்ததான ஒன்று. ஜாதி, மதம் இதற்குக் குறுக்கே வர இயலாது.

ஆனால், "**மண்ணின்**" (பிருதிவி) செயல் காமமாக வெளிப்படுகிறது. அதாவது, கர்ப்பம் உள்ள காலத்திலும் சாதாரணக் காலத்திலும் உள்ள மன நிலைகளை இங்கு விவரிக்கின்றார். பூமாதேவியைத் தாய் என்று அழைப்பது அதுவே. அவள் பூமி பாரத்தைத் தாங்காமல் இருந்துவிட்டால் பூகம்பம், நிலச்சரிவு ஏற்படும். இயற்கையின் சீற்றம் இங்குக் காரணமாகிறது. எல்லாத் தாவரங்களும் வளர இந்தப் பூமியே ஆதாரமாகவும் இருக்கிறது. இதுபோலவே மனிதனின் காமம் அவன் கண்களை மறைக்கின்றது. எனவே, "மண்" என்ற பெருந் தத்துவம் ஆக்கல், அழித்தல் என்ற இரண்டையும் செய்ய வல்லது. எனவேதான், மண்ணினால் செய்து வணங்கப்படும் **விநாயகர் தடைகளை நீக்கவும் ஏற்படுத்தவும், ஐந்துவிதத் தேவக் காரியங்களையும் (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்) செய்யவல்லவர். "அறிவு"** என்பதை அவரது உருவம் காட்டுகிறது. முழு முதற் கடவுள் என்பதன் விளக்கம் இதுவே. ஆக்கல், அழித்தல் இரண்டும் ஒரே சக்தியால் செயல்படுகிறது. திசைகள்தான் வேறாக இருக்கின்றன. "**ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே**" என்பதன் பெரும் உண்மை இதுதான்.

26. குண்டலித் தத்துவம் யாரறிவார்
போக வழி சுக்கிலம்
நாத வழி பிரம்ம நிஷ்டை
இருமுனை அது, ரீங்கார நடை.

27. முச்சுடர் சாய குண்டலி எழும்
நாத கீதம்
அதன் உறக்கம் பாதாள அக்னி
ஆண் லிங்கம் பெண்ணில் எழ.

"**குண்டலித் தத்துவம்**" என்பது புலனடக்கத்தில் காமத்தை யடக்கித் தெய்வத்தின்மேல் இந்த வேகத்தைத் திருப்பி நாதம் என்ற பரப்பிரம்மத்தை எண்ணி மனத்தை ஒடுக்கி, நாம் பெறும் பிரம்ம நிஷ்டைதான்; வேறு ஒன்றுமில்லை. இதுவே "**சுழுமுனை**" என்று அழைக்கப்படும் இடை நாடியும் பிங்கல நாடியும் ஒன்று கூடும் நிலையில் ஏற்படும் பெரும் நாதத் தத்துவமாகும். அதுவே மூன்று அக்னிகளைக் கடந்த நிலையில் ஏற்படும் "**நாத கீதம்**". இந்தக் கீதமானது நமது மூலாதாரத்தில் உறங்கிக் கொண்டிருக்கும் "**யோகாக்னி**"தனை மேலே கிளப்பும் யோகச் சித்தியாகும்.

26. **நான் புகட்டுவது காமக் கலை**
**வீரியம் சுக்கிலம் தாது இழ**
**அதன் போக்கே உன் தவமும்**
**மையல் நீங்கி.**

**"காமக்கலை"** என்பது இந்த "ஞானபோதமேயன்றி வேறில்லை. காமாக்னியை வென்று சுக்கிலத் தாதுவின் செயல் மாறிப் பெண்ணாசை முற்றிலும் நீங்கின நிலை பெரும் தபோ சக்தியாகும். உள்ளம் நம்மோடு பேசும் உயர்ந்த நிலை இது.

29. **உரைத்தேன் உண்மை நெறி**
**ரூப சித்தி சுக்கிலத் தாது உன் வயம் நாட**
**"அகோரம்" நீங்கும் அதில்**
**சப்தம் கட்டுண்டு.**

"**ரூப சித்தி**" என்ற இந்நிலையடைந்து சுக்கிலத் தாது நமது கட்டுக்குள் அடங்கி, மாயை நீங்கிப் புலனடக்கத்தில் தோன்றும் "**உண்மை நெறி**"தான் இப்பாடல்கள். இங்குச் சப்த பிரம்மம் நமக்குத் துணையாக நின்று "**தெய்வக்குரலைத்**" தேவ வாக்கை உணரும் பெரும் தபோ சக்தியைத் தருகிறது.

ஸ்ரீமகாகணபதியே இந்தச் சப்த பிரம்மம் எனப்படுவார். ரூபசித்தியடைந்த மகான்கள் தங்கள் வாழ்நாளில் கடைசியில் எந்த உருவத்திலிருந்தார்களோ அதே உருவத்தில்தான் தோன்றுவார்கள் என்றும், எப்போதும், எங்கும், ஸ்ரீராகவேந்திரர், சதாசிவ பிரம்மம், போதேந்திரர், வள்ளலார் முதலியோர்.

30. **மூல அனல் பாதாள அக்னி**
**கேவலம் நாட்டும் விதை**
**ஸ்பரிசம் அதில் ஞானபோதம்**
**அமர வாக்கு தந்து.**

"**மூல அனல்**" நமது மூலாதாரத்தின் கீழிருந்து மேலெழும் "ஞான" பிரகாசமான சக்தியாகத் தோன்றும் "**கேவலக் கும்பகம்**" என்ற சித்தியே இது. இந்நிலையில் "**நமது தேக ஸ்பரிஸம் அல்லது உணர்ச்சியே "ஞான போதமாக"** மாறி விடுகிறது. இதுவே "அமர வாக்கு" என்பதாகும். இது அடியார்கள் நிலைத்திருக்கும் "**பரபக்தி**"யின் பூர்ண நிலையாகும். ஓரிருவரே இந்நிலையை அடைந்துள்ளனர். திருஞானசம்பந்தர், திருமூலர் போன்றவர்கள்.

31. ஸ்பரிசம் தேக நடை, உணர்ச்சி அற்று
ஆங்கார வீதி
உலகனைத்தும் அதன் வசம்
பெரும் சித்தரும் மையல் கண்டு.

நமது தேக உணர்ச்சியில் மாபெரும் தெய்வீகச் சக்தி அடங்கியுள்ளது. இவ்வுணர்ச்சியில் அடங்கும் இந்தப் பெரும் சக்திதான் நமது தேகத்தின், மனத்தின் உயிரின் செயல்களை இயக்கும் கருவியாகும். எனவே, "தேக உணர்வைத்" தாண்டுவதே எல்லா யோகத்தின் குறிக்கோளாகும். அப்படித் தாண்டி மேற்சென்று பெரு வெளியான ஏழு லோகங்களைக் கடந்து செல்வதுதான் மனிதன் தெய்வமாக மாறும் நிலையின் பாதையாகும். தன்னிலை மறந்து, "நான் – எனது" என்ற நிலையின்றிப் பற்றற்றிருக்கும் பெருந்தபோ நிலையது. அந்நிலையில் உலகனைத்தும் நமக்கடிமையாகின்றன. இந்நிலைக்கு அதிபதி ஸ்ரீமகாகணபதி யாவார்.

32. பெருமூச்சு பிளக்க சிறுமூச்சு, சொல் நாடி
ஜடத்தின் நேர் எதிர்
மீற இயலாது என்றும்
உன் தேர்ச்சி அதில் சம நடை

"பெருமூச்சு" என்ற மூலப் பொருளே (பிராணச் சக்தி) நமது மூச்சாக, பேச்சாக மாறி உடலையும் உயிரையும் இணைத்து இருக்கிறது. நமது தேகத்தின் காரியங்கள் தச வாயுக்களினாலும் வாதம், பித்தம், கபம் என்ற மூன்று நாடிகளினாலும் செயல்படுகின்றன. எனவே, "பெருமூச்சு" என்ற பிராணச் சக்தியை அடக்குவது என்பது, மேற்சொன்ன தேகத் தத்துவத்தை அதாவது இதயத்துடிப்பு, நாடித்துடிப்பு போன்ற நுண்ணிய தேக இயக்கத்துடன் சம்பந்தப்பட்ட ஒட்டங்களான தச வாயுக்கள் (பஞ்ச பிராணன், பஞ்ச உப பிராணன்கள்) வாதம், பித்தம், கபம் என்ற மூன்று ஜீவ நிலைகள் போன்ற இவை அனைத்தையும் அடக்குவதாகும். எனவே, "யோகம்" என்பது நமது தேக இயக்கமான மூச்சு, இதயத்துடிப்பு போன்றவற்றைக் கட்டுப்படுத்திச் சமாதி நோக்கிச் செல்லுவதாகும். அங்குத்தான் பிராணச் சக்தியை நாம் உணர்ந்து வெல்ல முடியும். அந்நிலையில்தான் சர்வ பிரபஞ்சமும் நமக்கு அடிமையாகின்றன. "தேகமும் உயிரும்" ஒருங்கே அருள் மேடையில் சம நிலையில் இயங்கும் பெருநிலையாகும். (தபோ சக்தி) சமநிலை இணைந்து இயக்கம் தவறினால் உயிர் உடலைவிட்டு நீங்கிவிடும். எனவே, "சாகாமல் செத்துச் சுகம்

**பெறுவது எக்காலம்?"** என்று பத்திரகிரியார் அருட்புலம்பலின்படி இறப்பின் நிலையைத் தாண்டி நிற்கும் **"சமாதி" மார்க்கம் இதுவே.** மகான்களே இந்நிலையை இறைவனின் பேரருளின் உதவியால் மட்டுமே அடைந்து ஞானபோதத்தைப் பெறுகின்றனர்.

**33. குண்டலி எழுப்புவது நாதம் கேட்பது**
**வெகுபேர் அறியார்**
**ஜடம் உயிர் நாடி**
**மூச்சு பேச்சில் கவிழ்ந்தநிலை**

**34. ஆகாயம் அதில் உன் வயம்**
**பேச்சு மூச்சை விழுங்க விழுங்க**
**நாள்தோறும் வளரும் கலை**
**ஞான வித்து.**

**"குண்டலி"**யை எழுப்புவது என்பது "நமக்குள்ளிருந்து நாதம் கேட்பதுதான். இதுவே பிரம்ம **நிஷ்**டையில்/நாதோபாசனையில் எழும் **"தேவ வாக்கு"** கேட்பதுதான். **"நாபிக்குக் கீழே நல்லெழுத்துண்டு"**– என்ற தத்துவத்தின் சாரமும் இதுவே. உயிரற்ற உடல்போல், தன்னிலை மறந்த தபோ நிஷ்டையில்" நமது சுவாசம் பேச்சில் கலந்துவிட்ட பெருநிலையில் **"மௌனகீதம்"/ "அமைதி"** அருள்வாக்காக மாறும் பெரும் யோக நிலை இதுவே. – ஆகாசத் தத்துவம் (பஞ்ச பூதங்களில்) நமக்கு வசமான நிலையாகும். மூச்சானது பேச்சுக்குள் அடங்கிக்கொண்டே வர, வளரும் கலையிது. "ஞானத்தின் பிறப்பிடம்" இதுவே.

**35. அமரத் தத்துவம் என்பார் அதை**
**சொல்லில் அமர்ந்த மனம்**
**வெகுநாள் நடை அது, சித்தின் வசம்**
**கல்பம், யுகம் கடந்து.**

**36. சிரஞ்சீவி நடை அது**
**சொல்லில் அகாரம் ஓங்க**
**நாதாந்தம் போதாந்தம் இரண்டும**
**ஒப்பில்லா ஆன்ம தத்துவம்.**

எனவே, **"மூச்சு பேச்சில் ஒடுங்கி"** ஞான பிராப்தியைப் பெறும் இந்நிலையைத்தான் **"அமரத் தத்துவம்"** என்பார். **"சிரஞ்சீவித் தத்துவம்"** என்றும் அழைக்கப்படும் இந்நிலையை அடைந்தவர்கள் இராமாயணத்தில் காணும் ஸ்ரீஅனுமான் போன்ற ஒரு சிலரே. மூச்சு, பேச்சு

அற்று, சித்தம் அடங்கி மனம் ஞான ஒலியாகச் செயல்படும் இங்கும் "சொல்லில் அகாரம் என்பது ஓங்கி பின் நாதம், போதம் இரண்டும் நிகரற்ற "**ஆத்ம தத்துவமாக**" விளங்கும் யோக நிலை இது. ஸ்ரீகணநாதனின் அருளும் ஸ்ரீமகாலக்ஷ்மியின் அருளும் கலந்த வரம் இதற்குத் தேவை. ஸ்ரீமகா லக்ஷ்மியின் வாக்கில் உள்ளது ஸ்ரீகணநாதனின் அருளும் வாக்குமாகும்.

37. **உன் கூடு அதில் சுயம்பு**
**சகஜ நிஷ்டை பெற்று**
**நாள்தோறும் ஊன்றிடும் கலை**
**கேவலம் பெற்று**

மகரிஷிகளின் "**தேகம்**" பிறப்பிலேயே இந்தப் பெரும் தபோ நிஷ்டைக்கு உகந்தவாறு அமையப் பெற்று நாளொரு மேனி பொழுதொரு வண்ணமாகச் "**சகஜ நிஷ்டை**"யில் (பெரும் தவநிலை) வளரும். "**ஞான தேகமாக**" விளங்க வளரும் இவர்களது தேகம் **கேவலக் கும்பகம்** என்ற சித்தியின் தபோ சக்தியை வளர்த்துக் கொள்ளும் பெருமை பெற்றுள்ளதாக உள்ளது. ஹடயோகத்தில் "**கேவலக் கும்பகம்**" என்பது பெரு நிலையாகும். அதாவது, இடது வலது நாசிகளின் சுவாசம் யோகத்தினால் சமநிலை அடைந்த பெருஞ் சித்தியாகும்.

38. **"மஹத்" அதன் வாழ்வு**
**நீ சித்தில் அமரும் காலம்**
**யோகத்தின் சிகரம் அந்நாள்**
**ஆத்மபோதம் எழ.**

"மஹத்" என்று அழைக்கப்படும் ஒருநிலைப்பட்ட, எண்ணத்தின் ஓட்டம் நின்ற நிலையின் அனுகூலமான பெரும் யோக நித்திரையே கேவலக் கும்பகம் பெற்று முன்னேறும் அதிமானுஷ நிஷ்டையாகும். அதுவே, யோகத்தின் சிகரம் ஆகும். எனவேதான், "**ஸ்ரீவித்யை**" என்ற இராஜயோகம் கூடிய யோக மார்க்கத்தில் "**மேரு**" சிகரத்தை வருணிக்கும் சமயம் இந்த மஹத் என்ற பெரும் யோக நிலையைக் குறிக்கோளாகக் கொள்கின்றனர். மஹத் என்பது "**எண்ணத்தை நிறுத்தி**" இருக்கும் நிலையாகும். இங்குச் சுவாசமும் உடன் அடங்கிவிடுகிறது. அந்நிலையில்தான் ("**சித்த ஸ்வாதீனம்**" பெரு நிலையில்) "**ஆத்ம போதம்**" நமக்குள் எழுகிறது.

39. **போதம் நிற்க திருநாள்**
**சாந்தி கலை உதிக்கும் பார்**

**கண்முன் ஜோதி வட்டம்**
**அதுவே ஆத்ம லிங்கம்**

இந்த ஆத்மபோதம் நின்றபின் "**சாந்திக் கலை**" என்ற ஓர் பிரகாசம் தோன்றி, நமது கண்முன்னே "**ஜோதி வட்டம்**" தெரியும். அதுவே, "**ஆத்மலிங்கம்**" என்பதாகும். (மறர்லோகம்) மேலுள்ள ஏழு லோகங்களான பூ, புவர், சுவர் மஹர், ஜன, தபோ, சத்யம் என்பதில் நான்காவது லோகம் இது. தவத்தில் மானிடர்க்கு இதுவே கடைநிலை. இதற்குமேல் செல்வது இறைவன் செயல்.

40. **அரிது அரிது அந்நிலை மானிடர்க்கு**
**ஜடம் அதில் சுயம்பு நாடும்**
**சுயம்பு என்றும் பதினாறு**
**காலன் அகல.**

மனிதனுக்கு இந்நிலை சித்திப்பது மிகவும் கடினம். அடியார்களில்கூட ஒரிருவரே இந்நிலையை எய்தியிருக்கின்றனர் என்றால், சாதாரண மனிதன் எத்துணைப் பெரிய முயற்சி எடுக்கவேண்டும் என்பது தெளிவு. "**திருஞானசம்பந்தர், திருமூலர், நம்மாழ்வார்**" போன்ற அடியார்களைப்போல், பரபக்தியின் உதவியாலும் பரமாத்மாவின் பெரும் கருணையினாலும்தான் இந்நிலையை எய்தவேண்டும் என்பதும் நாம் சிந்திக்க வேண்டியது. பிறப்பிலேயே மேற்கூறியபடி **சித்த சுவாதீனம்** என்ற "புலனடக்கத்தின்" பயனைப் பெற்றிருத்தல் அவசியம் என்று தெரிகிறது. **சித்தாந்த முக்தி** என்று அவர்களின் தவநிலைக்குப் பெயர். அதாவது, பிறவிச் சித்தர்கள்தான் இந்நிலையை எய்த முடியும் என்பது தெளிவு. இதற்கு இலக்கணமாக ஒன்று கூற விரும்புகிறேன். "**ஷட் சக்கரச் சித்தி**" என்ற ஆறு ஆதரரச் சக்கரங்களை வென்று, "**ஸ்தித பிரக்ஞனாக**" யோக நித்திரையில் "**கேவலக் கும்பகம்**" என்ற மாபெருஞ் சித்தியை அடைந்தவனாகிக் குறைந்தது ஏழு ஜென்மங்களில் (தொடர்ந்து) இவற்றைக் கடைப்பிடித்து வெற்றி கொண்டவர்கள்தான் "**அருள் வாக்காக**" இறைவனின் ஞான உபதேசங்களைப் பெற முடியும் என்ற ஒரு நியதி இருக்கிறது. கேவல கும்பகம் என்ற யோகநிலையை அறிய "Advaita Philosophy of Sri Adi Sankara by Amarakavi - A Siddha yogi for complete details" என்ற ஆங்கிலப் புத்தகத்தை வாங்கிப் படிக்கவும். அத்தனை விவரங்கள் வேறு எங்கும் கிடைக்காது.

எனவே, ஒரே ஜென்மத்தில் நடக்கும் செப்பிடு வித்தை அன்று இது. மேலும், பிறப்பில் வரும் "**மூச்சு, பேச்சு, தேக இயக்கம், பஞ்ச பூதங்களின்**

இயக்கம், நாடித் துடிப்பு" போன்ற சகல பெரும் இயக்கங்களைக் கொண்ட நமது தேகம் "காலனின்" கைவசம் இருப்பது தெரிந்ததே. அதாவது, இயற்கையின் கருணையில் இயங்கும் நமது தேகத் தத்துவம் வாழ்நாளை நிர்ணயிக்கும் (அல்லது) முடித்துவிடும் ஆற்றல் கொண்டது. இந்நிலை மாறித் தாய் கர்ப்பத்தில் நாம் இருந்த நிலையான காலத் தத்துவத்தை அல்லது மானிடனுக்கு இருக்கும் தேக, மன, ஆத்ம, உணர்ச்சித் தத்துவங்களைக் கடந்த ஒரு பெரும் யோக நிலையை மீண்டும் பெறவேண்டும். **இதுவே யோகத்தின் அல்லது தபசின் குறிக்கோள்.** சுருக்கமாக, முன் கர்மவினையின் பயனாகப் பிறவி எடுக்கும் மனிதன் பிறந்ததும், **"விதி"** அவனது செயலை, புத்தியை, ஆயுளை மற்றும் தேக இயக்கத்தை நவக்கிரகங்களின் துணைகொண்டு நிர்ணயம் செய்துவிடுகிறது. இதனைத்தாண்டிக் கர்ம வினையைக் கடந்து, இயற்கையின் ஆட்சிக்குட்பட்ட இவற்றை வென்றுவிட்டால் **"என்றும் –16"** என்ற சிரஞ்சீவியாகி விடுகிறான். இறப்பை வென்ற இவன் ஆயுள், பிறகு இவன் விருப்பம்போல் விளங்கும். பல ஆண்டுகள் உயிர் வாழ்ந்த பிரம்ம ஞானிகள் இப்படித்தான் சென்றனர். **திருமந்திரம்** எழுதிய **திருமூல** நாயனார் இது போன்று 3000 ஆண்டுகளுக்கு மேல் உயிர் வாழ்ந்தார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

41. **ஸ்ரீவித்தை பூர்த்தி அந்நாள்**
**உன்னில் நீ அமர்ந்து**
"பஹிர்" **உன் வயம் அன்று**
**பிறந்த இடம்**

எனவே, தாய் கர்ப்பத்தில் நாம் இருந்ததுபோல, உலகத்தை மறந்து, தேக உணர்வின்றி, அறிவு மூச்சு, பேச்சு எதுவும் இன்றியிருக்கும் பரப்பிரம்ம நிலையைத்தான் "சுயம்பு" எனக் கூறப்படுகிறது. இந்நிலையை நாம் யோக மார்க்கத்தில், தபோ நிஷ்டையில் அடைவதுதான் ஸ்ரீவித்யா உபாசனையின் பூர்த்திக் கட்டம் ஆகும். **"தன் மயமாகி"** வெளி உலகை மறந்திருக்கும் பெருநிலைதான் "பஹிர்" என்பது. இது பெருந்தபோ நிலையாகும். மனிதன் இந்தப் பெருந்தபோ நிலையில் கருவில் இருந்துவிட்டுத் **"தான்"** பூமியில் பிறந்ததும் **"அழுகிறான்"** கருவில் இருக்கும் சிசு பிறந்ததும் அழுகின்ற காரணம் இதுவே. தன்னிடமுள்ள தேவ கிருபையான தபோ சக்தி மறைந்ததை, பறிபோனதை நினைத்துத்தான் அழுகிறது. இதுவே மனிதனின் **"ஜென்ம பூமி"** இந்தத் தபோ சக்தியை மனிதன் மீண்டும் பெறுவதே யோகம், தபசு என்று பலவாறாக வருணிக்கப்படுகிறது.

42. ஜோதி வட்டம் "மஹர் லோகம்"
சந்திர பிரபை
மேல் மூன்றும் உன் உள்ளம்
அநாதி உயிர்.

"மேற்கூறிய ஞானபோதம் வந்த பின் உதிக்கும் சாந்திக் கலையில் ஏற்படும் "ஜோதி வட்டம்" தான் நான்காவது லோகமான மஹர் லோகம் எனப்படும். "சந்திர பிரபை" என்று அழைக்கப்படும். திருவிழாக்காலத்தில் இறைவனுக்கு அலங்காரம் செய்யும்போது "சந்திர பிரபை" "சூரிய பிரபை" என்று சொல்வது வழக்கம். இதில் சந்திர பிரபைதான் மஹர் லோகத்தைக் குறிக்கிறது. மனித முயற்சியின் எல்லையை (யோகத்தில்) மஹர்லோகம் காட்டுகிறது. தேக உணர்வின்றி நிஷ்டையில் நமது உள்ளம் நம்முடன் உறவாடும் நிலை இது. இதற்கு மூலமான "உயிர்" என்பது அநாதியானது. அது என்றும் இருக்கும் இறைவனின் மகாசக்தியாகும். மஹர்லோகம் தான் யோகத்தில் "துரியநிலை" என்று வர்ணிக்கப்படுகிறது. இது சாதாரண மனித முயற்சியில் அடையக் கூடியது அல்ல. மனித முயற்சிக்கு மேலாக இறைவனால் தரப்படும் ஒரு சித்தியாகும்.



# அமரகவியின் திருவாக்கு

தத்துவஞானபோதம் எளிதன்று. பக்குவ ஞானியின் செயல் அது. **அபரோக்ஷ ஞானம்** என்பார் அதை. **தன்னில் புகட்டும் ஆத்மகலை.** அமரகவி இந்நாள் திருமூலன், போகர் மற்றும் சித்தர் பலமுறை கையாண்டு இந்நூலின் தத்துவ விளக்கம் தர உணர்த்தும் பதினாறு திருப்பாட்டுகள் இவை. அருள் வாக்கின் உபதேசம். **"ஸ்ரீவித்தை"** தந்திடும் வரம்.

43. **பிறப்பில் இறப்புண்டு. இறப்பில் பிறப்பில்லை**
**கண்டுகொள் இதன் இரகசியம்**
**உயிர் இறைவன் கதி, மும்முடிச்சு**
**யோனி, கற்பம், பிறப்பு.**

பிறந்தவன் இறப்பதுண்டு. இறந்தவன் பிறக்க வேண்டும் என்பதில்லை. இதன் உட்பொருள், **மனிதப் பிறவி** எடுத்ததும், (அதாவது பூமியில் நாம் தாய் வயிற்றிலிருந்து வெளி வந்ததும்) கர்ப்பத்தில் நமக்கிருந்த **பெருந்தபோ சக்தி** மறைந்து மூச்சு, பேச்சு மற்றும் உடல் தத்துவமாக மாறி, நாம் ஐம்பூதங்களின் பிடியில் அகப்படும்படியான கர்மப்பயனைப் பெற்று விடுகிறோம். இதனால், இறைவனைக் காணும், உணரும் **தபோ நிஷ்டை** என்ற நிலை மறைந்துவிடுகிறது. இதனை மீண்டும் பெறுவதே யோகச்சாதனை அல்லது முக்தி எனப்படுகிறது. இந்த முக்தி நிலையைப் (சமாதி உணர்வை) பெறும் **"யோக மார்க்கமானது"** நமது மனநிலை, உடல் தத்துவம், மூச்சு, பேச்சு மற்றும் உணர்வற்ற தேக நிலையை ஒத்தது. இதுவே, இறப்பில் மனிதன் கிடக்கும் நிலையைப் போன்றதாகும். ஆனால், உயிர் உடலைவிட்டு நீங்காமல் இருக்கும். இதைத்தான், **தூங்காமல் தூங்கி** அல்லது **சாகாமல் செத்து"** இருக்கும் நிலை – என்று **பத்திரகிரியார்** தனது அருட் புலம்பலில் விவரிக்கிறார். எனவே, இறப்பை ஒத்த இந்த நிலை நமது விழிப்பில் அல்லது பிறப்புத் தத்துவத்திலேயே இருக்கிறது என்றும், இந்த இறப்பு நிலையை ஒத்த **தபோ நிஷ்டை** அல்லது **சமாதியை** நாம் யோக மார்க்கத்தில் அடைந்துவிட்டால் மீண்டும் "பிறப்பு" என்ற அவஸ்தை அவனுக்கு இருக்காது. எனவே, இங்குப் பிறப்பு எனப்படுவது நாம் தாய் கர்ப்பத்திலிருந்து வெளிவரும் செயல் அன்று. மாறாகச் சாதாரண மனிதன் பிறந்ததும் இயற்கையின் நியதிகளான ஆயுள், மூச்சு, பேச்சு, "ஐம்புலன்கள், தேகத்தின் இயக்கம், மனம், புத்தி முதலியவற்றின் செயல்கள். இச் செயல்களுக்கு, (மாயையின் பிடியில் அகப்படும்தன்மை) உட்பட்டிருக்கும் நிலையைக் குறிக்கிறது. எனவே, **"தபோ நிஷ்டை"** என்ற சமாதியைத்

தாண்டின நிலையைப் பெற்றுவிட்டவன் மீண்டும் மண்ணில் **"ஞானியாக (அ) சித்தனாக (அ) மகானாகத்தான்"** அவதரிப்பான். இப்படிப் பிறவிச் சித்தனாகப் பிறந்தவருக்குப் "பிறப்பு" என்ற மேற்கூறிய கர்மவினையின் பயனான சலனங்கள் கிடையாது. சுருக்கமாகக் கர்ம பந்தமே இல்லாமல் இருப்பவன்; பிறப்பை வென்றவன். அவன் மனித வடிவில் பிறவி எடுத்தாலும் பிறப்பு – என்பதன் குறைபாடுகள் இல்லை. இதுவே பிறப்பு இறப்பு என்பதன் தத்துவ விளக்கம். இதில் உயிர் என்பது இறைவனின் கதி – **பிரணவமே** அதுதான். அதற்குப் பிறப்பு, ஜாதி, மதம் என்ற பேதம் இல்லை. மனிதனுக்கும் மாக்களுக்கும், இன்னும் இதர உயிர் இனங்களுக்கும்கூட உயிர் ஒன்றேதான். உருவத்தில், அறிவில் வேறுபடுகின்றன. இதுவும் மாயையின் (அ) படைப்பின் தத்துவம் ஆகும்.

44. **பிறப்பில் இறப்பு ஜாக்கிரதம் கொண்டகோலம்**
**விண் அதில் சொல். அகாரம் சிதைய**
**மண் செய்த கோலம் இது**
**சடலம் தாங்கி.**

பிறப்பில் இறப்பு என்ற பெரும் புலனடக்கம். அதாவது, உயிர் இருந்தும் உயிரற்ற சவம் போல் இருக்கும் **"யோகச் சமாதி"** யான பிரும்ம நிஷ்டையை **"ஜாக்கிரதம்"** எனப்படும் **"விழிப்பு"** மறைத்து இருக்கிறது. விழிப்பு, கனவு, தூக்கம், துரியம் என்கிற நான்கு பெரும் நிலைகளில் விழிப்பு எனப்படுவது மனிதன் சுய நினைவுடன் இயங்கிக் கொண்டிருக்கும் சமயமே. அந்நிலையில், புலனடக்கத்தை வென்றுவிட்டால் இறப்பை உயிருடன் தொட்டுவிடலாம். எனவே, விழிப்பே (ஜாக்கிரதம்) சமாதி நிலையான யோக நிஷ்டையை மறைத்துக் கொண்டிருக்கிறது. சொல் கடந்த அந்த நிலையில் **"அகாரம்"** என்ற தத்துவம் அருள் வாக்காக மாறுகிறது. எனவே, "மண்"என்ற பிருதிவித் தத்துவம் புலன்களாகச் செயல்பட்டு மாயையாக நமது ஆன்மிக உணர்வை, வேகத்தை, மறைத்துவிடுகிறது. இதனை மீறுவதே "யோகம்" (அ) தபசு என்பது. பிரிதிவி தத்துவத்தை இன்னும் விவரமாக மற்றோர் இடத்தில் கூறப்பட்டுள்ளது.

45. **மத்திமை இரண்டின் பிளவு**
**கீழ்மேல் வாசி**
**அமரன் சித்தி "தெய்வதம்"**
**கீழும் மேலும் சரிசமம்.**

**"மத்தியமா"** என்ற ஆதிசங்கரரின் **"சௌந்தர்ய லகரி"** என்ற கிரந்தம் அழைக்கும் நமது பேச்சு அதன்மூலமான எண்ணமாக மாறிப் பின்னர் மேலும் பெரும் வாக் மௌனமாகிப் **"பரா"** என்கிற பெரும் சூட்சும நிலையை

அடைவதைக் குறிப்பிடுகிறார். இதில் "மத்தியமா" என்பது நமது வெளிப் பேச்சு. நமது பேச்சு, கீழ்–மேல், மேல்–கீழ் என்ற இருவகையானது. தேக மூச்சுக் காற்றின் செயலினால் ஏற்படுவது. இந்த இரண்டு மூச்சும் ஒன்றுக்கொன்று சரிசம நிலையில் இணைந்து செயல்படும் யோகச் சித்தியைத்தான் "தைவதம்" என்று அழைக்கின்றோம். உள், வெளி இரண்டு மூச்சும் சரிசமமான நிலையை அடைந்த பெரும் யோகநிலை இது. அமரகவியின் சித்தி இதுவே. பெரும் அடியார்களான "திருஞானசம்பந்தர்" போன்றவர்கள் அடைந்த பெரும் பேறு இது. "கேவலக் கும்பகம்" என்ற நிலையாகப் பதஞ்சலி யோகச் சூத்திரம் இதனை வருணித்திருக்கிறது.

46. பெரும் சித்தி அது
"மேரு" தந்திடும் போகம்
அகாரம் தோன்றில் உகாரம் மறையும்
அதுவே சித்தாந்த முக்தி.

மேரு சிகரம் என்று ஸ்ரீவித்யையில் குறிப்பிடப்படும் பெருநிலைதான். இதனை அளிக்கவல்லது கேவலக் கும்பகம் என்ற சித்தி என்று யோக நூல் இதனை வருணிக்கிறது. இதுவே ஸ்ரீவித்யையின் கடைநிலை அல்லது பூர்த்திக் கட்டம் "அகாரம்" என்ற அருள்வாக்கு தோன்றினால் உகாரம் எனப்படும் ஜீவதத்துவம் ஒடுங்கியது" – என்றபடியான "சித்தாந்த முக்தி" இதுவே. சித்தாந்த முக்திக்கு "மகரத்வஜம்" என்ற ஓர் பெயருமுண்டு. அப்பர், சம்பந்தர் முதலிய நால்வரும் மற்றும் திருநீலகண்ட நாயனாரும் அடைந்த பெரும் தவநிலையாகும். இந்தச் சித்தாந்த முக்தி என்பது. "மஹத்" என்ற பெரும்நிலையாக வருணிக்கப்படும் ஸ்ரீவித்யை உபாசனை இங்குதான் பூர்த்தியடைகிறது.

47. ஆதாரம் ஆறும் ஊமை எழுத்து
விண் அதில் சொல்லாகும்
கர்ப்பம் தந்தது இரண்டும்
ஊமை பேசச் சவம் உயிர் பெரும்.

நமது தேகத்திலுள்ள ஆறு ஆதாரச் சக்கரங்களான மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா என்ற இவை யாவும் ஓங்காரமான பிரணவ எழுத்தின் வழிநிலைகளாகும். "விண்" எனப்படும் ஆகாசம் (பஞ்சபூதங்களில் ஒன்றாகும் இது) என்ற தத்துவமே இதில் நமது பேச்சாக எண்ணமாக மாறுகிறது. நாம் தாய் கர்ப்பத்திலிருந்து இதனைப் பெற்றோம். ஊமை எழுத்து என்ற பிரணவ நாதம் உள்ளிருந்து கிளம்ப (யோகச் சக்தியில் (அ) சாதனையில் ) "சவம்" எனப்படும் மூச்சு பேச்சு அற்ற சரீரத்தின் நிலைக்கு வந்துவிடும் நமது தேகமானது (சமாதியில்)

உயிரை வெளிச் செல்லாது தடுத்து நிறுத்தும். அதாவது இறந்தவன்போல நமது உடல்நிலையை மாறிவிடும். சமாதி நிலையில் மூச்சு முதலியவற்றின் தேவையின்றி உயிரே (பிரம்ம தேஜஸ்) உடலை மீண்டும் சுயநிலைக்குக் கொண்டு வரும் ஆற்றல் படைத்ததாக இருக்கும். மேலும், பெருநிலைகளான "தபோநிஷ்டை" சுவாசப்பந்தனத்தையும் தனது லக்ஷணமாகக் கொண்டது. எனவே, "இறவாமல் இறந்து கிடக்கும்" யோக நித்திரையில் மூச்சுக்கு வேலையில்லை, எண்ணத்திற்கு வேலையில்லை – இவையாவும் உயிருடன் ஒன்றாகிவிடும். "அகஸ்தியர், திருமூலர்" போன்ற தவச் சிரேஷ்டர்கள் அனுபவித்த பெருந்தவநிலை இது.

**48. இந்நூலின் திருவாக்கு அதுவே**
**வைகரியின் சித்தி அது**
**ஆதாரம் ஆறும் கடந்த நிலை**
**அமர வாக்கு "ஸ்ரீம் தனம்"**

இந்நூலில் காணப்படும் "திருவாக்கு" அனைத்தும் அவ்வித "பிரம்ம நிஷ்டையில்" உதித்தவையாகும். இவை ஸ்ரீவித்யா உபாசனைத் தத்துவங்களில் "வைகரி" சித்தி என்றழைக்கப்படும். இந்நிலையில்தான் யோகிகள் மேற்சொன்ன ஆறு ஆதாரச் சக்கரங்களின் செயல்கள் மற்றும் ஆதிக்கத்தை அடக்கிக் கடந்து நிற்கிறார்கள். இங்குதான் "ஸ்ரீம்" எனப்படும் மகாலக்ஷ்மியின் அட்சரத்தின் அருள் பிரவாகமாக "அமரவாக்கு" உதிக்கின்றது. நம்மாழ்வார் போன்ற பெரும் அடியார்கள் கண்டு அனுபவித்த நிலை இது. சாமான்ய மனிதர்களுக்கு அன்று. மேலும், இறைவனின் பேரருளால் ஏற்படும் நியதி இது.

**49. சொல் உகாரத்தில் ஒடுங்க**
**சுழுமுனை எழும்**
**கேசரியின் தத்துவம்**
**கஜானனன் புகட்டும் கலை**

நமது "எண்ணம்–பேச்சு" இவை மூச்சில் ஒடுங்கும் பெரும் யோக நிலையில் "சுழுமுனை" என்ற நாடி எழுகிறது. "கேசரி" தத்துவம் என்ற சித்தி பெற்று வளர்ந்து ("திருமேனி" என்றழைக்கப்படும்) பிரம்ம நிஷ்டையில் கூடி, நாம் தெய்வீகமான தேகம் பெறுவது இங்குதான். "கஜானனன்" என்றழைக்கப்படும் மகாகணபதியே இக்கலையைப் புகட்டும், அருளும் நாயகனாம். தெய்வீக உடலைப் பெற்றால்தான் பிரம்ம உபதேசம் கிட்டும். இறைவனின் ஞானபோதனையும் கிடைக்கும்.

50. **ரந்திரம் திறக்கும் அதில்**
**மேல்மூச்சு, கீழ்மூச்சு இரண்டும் மையம் =கண்டு**
**ஓங்கும் அதில் சுழுமுனை**
**தேவ வாக்கு**

எனவே, மேற்கூறிய "**கேசரிச் சித்தி**" என்ற இந்நிலையில்தான் ஸ்ரீமகாகணபதியின் அருளினால் "பிரம்மரந்திரம்"என்ற நமது உச்சிஇணைப்பு திறக்கும். இங்கு மேல்மூச்சு, கீழ்மூச்சு இரண்டும் மையம் காணும் சமயம் "**சுழுமுனை**" எழும். இவை யாவும் சித்தித்தால்தான் "**தேவவாக்கு**" என்ற இறைவன் சொல் உதயமாகும். "**கேசரிச் சித்தி**" என்பது புலனடக்கத்தில் கண் திறந்திருந்த நிலையிலும் எதனையும் காணாத நிஷ்டை ஆகும்..

51. கர்ப்பம் தந்தது "சொல்"
மத்திமை என்பார்
இதன்வழி சவ நடை
உயிர் "கர்ப்போட்டம்" நீங்க.

மத்தியமை என்றழைக்கப்படும் நமது சொல் (அல்லது) வெளிப்பேச்சு பிறப்பில் நமக்குக் கர்ப்பத்தில் கிடைத்த ஒரு சக்தி, பேச்சு என்ற நமது செயல் ஒரு விதச் சக்தியாகும். பேசப் பேச, நமது ஆயுள் குறைகிறது. எனவேதான், "மௌனம்" என்ற விரதத்தை அனுஷ்டிப்பது நமது சக்தியைச் சேமிக்கவே. ஆகவே, பேச்சு நம்மை இறப்பில் கொண்டு வந்துவிட்டுவிடுகிறது. (சவநடை என்பது இதுவே) "கர்ப்போட்டம்" என்ற நமது உயிர் இருக்கும்வரை இப்பேச்சு இருக்கும். உயிர் உடலைவிட்டு அகன்றால் பேச்சு தானாக நின்றுவிடும். உயிருடன் இருக்கும்போதே பேச்சையும் அதன் மூலத்தையும் அறவே ஒழிப்பதுதான் யோகம் என்பது.

52. சோடசக் கலை ஸ்ரீசக்ர சித்தி
தந்திடும் "சாந்திக் கலை"
விஞ்ஞான பீடம்
அமரன் சித்தி

"**சோடசக்கலை**" என்று அழைக்கப்படும் சித்தியானது ஸ்ரீசக்கர உபாசனையின் எல்லையாகும். (குறிக்கோளும்) இவ்வழியில் சாந்திக்கலை என்ற ஒரு சிறு சித்தி உண்டு. சாந்திக்கலை என்பது வெறும் மூச்சையடக்குவதால் ஏற்படும் சிறு ஆனந்தம். ஆனால் இதுவன்று யோகத்தின் எல்லை (அ) குறிக்கோள். "விஞ்ஞான மயம்" என்ற கோசத்தை (ஸ்ரீபகவத்கீதையில் பிரசித்தமாகப் பேசப்படும் சித்தி) அடையவேண்டும்.

அங்குத்தான் பிரபஞ்ச இரகசியங்கள், சிருஷ்டித் தத்துவம் இவையாவும் "ஞான ஒலியாகக்" கிடைக்கும். இறைவன் அந்தர்யாமியாக நமக்குள் விளக்குவதும் போதிப்பதும் அங்குதான். கோடியில் ஒருவன்தான் அதனை அடைவான்.

53. **ஈசன் இருப்பிடம் ஞான ஒலி**
**ருத்திரன் காவல் அதற்குப்**
**பேச்சில் மூச்சு அதுவே**
**தாண்டினேன் அதைத் "திருவாக்கு"பெற்று.**

"**ஞான ஒலி**" உதிக்கும் இந்த "**விஞ்ஞான மயம்**" என்ற பெரும் தபோநிலைதான் ஈசனின் "வாசஸ்தலம்" ஆகும். இதற்குக் காவலாக இருப்பவன் "**ஸ்ரீருத்ரன்**" ஆவார். அதாவது, பேச்சிலே நமது மூச்சு கலந்துவிடும் பெரும் தவ நிலைக்குச் செல்வதுதான் இந்நிலை. தெய்வ அருளால் மட்டுமே இது மனிதனுக்குச் சாத்தியமாகும். ஆனால் சுய முயற்சிக்கும் அப்பாற்பட்ட பெரும் "**தபோநிலை**" இது. இறைவனின் அருளின் பேரில் நடப்பது.

54. **சொல் மந்திரம் அதில்**
**மூச்சு பேச்சில் ஒடுங்க**
**அகார சித்தி, ஆதித்தன் கலை**
**அதுவன்றி இந்நூல் ஏது "நிஜானந்த போதம்".**

இப்பெருந் தவநிலை எய்தியதும் "**நமது சொல்லே மந்திரமாகி**" செயல்படும். பிரம்ம நிஷ்டையான இங்கு மூச்சு பேச்சில் ஒடுங்கி நிற்கும். இதுவே "**அகாரச் சித்தி**" அல்லது "**ஆதித்தன் கலை**" என்று அழைக்கப்படுகிறது. இந்நிலையை அடைந்துதான் "**நிஜானந்தபோதம்**" என்ற இந்த மகா கிரந்தம் (நூல்) எழுந்தது.

55. **துரியம் "ஆத்மபோதம்"**
**வேதம், உபநிஷத் கண்டவழி**
**ஜாக்கிரதம் கொள்ளும் விந்தை**
**உயிர் அதில் "சுவப்ன தேகம்"**

"**துரியம்**" என்றழைக்கப்படும் பெரும் யோக நித்திரையில்தான் "**ஆத்மபோதம்**" இறைவன் அருளால் எழும். அடியார்கள், யோகிகள், சித்தர்கள் யாவரும் அந்நிலையில்தான் தங்கள் ஞான உபதேசங்களை உலகிற்குத் தந்தனர். சுருக்கமாக "**வேதம், உபநிஷத்** இவை யாவையும் துரியம் என்ற தவநிலையில்தான் எழுதப்பட்டன. இத்துணை மகிமை பொருந்திய

"துரியம்" என்ற பிரம்ம நிஷ்டை கூடும் நிலை வேறு எங்குமில்லை. நமது விழிப்புணர்ச்சியில் ஒளிந்து கொண்டிருக்கிறது. இதை மறைத்திருப்பது நமது புலன்கள், மூச்சு, பேச்சு, தேக இயக்கம், சுயநினைவு என்றவைதான். "துரியம்" என்ற இதில் நமது "உயிரானது" ஸ்வப்ன தேகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும். விழிப்பில் கனவை இறையுணர்வில் காண்பது இதுவே என்றால் அது மிகையாகாது. மூன்று மண்டிலம் பத்து வாயுக்களும் நமக்குள் அடங்கி செயலற்றுக் கிடக்கும் நிலையிது. இந்தத் துரிய நிலையைத்தான் "மஹர்லோகம்" என்று அழைக்கிறோம்.

**56. மேல்நடை, நித்திரை உலகம்,**
**சடலம் அதன் காப்பு**
**விடாது, என்றும் தடுத்து ஆளும்**
**"யோக நித்திரை" ஆண்டவன் கிருபை.**

எனவே, பகலில் நமது விழிப்புணர்வில் உயிரானது கனவுத் தேகத்தில் சஞ்சரிக்கும் நிலை துரியம். ஆனால், இதே உயிர் இரவில் தூக்கத்தில் (நித்திரை) நிற்கிறது. இது வெறும் நித்திரை, யோக நித்திரை அன்று. இதன் வேலை நமது பிண உடலைக் காத்துக் கொண்டிருக்கிறது. காலையில் மீண்டும் நினைவுகொண்டு நித்திரையிலிருந்து நம்மை எழுப்புகிறது. எனவே, இரவில் ஆழ்ந்த நித்திரைக்குச் செல்லும் நமது உயிர் பகலிலே விழிப்புணர்விலிருந்து பிரிந்து தியான நிலையின் வேகத்தில் இருப்பதே "துரியம்" என்பது. அதாவது, இறப்புக்கு இணையான நிலையைத் தாண்டிப் பெரும் "யோக நித்திரை"யான "துரியம்" என்ற நிலையை அடையவேண்டும். ஆகவே, "யோக நித்திரை" என்ற இந்நிலை இறைவனின் கருணையினால் மட்டுமே அடையக்கூடிய ஒன்றாகும். "அவனருளால் அவன் தாள் வணங்கி" என்பதற்கேற்ப, அவன் செயலில் சாதிக்கப்பட வேண்டிய ஒரு சாதனை இது என்பது உறுதி. சுருக்கமாகக் கூறினால் விழிப்பில் கனவுநிலை துரியம் எனப்படும். கனவுநிலை இருவிதமாக உள்ளது. சாதாரண மனிதனின் கனவுநிலை மதிப்பில்லாதது. மகான்களின் கனவு தெய்வீகமானது; ஞானத்தைத் தருவது, சித்திகளைத் தருவது, சக்தி வாய்ந்தது. அதுவே அவர்களது விழிப்பில் துரியம் ஆகும்.

**57. சடலம் என்றும் அறாது,**
**ஜீவ கதி**
**சுயம்பு அதில் உன் வடிவம்**
**பெற்றபின் நீ அமரன்.**

**58. தவத்தின் சிறப்பு அதுவே**
**உலகம் காணாது உன் நிலை,**
**இறைவன் வாக்கு இந்நூல்**
**போற்றுவார் பலர் பிறந்தால்.**

"சடலம்" என்ற இந்த ஸ்தூல தேகம் இயங்குவது ஜீவ கதியாகும். ஜீவகதி என்பது காலத் தத்துவத்திற்குட்பட்ட நிலையில் பஞ்ச பூதங்களின் ஆதிக்கத்திற்குட்பட்ட மானிட உடல் தத்துவமாகும். எனவே, மீண்டும் மீண்டும் எடுக்கும் நம் பிறவிப் பெருங்கடலில் உயிருக்குத்துணையாக ஓர் உடல் கிடைக்கிறது. "பிறப்பு–இறப்பு" என்ற காலச் சக்கரம் மனிதன் முக்தியடையும் வரை நடந்துகொண்டேயிருக்கும். அதாவது, தாய் கர்ப்பத்தில் நமது உடலுக்கு "உயிர்" நான்காவது மாதம் கிடைக்கிறது. எனவே, நான்காவது மாதம் வரை கருவில் வளரும் உடலுக்குச் "சுயம்பு" என்று பெயர். அதாவது, வெளியிலுள்ள மூச்சு பிராணவாயுவின் துணையின்றித் தானாகவே தன்னை வளர்த்துக்கொள்ளும் இறையருளுடன் இணைந்துள்ள தேகமாகும். பஞ்ச பூதங்களின் ஆதிக்கத்திற்கு அப்பாற்பட்ட இதனை நாம் யோகச் சாதனையில் பெறுவதே "முக்தி" எனப்படும் .அதுவரை ஐம்பூதங்களினால் காக்கப்பட்டு அழியும் மனிதனது உடலுக்குச் "சடலம்" என்று பெயர். பெரும் யோகத் தேகம் கிட்டும்வரை நடக்கும். அதற்குப்பின் மனிதன் "அமரன்" ஆகிவிடுகிறான். ஆகச் சுயம்புத் தேகம் பெறுவதே யோகம் என்பது தவத்தின் பெருமை. இந்நூல் இறைவனின் திருவாக்காகும். உலகம் இதனைப் போற்றுவது அதன் கடமை என்பது உறுதி. மக்கள் படித்துப் பயன்பட வேண்டும் என்பதே குறிக்கோள்.



# தத்துவமசி விமர்சனம்

59. பெரும் தவம் "திருமூச்சு" பெறல்
"ஆக்ஞை" அதற்குத் தடை
ரேசகம், பூரகம், கும்பகம் மூன்றும்
சர்வ சிருஷ்டி அதன் மர்மம்.

"திருமூச்சு" என்பது நமது உடலிலுள்ள மூச்சு, பேச்சு என்ற இவையாவும் பிறந்த இடம். அதுவே **ஆதிசக்தி** எனப்படும். நாம் இதனைக் கர்ப்பத்தில் பெற்றிருந்து பூமியில் பிறந்தவுடன் இழந்துவிட்டு வெறும் மூச்சுக் காற்றைப் பெற்று விடுகிறோம். உள், வெளிமூச்சும் அடக்கப்பட்ட நிலையிலுள்ள மூச்சும் முறையே ரேசகம், பூரகம், கும்பகம் எனப்படும் இவற்றைத் தடுத்து மீண்டும் "**திருமூச்சு**" தனைப் பெறுதலே "**யோகம்**" அல்லது **தவம்** என்பது. சர்வ சிருஷ்டிக்கும் இதுவே சித்தாந்தம். இரகசியம் என்பது அதாவது, கர்ப்பத்தில் பிராணவாயு சுத்தமான நிலையில் பூரணமாகக் கிடைக்கிறது. பிறந்ததும் புலன்கள் இதனைத் தடுக்கின்றன. மனம், புத்தி, சித்தம் என்பவை பூரணமான அளவு உயிர்ச்சக்தியை நாம் பெறாமலே செய்துவிடுகின்றன. எனவே, இவற்றை அடக்கி யோக நித்திரையில் பூரணமான சுத்தமான பிராணச் (பரா) சக்தியைப் பெறுவதே யோகம் என்பது.

60. காயம் இரண்டு, சுயம்பு, கர்ப்பம்
கர்ப்பம் வெளிநடை மூச்சின் போக்கு
யோகம் அதன் லயம்
காயம் அதில் சுயம்பு.

உடம்பானது இருவகைப்படும். "**சுயம்புத் தேகம்**" "**கர்ப்பத் தேகம்**" என்பது. இதில் தாய் கர்ப்பத்திலே வந்து சேர்ந்த நமது ஸ்தூல சரீரமானது "**ஆக்ஞா**" என்ற ஆதாரச் சக்கரத்தின் ஆதிக்கத்தினால் உண்டான உள்மூச்சு, வெளிமூச்சு என்ற மூச்சுப் போக்கும் "**கும்பகம்**" என்ற மூச்சையடக்கிய நிலையும் ஆக மூன்றுவித சுவாச காரியங்களுடன் கூடியது. அதாவது, பிராணச் சக்தியானது மூச்சுக் காற்றாக விரயமாகிக் கொண்டிருக்கும்படியான தேகத்தைப் பெற்றிருக்கிறோம். யோகம் என்பது இதனைத் தடுத்து வெளிச்செல்லும் பிராணச் சக்தியை உள்ளிழுத்து வைக்கும் "**லயம்**" எனப்படும் நிலையை அடைவதுதான். அந்நிலையில், அதாவது, பிறப்பினால் வந்த தேகக் குற்றங்களான இவ்வித மூச்சு, பிராண நஷ்டம் மற்றும் இதரத் தேகச் சலனங்களைத் தடுத்து இவற்றை வெளிச் செல்லாமல் உள்ளே லயமாகச் செய்யும் "**தவநிலையில்**"தான் நமது உடல் "**சுயம்புத் தேகம்**" என

அழைக்கப்படுகிறது. அதாவது, கர்ப்பத்தில் நாம் இருந்த நிலைக்கு மீண்டும் சென்று **திருமேனி** என்கிற தெய்வீகத் தேகத்தைப் பெற்று விடவேண்டும். இது தவச் சிரேஷ்டர்களின் சித்தியாகும். எனவே பிரணவ நாதத்தினைக்கொண்டு யோகத்தில் நமது முதல் (அ) காரிய தேகத்தை மீட்பதே தத்துவமஸி விமர்சனமாகும்.

**61. தவத்தின் சித்தி "ஞான ஒலி" பெறல்**
**"காய சித்தி" அமிர்தகலை நாடல்**
**மூத்தோர் சென்ற வழி**
**நானும் இன்று.**

தவத்தின் **"சித்தி"** அல்லது **சிகரம்** என்பது **"ஞான ஒலி"**யைப் பெறுதல்தான். ஞான ஒலி என்பது இறைவனின் போதத்தை நமது மனத்தில் கேட்பதுதான். அதாவது, இறைவனே நம்முடன் அந்தர்யாமியாக நமது உள்ளத்தில் உறவாடும் பெருந்தவ நிலையாகும். இதற்குக் காயசித்தி என்ற நிலையை அடையவேண்டும். **காயசித்தி** என்பது இயற்கையாகிய பஞ்சபூதங்களின் ஆதிக்கத்திற்குட்பட்ட நமது தேகத்தை யோகத்தினால் பண்படுத்தித் தெய்வீக உடலாக மாற்றிவிடுவதே யாகும். **"காயசித்தி"** என்பது **"அமிர்தக் கலை"** யை (பிரம்ம சக்தி) நாடுவதுதான். அமிர்தக் கலை என்பது ஐம்பூதங்களின் உதவியின்றிச் சுயம்புவாக இறைவனின் கருணையினால் பெறும் பிராணச் சக்தியாகும். மூச்சு, பேச்சு யாவும் அடங்கிய நிலையில் நமது தேகத்தில் யோக நித்திரையில் புகும் **தெய்வீகச் சக்தி** இதுவே. சிரஞ்சீவித் தன்மை பெற்றவர்கள் பெறும் யோகச்சக்தி இது. பண்டைக்கால மகரிஷிகள் கண்ட வழி; கடைப்பிடித்த வழி. இந்த மகாசித்தியை அருளும் தெய்வம் ஸ்ரீமகாலக்ஷ்மி ஆவாள். ஸ்ரீகணநாதனின் செயலால் இது நடக்கிறது.

**62. அதோமுகம் உன் தாழ்வு**
**கர்ப்பம் கொண்ட கோலம்**
**மீறுவது கடினம்**
**ஸ்ரீவித்தை அதன் எதிர்ப்பு**

நமக்குள் "கீழ்நோக்குப் பிராணச் சக்தி சஞ்சாரம் இயற்கையின் செயல். இதுவே மாயையின் பிரதிபலிப்பு. இதை மீறுவதுதான் **யோகம்** ஆகும். கர்ப்பத்தில் பெற்ற இந்த தேகக் குறையை நாம் நீக்கி மேல்நோக்குப் பிராணச் சஞ்சாரத்தைப் பெறவேண்டும். இதுவே தத்துவம். ஸ்ரீவித்தை என்ற இயற்கை அன்னையின் மாயை நம்மைத் தடுத்துப் **"புலனடக்கம்"** இல்லாமல் செய்கிறது. எனவே, ஸ்ரீவித்தையின் குறிக்கோள் இயற்கையின் இந்த மாய வலையைத் தாண்டிச் **"சித்தத்தை யடக்கி"** அடையும் தபோ நிஷ்டைதான். ஸ்ரீவித்தையில் கடை அம்சம் இதுவே. அங்குதான் **"பிரம்ம**

**உபதேசமாக"** இறைவன் நமக்குள் அருள் வாக்காக விளங்கிப் பரிபூரண ஞானத்தை அளிக்கிறான். "தேவ வாக்கான" இதனைக் கேட்பதே ஸ்ரீவித்தையின் பூர்த்திக் கட்டமாகும். (**"சோடசக் கலை"** என்ற சித்தி)

**63. தேகநடை நீ அறியாய், கேள்**
**சுக்லம் காப்பது பிணம்**
**அமிர்தக் கலை அதன் சத்து**
**சுயம்பு நாடி.**

நமக்குள் இருக்கும் **"சுக்கிலம்"** என்ற வீரியம் மகத்தான சக்தி கொண்டது. ஸ்தூல தேகத்தில் (அ) ஜட தேகத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஆதாரச் சக்தியான உயிரின் பலம் சுக்கிலத்தினால்தான் ஏற்படுகிறது. இந்த ஜீவசக்தியைக்கொண்டு யோகத்தினால் "நமது தேகத்தைத் தெய்வீகமாக்கி (சுயம்பு) விருத்தி செய்யவேண்டும். எனவே, பிணமாகும் இந்தச் சரீரம் தவத்தினாலும் யோகத்தினாலும் தெய்வீகமாகவேண்டும். இப்படிச் செய்த சரீரத்தில் எங்கும் **"பிரம்ம சக்தியான"** இந்தச் சுக்கிலம் பரவி இருக்கும். இதுவே **"அமிர்தக் கலை"** என்றும் **"காய சித்தி"** என்றும் அழைக்கப்படுகிறது. மேலும், இந்நிலையில்தான் பஞ்ச பூதங்களின் உதவியின்றி மூச்சு, பேச்சு என்பவை அடங்கிய நிலையிலும் யோகிகளுக்குத் தெய்வீகச் சக்தியாகப் பெரும் தேஜோ சக்தி (அ) அமிர்தக் கிரணம் கிடைக்கிறது. உயிருக்கு ஆதாரமான இஃது இறைவனின் சக்தியாகும்.

**64. சுயம்பு இயற்கை மனம்**
**பேசும் உள்ளம்**
**மேல்நிலை பரமன்**
**உன்னில்அந்தர்யாமி**

"சுயம்பு" என்பது தெய்வீகச் சரீரத்தில் உள்ள **"இயற்கையான மனம்"**. கர்ப்பத்தில் இருக்கும் இந்த இயற்கை மனம், பிறந்தவுடன் மனிதனின் கர்ம வினைக்கீடாக மாறிப் புலன் வழிகளில் சென்று மாயையின் அடிமையாகிவிடுகிறது. இதனை வெல்லுவதே **"யோகம்"** (அ) **"தபசு"** என்று அழைக்கப்படுகிறது. அப்படிச் சித்தத்தையடக்கிச் செய்யும் பெருந்தவநிலையில் மனமானது புனிதமாகித் **"தூய உள்ளமாகிறது"**. அதாவது, **"பேசும் உள்ளமாக"** மாறிவிடுகிறது. இதுவே தவத்தின் சிகரம். இதற்கு மேல் நிலையில் "பரமாத்மா" ஒருவன்தான் இருக்கமுடியும். ஸ்ரீவித்தையில் பெரும் யோகநிலை என்று கூறப்படும் இங்குதான் இறைவன் நம்முள் பேசுகிறான்.

**65. தத்துவம் 96உம் அதில் அடக்கம்
பெற்றேன் அதன் விமர்சனம்
ஞானஒளி தந்த வரம்
இந்நூல் அதன் பெருமை**

இந்தப் புலனடக்கத்தில் பிரம்ம நிஷ்டையில் காணும் "**பேசும் உள்ளத்தில்**" - **96 தத்துவங்களும்** அடக்கம் என்பது உண்மை. அந்நிலையில்தான் "**ஞான ஒளி**" யானது நமக்குக் கிடைக்கிறது. இறைவனின் பேரருளால் மட்டுமே இது கிடைக்குமேயன்றி மனிதனின் சுய முயற்சியில் மட்டும் காணும் வெற்றி அன்று. அதுவே யோக நித்திரை எனப்படுவதாகும்.

**66. நீ பிறந்தது மண்ணில்
மூச்சின்றி அது ஜடம்
அப்பு தத்துவம் அது
மூச்சு, பேச்சு இரண்டும்**

"**மூச்சு**" நின்றுவிட்டால் சரீரம் பிணமாகிவிடுகிறது. மூச்சும் பேச்சும் இரண்டும் இணைந்த நிலையே "**அப்புத்**" தத்துவம் எனப்படும். அதாவது, சித்தம் என்கிற நமது சிற்றறிவின் வேகம் பிரிந்த நிலையில் இருக்கும் ஏகாக்ர (ஒரு நிலைப்பட்ட) நிலையான எண்ணமே **அப்புத்** தத்துவமாகும். அதாவது, எண்ணம் பேச்சாகி மாறிச் செயல்படுகிறது. இதனைத் தடுத்துச் சித்தம் சேராமல் எண்ணத்தை ஒருநிலைப்படுத்திய பெருந்தவநிலை இது.

**67. பூரகம் "வாயு தாரணை
ரேசகம் "அக்னிக் கலை"
இரண்டின் மையம் ஆகாயம்
அதில் சொல் அடக்கம்**

"**பூரகம்**" எனப்படும் மூச்சை உள்ளிழுத்தல் (பூரித்தல்) என்பது வாயு தாரணை எனப்படும் செயலாகும். ரேசகம் எனப்படும் மூச்சை வெளிவிடும். (ருத்ரக் கலை) செயல் "**அக்னிக் கலை**" ஆகும். இவையிரண்டின் மையம் "**ஆகாசத் தத்துவம்**" எனப்படும். இங்குத்தான் "**சொல்**" அடங்குகிறது.

**68. சொல் விண்ணின் சதி,
திருமூச்சு அதில் ஒடுக்கம்**

**மந்திரச் சித்தி எழுப்பும் அதை**
**நான் கண்ட இன்பம்.**

நமது **"சொல்"** என்பது **விண்** அல்லது **ஆகாசம்** எனப்படும் தத்துவமானது நம்மை மாயையில் தவிப்பதற்காகச் செய்யும் சதியாகும். எனவே, "திருமூச்சு" எனப்படும் நமது இயற்கையான பிராணச் சக்தியானது ஒடுங்கி அழிக்கப்பட்டு நமது "சொல்லாக" மாறிவிடுகிறது. **"மந்திரச் சித்தி"** இந்நிலையை மாற்றிச் சொல்லை யடக்கி ஆகாசத் தத்துவத்தைக்கொண்டு **"திருமூச்சைப்"** பெற உதவுகிறது. எனவே, பேச்சாக மாறும் நமது சொல் ஐம்பூதங்களில் விண் என்ற ஆகாயத் தத்துவத்தைச் சேர்ந்தது. எனவேதான் மந்திரம் ஜெபம் என்பனவற்றால் விண்ணின் தத்துவத்தைப் பெறுவதற்கே முன்னோர்கள் பல மந்திரங்களைத் தந்தனர்.

69. **என் தவம் ஞான சித்தி**
**அருள் தாண்டவம் அது**
**ஞானப்பால் உண்டல்**
**சொல்லில் பிறந்த மனம்**

ஆனால், **"ஞான மார்க்கத்திலும்"** இதனைச் சாதிக்கலாம். இதுவே **"அருள் தாண்டவம்"** எனப்படும். (ஞானசித்தி). **"திருஞானசம்பந்தர்"** இந்நிலையை இம்முறையில் அடைந்ததால்தான் திருஞானசம்பந்தர் என அழைக்கப்பட்டார். **"ஞானப்பால் உண்ணுதல்"** என்பது இதுவே. இந்நிலையில் சொல்லே மனமாக மாறிவிடும். இது மிகப்பெரும் தபோநிலை யாகும். ஆதிசங்கரரின் **"சௌந்தர்ய லகரி"**யில் கூறப்பட்ட "பரா" என்ற பெரும் நிலை இதுவே.

70. **பரமன் கூத்து அது**
**புலன் மூன்றும் தாண்டி**
**நோக்கு, சிறுமூச்சு, தேக வசியம்**
**நிற்பது இரண்டும் தற்காப்பு, நிறைவு காண**

இதுபோன்று மனிதனின் உள்ளிருக்கும் தெய்வீகச் சக்தியை மறைத்து மாயையின் செயலாக மூச்சு, பேச்சு, மனம் மற்றும் புலன்களின் அடங்காமை என்ற இவற்றைக்கொண்டு இறைவனே நமக்குள் தன்னை மறைத்திருப்பது அவனது **"திருவிளையாடல்"**.

கண் பார்வை, மூச்சு, தேக உணர்வு இவை மூன்றையும் தாண்டி நிற்பது இறைவன் செயல். மேலும், மீதமுள்ள (ஐந்து புலன்களில்)

இரண்டான செவியும், பேச்சும் (வாயு) யோகச் சாதனையில் நமது தற்காப்புக்காக விளங்குகின்றன. அவை யோகிகளுக்குச் சாதனையை நிறைவாக்கப் பயன்படுகின்றன. இதைத்தான்"**கள்ளப் புலனைந்தும் காடாமணி விளக்கே**" என்று புலன்கள் முனிவர்களுக்கு இறைவனைக் காண உதவும் தீவட்டிகள் போன்று செயல்படுகின்றன என்று திருமூலர் விளக்கியுள்ளார்.

71. **புலன் ஐந்தும் தேக நடை**
**உயிர் அதன் வசியம்**
**பிரவிர்த்தியின் செயல் அது**
**நிவர்த்தி யோக மார்க்கம்**

ஐம்புலன்களும் தேகம் இயங்கவும், அந்த இயக்கத்தின் காரணமாகவும் விளங்குகின்றன. நமது உயிரானது அவற்றின் பிடியில் சிக்கியிருக்கிறது. இதுவே "பிரவிருத்தி" மார்க்கம் எனப்படும். **இயற்கையின் (அல்லது) படைப்பின் அல்லது மாயையின் சாகசம்** எனப்படும். இதிலிருந்து விடுபட்டுப் புலனடக்கத்தில் தபோநிஷ்டை கைகூடி வர இறைவனுடன் உறவாடும் பெரும்பேறு பெறுதலே "**யோக மார்க்கத்தின்**" சிகரம், தவநிலை என்பது.

72. **புலன் ஒடுங்கப் பிராணக் கலை ஓங்கும்**
**தெய்வதம் அதன் சிறப்பு**
**கண் அதில் ஞான ஒளி**
**திருஷ்டி போதம் தர.**

"**புலனடக்கத்தால்**" நமது பிராணக்கலை ஓங்கும் அல்லது அதிகரிக்கும். இந்நிலையை அல்லதுஇந்தச் சிறப்பைத்தான் "**தைவதம்**" என்ற பெரும் சித்தி அளிக்கிறது. அங்குக் "**கண்**" ஞானஒளியாக மாறுகிறது. அதாவது, நமது கண்ணின் திருஷ்டி அல்லது பார்க்கும் சக்தியே "**போதம்**" தருகிறது. கட்செவி எனப்படும் பாம்பிற்குக் கண் காணாத நிலையில் செவியாகச் செயல் புரிவதை இங்கு நினைவு கூறலாம்.

73. **விசுத்தி, ஆக்ஞை சமநடை**
**உயிர் எழாது ஏது அந்நிலை**
**உயிர் சொல்லில் பிராணக்கலை**
**கணநாதன் அதன் பரிபாஷை**

மேற்கூறிய "**தைவதம்**" என்ற பெருந் தபோ நிலையில் நமது உயிரானது (பிராணக்கலை ஓங்கி) மேல் கிளம்பி இவ்விதப் போதம் தருகிறது. இவ்வுயிர்தான் நமது சொல்லில் பிராணக்கலையாக இருக்கிறது.

கணநாதனே இந்தப் பெருஞ்சக்தி ஆவார். எனவே, தபோநிஷ்டையில் "பெரும் புலனடக்கத்தில் மூச்சு, பேச்சு, உணர்வு இவை யாவும் அடங்கியிருக்கும் நிலையில் நமது சொல்லில் மறைந்திருக்கும் பிராணக் கலையே ஞானபோதமாக மாறுகிறது. இந்தப் பிராணக் கலையே ஸ்ரீமகாகணபதி ஆவார். எனவே, ஸ்ரீமகாகணபதியின் அருளின்றித் "தேவ வாக்கான" ஞான போதங்கள் கிடைக்காது. வேதம், உபநிஷத் இவை யாவும் இம்முறையில்தான் மகரிஷிகளுக்கு உள்ளத்தில் தோன்றி நமக்குக் கிடைக்கின்றன. இதுவே வேத மூலமும் உபநிஷத் – உற்பத்தியும் ஆகும்.

74. **அஷ்டாங்க யோகம் பெருந் தவம்**
**ஸ்ரீவித்தை மற்றோர் வழி**
**புலன் அடக்கம், உயிர் தேடி**
**நேர்வழி அது, சுயம்பு பெற.**

"அஷ்டாங்க யோகம்" (ஹடயோகம்) என்பது பதஞ்சலி முனிவரின் அனுபவமும் யோக மார்க்கமும் ஆகும். ஆனால், ஸ்ரீவித்யை என்பது மற்றோர் வழியாகும். இதில் அஷ்டாங்க யோகத்தில் சாதிப்பதுபோல் மூச்சையடக்கிச் செல்லாமல் புலனடக்கத்தில் காணும் வெற்றியாகும். இந்த (ஸ்ரீவித்தையில்) புலனடக்கத்தில் "உயிர்" எனப்படும் நமது இயற்கை நுண் உடலை (புலனடக்கத்தில், அதாவது, தாய் கர்ப்பத்தில் நமக்கு இருந்த தேகத்தை) நாம் பெறுகிறோம்.

75., **பிராணாயாமம் கும்பகம் பெறல்**
**கூடும் அதில் மனோலயம்**
**உறக்கத்தின் வழி**
**தவம் போதம் பெற.**

அஷ்டாங்க யோகத்தில் (ஹடயோகம்) மூச்சையடக்கிச் "சமாதியை" நாடும் சாதனையில் "கும்பகம்" எனப்படும். மூச்சை அடக்கியிருக்கும் சித்தியைப் பெறலாம். அதில், "மனோலயம்" என்ற மனச்சாந்தியும் உதிக்கும். ஆனால், போதம் பெற முடியாது. போதம் பெற வேண்டுமானால் (இறைவனால்) ஸ்ரீவித்யையின்மூலம் உயிரைத்தேடி – அங்கு திருமூச்சின் உதவியால்தான் இறைவனின் போதம் நமக்குக் கிட்டும். மேலும், "மூச்சையடக்கிச் செய்யும் ஹடயோகத்தில் நமக்குக் கிடைக்கும் "மனோலயம்" இரவில் நாம் செல்லும் நித்திரைக்குச் செல்லும் வழியாகும். எனவே, உறக்கம்தான் முடிவில் இங்குக் கிடைத்த பயனாகிவிடும். எனவே, மூச்சுவழி உறக்கத்தைக் கடக்கும் நிலையை ஏற்படுத்தும். தேக இயக்கத் தத்துவங்களை மீறுதல் அங்கு அவசியமானது

மட்டுமின்றி ஆபத்தானதும்கூட. எனவே, பக்தியால் எண்ணத்தைக் கொண்டு செல்லும் **ஸ்ரீவித்தை** தான் சிறந்த மார்க்கம்.

**76. மனம் அடங்கில் சுகம் உண்டு**
**அது வீண் டம்பம்**
**ஆனந்தம் சுகம் அல்ல, "நீ நீயாதல்"**
**ஒப்பற்ற காமக் கலை.**

ஹடயோகத்தில் தோன்றும் "மனோலயம்" என்பதில் ஒரு தனிச் "சுகம்" உண்டு. ஆனால், இந்தச் சுகம் ஞானத்திற்கு அல்லது அருள்போதத்திற்குப் பயன்படாது. இஃது ஓர் ஆடம்பரச் சித்தி எனலாம். இந்தச் சுகம் ஆனந்தம் ஆகாது. உண்மையான "**ஆனந்தம்**" என்பது வேத வாக்கியமான "**தத்துவம் அசி**" என்ற "**நீ நீயாதல்**" என்பதே. இதுவே "**நிகரில்லாக் காமக் கலை**" என்று அழைக்கப்படுகிறது. இதுவே, நாம் அடையவேண்டிய சித்தியாகும்.

**77. காம பீஜம் அதற்குத் தடை**
**அதோமுக நிகழ்வு**
**ஜகத் அனைத்தும் அதில் அடக்கம்**
**மூச்சு, பேச்சு இரண்டின் காவல்.**

இந்தச் சித்தியை அடைவதற்குக் "காம பீஜம்" என்கிற நமது உடல் தத்துவம் (மேல்–கீழ் நடையான இயக்கம்) காரணமாயிருக்கிறது. உலகம் யாவையும் இதனுள் அடக்கமாக உள்ளது. இந்தக் காம பீஜமே நமது மூச்சிற்கும் பேச்சிற்கும் ஆதாரச் சக்தியாய் விளங்குகிறது. இதனை வெல்வதே நமது குறிக்கோள் (இயற்கையை நாம் வெல்வது என்பது இதுவே.). அதாவது தச வாயுக்களும் நம்முள் பல செயல்களைப் புரிகின்றன – பசி, தாகம் என்பதுபோல். இதனை (காம பீஜம்) மீறி யோக நித்திரைக்குச் செல்லவேண்டும்.

**78. "சொல்" ஒன்றே இயற்கை வீழ்த்தும்**
**புலன் அது உன்னில்**
**"யோக நித்திரை" புலன் அடக்கம்**
**மூச்சு தன்னாலே முடங்கும் பார் அதில்.**

**79. இதுவே ஸ்ரீவித்தை யோகவழி**
**ஏனைய மூன்றும் "ஸ்ரீசக்கர" பாதை**
**சாந்திக் கலை பிறக்கும் அதில்**
**நற்தவத்தின் பூர்த்தி "விஞ்ஞானக் கலை"**

"இயற்கை" என்ற இந்த இயக்கத்தை வெல்லும் மகாத்திறம் படைத்தது. நமது "சொல்" அதாவது எண்ணம். இதுவே, மகரிஷிகளுக்குப் புலனாகச் செயல்படும். எனவே, யோக நித்திரை என்பது "புலனடக்கம்" என்பதே. **புலன் அடங்கினால், நமது மூச்சும் தானாக அடங்கும்.** எனவேதான், "ஹடயோகம்" ஸ்ரீவித்யைக் காட்டிலும் மேம்பட்டது அல்லது உயர்ந்த பயன் அளிப்பது என்பது தவறு. இதுவே ஸ்ரீவித்யையின் யோக மார்க்கம் ஆகும். வைகரி பஸ்யந்தி பரா என்ற மற்றவை ஸ்ரீசக்கர உபாசன மார்க்கத்தின் விஷயங்கள். அங்குச் "**சாந்திக் கலை**" பிறக்கும். ஆனால், "**விஞ்ஞானக் கலை**" என்ற மேல் நிலையில்தான் தத்துவம் விளங்கும். எனவே, "**சொல்லை**" கொண்டுதான் இயற்கையை ஸ்ரீவித்யையில் வெல்லவேண்டும்.

**80. மன உறக்கம் உயிர்ப்பு பெறாது**
**சொல் உன் வசம் ஏது அங்கு.**
**புலனடக்கம் சித்தை நாடி**
**துரியம் இருப்பது அதில்.**

**81. துரியம் ஜாக்கிரத்தில் சுவப்னம்**
**"யோக நித்திரை" என்பார் அதை**
**இந்நூலின் போதம் அதுவே**
**என் தவத்தின் சித்தி.**

"**மன உறக்கம்**" உயிரைத் தேடித் தராது. ஏனெனில், அங்கு (உறக்கத்தில்) சொல் கிடையாது. எனவே, புலனடக்கம் "**சித்**" சக்தியை நாடிச் செல்வதாகும். இங்குத்தான் "**துரியம்**" என்கிற பெரும் யோகநிலை மறைந்திருக்கும். "**துரியம்**" என்பது இந்த (பெரும் நிலை) "**விழிப்புணர்ச்சியில்**" அல்லது **நினைவில்** லயித்து ஸ்வப்னத்தில் இருப்பதுதான். ஆழ்ந்த விழிப்பில் ஆழ்ந்த ஸ்வப்னமான இந்தப் பெரும் நிலையைத்தான் "**யோக நித்திரை**" என்று அழைக்கப்படுகிறது. அப்பெரும் நிலையில் எழுந்த "**ஞானபோதமே**" இந்நூலின் போதம். அதாவது, இரவில் நாம் காணும் உறக்கத்தில் மனம் இல்லை; அறிவும் இல்லை; தமோகுணம் நிறைந்த இதில் ஞானம் கிட்டாது. ஆனால், "**அறிவு**" செயல்படும் விழிப்பில் தூக்கத்தின் ஆரம்ப நிலையை அடைவதே "யோக நித்திரை" (அ) துரியம் என்ற பெரும் தவ நிலை. இங்குத்தான் இறைவனின் ஞான உபதேசம் சாதகனுக்குக் கிடைக்கிறது. இதைத்தான் "**துரியம்**" இருப்பது ஜாக்கிரத்துக்குள்ளே (விழிப்பு) என்று யோகச் சூத்திரம் கூறுகிறது. இந்நிலையில் எழுந்ததுதான் **வேதம்,**

**உபநிஷத், பகவத் கீதை** என்பதெல்லாம் தெளிவு.விழிப்பில் கனவுநிலையில் உறக்கத்தால் அருள்வாக்கு வரும்.

**82. பூரணம் இந்நூல், நிஜானந்த போதம்**
**அமரகவியின் போதம்**
**ஆண்டவனின் கிருபை, "சகஜ நிஷ்டை" தந்து**
**கணநாதன் தந்த வரம்.**

"இந்நூல் (நிஜானந்த போதம்)" பூரணமான ஒன்று. இதன் போதம் முழுப் பொருளுடையது. பிரம்ம ரிஷிகளின் போதம் இது. **ஆண்டவனின் கிருபையில் உதித்த ஞான அமிர்தம்.** "சகஜ நிஷ்டை எனப்படும் பெரும் தபோநிலையில் இருத்திக் **"கணநாதன் என்ற ஸ்ரீமகாகணபதி"** அருளிய வரப் பிரசாதம் இது. **சகஜ நிஷ்டை** என்பது காற்றினைச் சுவாசிக்காமல் பூரண பிராணச் சக்தியைச் சுவாசித்துத் **"தாரண, தியான, சமாதி"** நிலையினை நொடிப் பொழுதில் அடைவதாகும்.



# சகஜ நிஷ்டை

83. கீழ்மூலம் நாபி, மேலது ரந்திரம்
நாவு இரண்டின் தேவ காப்பு
சொல்லில் குண்டலி அகார ஒலி
நாபி அதற்குத் தடை.

நமது "சொல்" சஞ்சரிக்கும் பாதையில் நாபி, நாக்கு உச்சி இவை உள்ளன. நமது சொல்லில் "குண்டலினிச் சக்தியானது" அகார ஒலியாக (ஓம் என்பதிலுள்ள அ, உ, ம என்ற மூன்றில் "அ" என்பது) இருக்கிறது. அதனை அறிவதற்கு நமது நாபி தடையாக இருக்கிறது. அதாவது, நாபியின் வசம் நமது தேக இயக்கங்கள் உள்ளன. இவற்றினை வென்ற நிலையின்தான் குண்டலினிச் சக்தியானது மேலெழும்பும். "சொல்" என்பது நமது நாவிலுள்ள சூரிய நாடியின் சக்தியாகும். **உயிர்மூச்சு என்பதே குண்டலினி யாகும்.**

84. நாபி அன்னை இட்ட தீ
தாது ஏழின் மூலம்
எழாது என்றும் நாசி வசம்
கர்ப்போட்டம் அது, தீரா வழக்கு.

நாபியில் தாய் கர்ப்பத்தில் நமக்கு அவள் அளித்த ஜாடராக்னி என்ற ஒரு அக்னி (பசி தீபாக்னி) உள்ளது. இதன் காரணமாகத்தான் நமது உடலில் சகல பாகங்களும் தோன்றுகின்றன. (இரத்தம், எலும்பு, மாமிசம்) மூச்சை அடக்குவதால் இந்த அக்னியை எழுப்ப முடியாது. "கர்ப்போட்டம்" என்று பெயர் பெற்ற இஃது உயிருள்ளவரை உடலில் இருக்கும். நமது முன் வினையின் பயன்கள் இவை.

85. நாவில் நிகழும் கர்ப்பச் சுழல்
பற்றினேன் அதை அகாரம் பெற
அகாரம் கணநாதன் வித்து
நாதாந்தம், போதாந்தம் புகட்டும் கலை.

நமது நாக்கினில் உள்ள பிராணச் சக்தியைப் பற்றவேண்டும். அதுவே, "அகாரச் சித்தி" அடைவதாகும். நமது மூச்சுக் காற்றில் வல நாசியில் "பிங்கலை" நாடியாக அஃது இயங்குகிறது. "பரா, பஸ்யந்தி, வைகரி, மத்யமா" என்ற பிரணவத்தின் "அ" என்ற பகுதியே இதற்குத் தலைமையாக இருக்கிறது. "வாசி" எனப்படும் நமது மூலப் பிராணன் இதற்கு மூலக் காரணமாக உள்ளது. (இந்தப் பிராணசக்திக்கு).

86. **சொல்லில் துரியம் அகாரம் பெறல்**
**நாசியில் அது பிங்கலை நாடி**
**பர, பஸ்யந்தி, மத்திமை, வைகரி நான்கும்**
**அகாரம் அதன் தலை, வாசி மூலம்.**

சொல்லைக் கொண்டு "துரியம்" என்ற பெரும் யோக நிலையை அடைவதே "அகாரம்" என்ற சித்தி அடைவதாகும். நமது மூச்சுக் காற்றில் வல நாசியில் "பிங்கலை" என்ற நாடியாக அஃது இயங்குகிறது. "பரா, பஸ்யந்தி, மத்யமா, வைகரி" என்ற நான்குவிதச் சொல்லின் தன்மைகள் ஒருங்கமைந்த சக்தி "பிங்கலை" நாடியாக (சக்தி) விளங்குகிறது. "அகாரம்" என்ற பிரணவத்தின் "அ" என்ற பகுதியே இதற்குத் தலைமையாக இருக்கிறது. "வாசி" எனப்படும் நமது மூலப் பிராணனே இதற்கு மூலக் காரணமாக உள்ளது. பிரணவத்தினைப் பற்றி விவரமாக இப்புத்தகத்தில் தந்திருப்பதைக் காணவும்.

87. **இருமூச்சும் உயிரின் துன்பம்**
**உகாரம் அதன் காப்பு**
**பிங்கலை கீதமும் போதமும்**
**சொல் அடங்க அக்கோலம்.**

நமது இரு மூச்சும்தான் நமது துன்பத்திற்குக் காரணமாக உள்ளது. அதாவது மனம், புத்தி இவற்றின் சலனத்திற்கு, அதாவது, புலன்களின் செயல்களினால் நமது சுவாசம் நடைபெற்றுப் பிராணச் சக்தி வீணாகிறது. இதற்குக் காரணமான **உகாரம்** என்பது ஓங்காரமாகிய பிரணவத்தின் ஒரு பகுதியாகும். நமது சுவாசத்திற்குக் காவலாக இருப்பது "உகாரம்" எனப்படும் "உ" என்ற பிரணவத்தின் பகுதியாகும். **பிங்கலை நாடி** பிரணவக் கீதமாகவும் ஞானபோதமாகவும் மாறும் நிலைதான் "சொல்" அடங்கியிருக்கும் தருணம். அதாவது, பேச்சு அடங்கியிருக்கும் பெரும் மௌன நிலையில் இது சித்திக்கிறது.

88. **எல்லாம் பரிபாஷை, இட்டார் பெரியோர்**
**பிங்கலை நிமிர்த்தும் மூச்சை**
**அகாரம் பெற்ற பின்**
**காணும் அதில் மனோலயம்**

முன்னோர்கள் இதுபோன்ற "பரிபாஷையில்" பல பெயர்களைப் பலவிதமான சக்திகளுக்கு இட்டார்கள். "பிங்கலை" என்ற இந்த நாடியே நமது கீழ்நோக்கு மூச்சை மேல்நோக்கு முகமாக யோகத்தில் நிமிர்த்தும் சக்தி பெற்றது. "அகாரம்" என்ற சித்தி பெற்றுவிட்டால், "மனோலயம்" அதில்

தவழும். இதற்கும் மேல் பல நிலைகள் உள்ளன. அவற்றில் தேர்ந்து இறைவனின் ஆத்ம போதத்தைப் பெறலாம்.

**89. சகஜ நிஷ்டை உகாரம் நிமிர**
**என் தவம் அதுவே இன்று**
**வாசி தானும் மேல் அடங்கும் அதில்**
**கீழ் நோக்காது, எட்டாக் கனி.**

**"சகஜ நிஷ்டை"** என்பது **"உகாரம்"** என்ற மூச்சு நிமிர்ந்த காலம் ஆகும். இதுவே புலனடக்கத்தில் ஏற்படும் விந்தையாகும். இவ்விதம் மேல் நோக்கிய மூச்சு, கீழ் நோக்காது. இஃது எல்லாருக்கும் கிடைக்கும் பெரும்பேறு அன்று. பெரும் மகரிஷிகளும் சித்தர்களும் கண்ட யோக நிலை இது.

**90. ரந்திரம் திறக்கும் பார் அதில், கீழ்வாசல்**
**நங்கூரம் நாபி விட்டு விலக**
**மூல அனல் அது, தாது ஏழின் மூலம்**
**சொல்லில் அது பிராணக் கலை.**

இதுபோன்று மேல்நிலை தியானத்தில் நிமிர்ந்த மூச்சு பிரம்மரந்திரம் என்னும் உச்சியைத் திறந்துவிடும் சக்தி கொண்டது. "பிரம்மரந்திரம்" என்பது நமது உச்சிக்கும் விசுத்தி எனப்படும் தொண்டைக்குழிக்கும் இடையிலுள்ள பாலம் ஆகும். இதனைத் திறந்து உச்சி என்ற **1000 இதழ்த் தாமரையாக** வருணிக்கப்பட்டிருக்கும் சகஸ்ராரத்துடன் தொடர்பு கொள்வதே யோகச் சித்தியாகும். இந்த இணைப்பைத்தான் **சேதுபந்தனம்** என்று வால்மீகி இராமாயணம் வருணித்துள்ளது. நாபியில் இருக்கும் சக்தி, விலக நமது **மூல அனல்** சக்தியான அது நமது உடலின் மாமிசத்தின் அடித்தளத்தில் இருந்து மேல் புறப்படும். அதுவே **பிராணக்கலை** என்பது.

**91. ரந்திரம் சம நடை மேல் கீழ் அதில்**
**வெட்டாத சக்கரம் வேறென்ன**
**பெரும் யோகம் அது**
**சுழுமுனை நாடி.**

"பிரம்ம ரந்திரம்" சமநடையில் (உள்/வெளி மூச்சின்) இயங்கும். "வெட்டாத சக்கரம்" இதுவே என்று சித்தர்கள் பாடியுள்ளனர். இது பெரும் யோகம் ஆகும். **(சுழுமுனை** என்ற நாடித் தத்துவம்) அதாவது, கீழ் நோக்கு முகமாயுள்ள நமது சுவாசம் மேல் நோக்கு முகமாக மாறும் நிலை. அண்ணாக்கையும் உச்சியையும் இணைக்கும் பிரம்மரந்திரம் இங்குத்தான் திறக்கிறது.

92. **சுழுமுனை நிகரில்லா ஆத்மபோதம்**
**உன்னில் நீ அமர**
**கேட்பாய் உன் குரல்**
**மூச்சு பேச்சு பின் நிற்க**

சுழுமுனையில் நாம் இருக்க, "**ஆத்ம போதம் எழும். தன்மயமாய் இருக்கும் அந்நிலையில் சாதகன் தனது**" ஆத்மாவின்/உள்ளத்தின் குரலைத் தனது மூச்சு பேச்சு இவற்றையெல்லாம் அடக்கிய பெரும் மௌனநிலையில் கேட்பான். இதுவே **நிஜானந்த போதம்**. இந்நிலையில் உதித்தவைதான் இந்நூலின் மூலம்.

93. **புலன் ஐந்தும் உன் வசம் அன்று**
**"யோக நித்திரை" அதன் சிறப்பு**
**உள்ளம் பேசும் அதில்**
**ஞானமொழி.**

அந்நிலையில் ஐம்புலனும் உன் வசம் – அதுவே "**புலனடக்கம்**" (அல்லது) யோக நித்திரை என்பது. உள்ளம் பேசும் பெரும் பிரம்ம நிஷ்டை. அதுவே – "**ஞானமொழி**" என்பார் அதனை. **துரியம்** என்ற பெரும் தபோ நிலை இதுவேயாகும். மெய் உறக்கமாகும் அது.

94. **கேசரி, பின் நடை வாசி நிமிர**
**வெகுபேர் அறியார் அதன் தத்துவம்**
**சேது பந்தனம் அது**
**நாவின் வாசல்.**

"**கேசரிச் சித்தி**" (கண்ணிருந்தும் காணாத யோக நித்திரை) என்பது வாசி என்ற மூச்சு நிமிர்ந்து ஏற்படுவது. "**சேது பந்தனம்**" என்று இராமாயணத்தில் கூறப்படும் தத்துவம் இதுவே. அதாவது, "பேச்சில் மூச்சு" என்பது அடங்கிய யோக நிலை. இங்குதான் பிரம்மரந்திரம் **(சேது)** இணைப்பை உண்டாக்குகிறது. இந்த இணைப்பின் மூலம்தான் அந்தர்யாமியின் வாக்கு நம்மை அடைகிறது.

95. **இரண்டும் அனைய வாசி உன் வசம்**
**"பாலா" அதன் கிருபை**
**சொல்லில் அது பிராணக் கலை**
**என் வசம் இன்று.**

பேச்சும் மூச்சும் அடங்கிய பெரும் யோக நிலையில் "**வாசி**" என்ற பெருமூச்சு நம் வசம் ஆகிவிடும். இதனைத்தான் "பாலா அல்லது

பாலாம்பிகை" என்ற அன்னையின் கருணையாக முன்னோர் கூறியுள்ளனர். இந்த மகாசக்தியே நமது சொல்லில் பிராணக் கலையாக உள்ளது. மேலும் பாலா என்கிற அன்னையே இயற்கையின் மகா சக்தியாகவும், நமது புலன்களின் சலனமாகவும் இருக்கிறாள். "ஸ்ரீம்" என்ற அட்சரத்தின் அதிதேவதை இவள். "வாலை"ப்பெண் என்று இவளை சித்தர் பாடல்கள் விளக்குகின்றன.

**96. என் வித்தை "சோம வட்டம்" புக**
**சித்தின் பிரபை**
**நாசி மூலம் அது தகர வித்தை**
**ஆன்ம தத்துவம் ஏது அதில்.**

சோம வட்டத்தினுள் புகுந்து பெறும் சித்திதான்"சித்" சக்தியின் அருளைத்தரும். மூக்கினால் சுவாசத்தைக் கட்டுப்படுத்தும் வெறும் "ஹடயோகத்தினால்" ஆத்ம தத்துவம் கிட்டாது. எனவே, "ஹடயோகத்தில்" ஆத்ம தத்துவம் அறியும் ஞான உபதேசம் கிடைக்காது என்பது சித்தாந்தம். ஸ்ரீவித்தை மூலமாகத்தான் ஆத்ம தத்துவத்தை அறிய முடியும். ஆஞ்சநேயர், பிரகலாதன் முதலானோர் செய்த பெரும் பக்தியோகமும் ஸ்ரீவித்தையின் வழியிலே செய்ததுதான்.

**97. சோம வட்டம்முன் அணி ஞான மொழி**
**கேட்பாய் அதில் அந்தர் வாக்கு**
**"பாலா" உன் வசம் மெள்ள மெள்ள**
**இரவு பகல் அற்ற போதம்**

"சோம வட்டம்" கண்டு நுழைந்த பின்தான் "ஞானமொழி" கேட்கும். அங்கு அந்தர்முகமாய்க் கேட்கப்படும் வாக்கு அன்னை ஸ்ரீபாலாம்பிகையின் அருள். இரவு, பகல் என்ற வேறுபாடு இல்லாத தவநிலை அல்லது பிரம்ம நிஷ்டை அதுவே. ஸ்ரீமத் கீதையில் கூறப்படும் "ஸ்தித பிரக்ஞை" (அக்கண்) என்ற நிலை இதுவே.

**98. அடியார் பலர் அதில் தேர்ச்சி**
**நானும் இன்று**
**தகர வித்தை அஷ்ட சித்தி**
**ஸ்ரீவித்தை பூர்த்தி "ஆத்மபோதம்' உள்ளம் பேச**

அடியார்களான "திருஞானசம்பந்தர்", நம்மாழ்வார், திருமூலர் போன்றவர்கள்தான் இதில் தேர்ச்சி பெற்றவர்கள். அஷ்ட மகாசித்திகளின் மேல் மோகம் கொள்வதும் தவறு. ஸ்ரீவித்தையின் பூர்த்தி என்பது

"**ஆத்மபோதம்**" நமது உள்ளத்தினின்று தோன்றுவதாகும். யோகத்தின் சிகரம் ஆகும் இந்த நிலை.

**99. என் தவம் பூர்த்தி அன்று இன்று**
**"வைகரி" சித்தி ஒன்றே**
**பற்றினேன் பிராணக் கலை**
**வாசி நிமிர.**

"**வைகரி**" **சித்தி** என்பது இதுவே. "**பிராணக் கலையைப்**" பிடித்து வாசியை நிமிரச் செய்யும் பெரும் யோக நிலையாகும். இதற்கு மேல் இன்னும் முன்னேற வேண்டிய யோக நிலைகள் பல உள்ளன.

**100. எதிர் காலம் வாசி மீட்பு**
**"சோமவட்டம்" சூழும் அதில்**
**என் தவம் இரண்டின் மையம்**
**தேவ கதி, ஈசன் பாதம்.**

இதன் மேற்படிகள் என்பது "**வாசி**" என்ற மூச்சுக் காற்றை வீணாக்காமல் இழுத்துப் பிடித்து அல்லது "**வாசியில்**" சேதம் இல்லாமல் செய்வதுதான். அந்நிலையில்தான் "**சோமவட்டம்**" நம்மைச் சூழ்ந்து நிற்கும். "**சமாதி**" நிலையான வாசியின் முழு மீட்பு நிலைக்கும் "**வைகரி**" என்ற வாசி நிமிர்ந்த நிலைக்கும் இடைப்பட்டதே சஞ்சாரம் "**தேவகதி**" என்ற பெரும் நிலையாகும். **ஈசனின் பாதம்** என்பது இதுவே. **வேதவியாசர் கண்ட** பெரும் யோக நிலை, **தபோ நிஷ்டை** அல்லது பிரம்ம **நிஷ்டை** கூடிய பெரும் அடியார்கள் நிலை இதுவே. மனிதன் காலம், இடம் என்ற கணக்குக்கு உட்பட்டவன். ஆனால் யோகத்தில் காலத்தை அவன் வென்றுவிட்டால் பின் யோகத்தின் பெரிய நிலைகளை எட்டிப் பிடித்துவிட்டால் அவனது மானிடதேகம் தெய்வீக தேகமாக மாறிச் செயல்படும் முறைதான் **தேவகதி** என்பது. தவம் முற்றினால் அதுவே இறைவனாக மாறும் நிலையைத் தரும்.

ஓம் தத் ஸத்

# வேதகால ரிஷிகளின் (அமரகவிகளின்) தவமும், வெற்றியும்

### அருள் வாக்கு

"அமரகவி" என்பது பிரம்ம ஞானி "ஞானி"ஆகி விட்ட நிலையைக் குறிக்கும். இறைவனுடன் உறவாடும் பேறு பெற்றவர். **அனுபூதி** என்ற 'அனுபவம் பெற்றவர். இறைவனிடம் ஞான உபதேசம் பெற்றவர். இவர்களைத்தான் அமரகவி என்று கூறுகிறது சித்தர்கள் பாணி.

ஆதி சங்கரர், "பஜகோவிந்தத்தில் "**நிச்சலத் தத்துவம்**" என்ற நிலையை குறிப்பிடுகிறார்." அந்நிலைதான் அருள் விழிப்பு நிலையாகும். **அருள்** அல்லது **அனுக்ரக வாக்கு** அந்நிலையில்தான் தோன்றுகிறது. மேற்கூறிய, நிச்சலத் தத்துவம் என்ற நிலை தான் நமது நிராதார மனம் என்ற பெரும் தவநிலை அது. அதனை விளக்குவது என்பது இயலாது. மூடனும் அங்கு ஒரு ஞானியே. அவனே அமரன் எனப்படுவான். பிறப்பில் இழந்த பேரறிவை மனிதன் தன் தவத்தினால் மீண்டும் பெற்ற நிலை அது – அவனே தம்மை உணர்ந்த ஒருவனாகிறான்.

### நிச்சல தத்துவம்

யோகம் / தவ முறையில் மனதில் **நிச்சல தத்துவம்** பெறுவது தான் சிறந்த "ஞான வழி." அதுவே ஸ்ரீ சங்கரரின் பஜகோவிந்தத்தில் கூறப்படுகின்றது. நிச்சல தத்துவம் என்ற நிலையில் எண்ணங்கள் கிடையாது, உதிப்பதுமில்லை. சலனமற்ற அந்நிலை மானிடர்க்கு அரிது அரிது. அங்கு "**ஞான–ஒளி**" சூழும் உன்னை. தேகத்தினின்று ஒவ்வொரு வினாடியும் விரயமாகும் நமது பிராண சக்தித் தடுத்து மீட்கப்படும். தேகம் அங்கு பிராண சக்தியால் பூரித்து பொலிவுடன் விளங்கும். நமது நான்கு புலன்களும் ஒன்றுபட்டு "**கேவல கும்பகம்**" என்று பெரும் யோக நிலைக்கு வழி வகுக்கும்.

புலன் நான்கும் ஒடுங்கிய நேரம், தேஜோ சக்தி வசமாகும் அங்கு. சித்தத்தின் அலைகள் அவை. நமது தேகப் போக்கு அங்கு நிராதார நிலை ஆகும்.

### யோகத்தில் இயற்கையை வெல்லுதல்

"**இயற்கை**" என்பது மனிதனை தன்னுடைய சூட்சுமத்தை அல்லது தெய்வீகத் தன்மையை அறியாமல் இருக்குபடி செய்து கொண்டிருக்கின்ற

சக்தியாகும். இதுவே "**திரோதானம்**" அல்லது மாயை என்று அழைக்கப்படுகிறது.

பிறப்பில் மனிதன் தன் தெய்வீகத்தன்மையை இழக்கிறான். இதற்கு ஈடாக **புலன்கள்** செயல்படுகின்றன. **சுவாசம்** நடைபெறுகிறது. நரை, திரை, மூப்பு, இறப்பு என்ற நிலைகள் இவனைத்தேடி வருகின்றன. இவ்விதம் தெய்வீக அதிமானுஷ சக்தியை மறைத்துக் கொண்டிருப்பது இயற்கையின் சதியாகும். இதனால் **மனம், புத்தி, அகங்காரம், சித்தம்** போன்ற சித்த சலனங்களும் புலன் வழி செல்லும் மனத்தால் எண்ணம், கற்பனை, பேச்சு, மூச்சு போன்ற தடைகளும் மனிதனை பிரம்ம நிஷ்டை (அல்லது) ஓர் பெரும் தவநிலையை அடையாமல் தடுக்கின்றன.

**யோகம்**

"**யோகம்**" என்றால் இணைப்பது என்பது பொருள். அதாவது நமது ஸ்தூல உடலும், சூட்சும உடலும் நாம் பிறந்த பிறகு பிரிந்து விடுகின்றன. அவைகளை மீண்டும் இணைப்பதே யோகம். திரோதானம் அல்லது மாயையால் பூத உடல் இயங்குகிறது. இதனால் ஐம்புல உணர்வுகள் உண்டாகின்றன. இந்த உணர்வுகள் ஏழு நிலைகளைக் கொண்டவையாகும். முதல் நான்கும் சித்த விருத்தியை உண்டாக்குகின்றன. இந்த சித்த விருத்தியை யோகத்தில் நாம் தடுத்து நிறுத்தி விட்டால் நமக்கு ஆன்மிக உணர்வு மற்றும் தெய்வீக சக்தி கிடைக்கும். இந்த சக்தியைத்தான் "**குண்டலினி**" என்று அழைக்கிறார்கள்.

"**குண்டலினி**" சித்தியாகி விட்டால் அங்கு நமது நோக்கு (பார்வையில்) மனோலயமாகும். பின்னர் "**மூலஅனல்**" அங்கிருந்து எழும். அதுவே "**ஆதாரத் தீயாகும்.**" மூச்சு அதனை நாடிவிட்டால் நமது மனம் தளரும். "**மூச்சு**" என்பது நாம் ஒவ்வொரு விநாடியும் இழந்து கொண்டிருக்கும் நமது பிராண சக்தியாகும். நமது உடலில் தேகம் அனைத்திலும் உள்ள மயிர்க்கால்களும் நமது நாசியைப் போலவே சுவாசிக்கின்றன. நமது தேகத்திலுள்ள பிராண சக்தியை இவ்விதமாகத் தான் நாம் இழந்து கொண்டிருக்கிறோம். அப்படி நாம் இழக்கும் பிராண சக்தியை மீட்பதே யோகமாகும். அதற்கு புலனடக்கம்தான் வழி. **புலனடக்கம்** என்பது உடம்பை வளர்க்கும் உபாயம் ஆகும். அதாவது சித்த விருத்தி தடுக்கப்பட்டு நமக்குள் உள்நோக்கிப் பாயும் நிலை. அது இங்கு உடல், மயிர்க்கால்கள் வழியாக சேதமாகும் பிராண சக்தியை தடுத்து மீட்கிறது. இதுவே புலனடக்கம்.

தேகத்திலுள்ள மயிர்க்கால்கள் வழியாக வெளியே பாய்ந்து இழக்கப்படுகின்ற நமது பிராண சக்தியை தடுத்து மீட்பது எப்படி என்பதை **திருமூலரின் திருமந்திரம், ஔவைக்குறள்** மற்றும் பல சித்தர்களின் பாடல்கள் விளக்குகின்றன. மேற் கூறிய "பிராண சக்தியின் இழப்பைத் தடுத்து" தேகத்தோடு அதை இணைத்து சுவீகரித்து தவத்தில் வென்று விட்டால் நமது ஸ்தூல தேகமும் சூட்சும தேகமும், ஒன்றாக இணைந்து செயல்படத் துவங்கும். அங்குதான் "ஞான உபதேச படலம்" துவங்குகிறது. வேதம், உபநிடதம் போன்ற நூல்கள் தோன்றிய வழிமுறை (அல்லது) யோக நிலை அதுவே ஆகும்.

### சங்க நாதம்

அது இரண்டு முறை கேட்கும், கீழ் மேல் தேக—அம்ச புணர்ச்சியில்! அது ஒரு தேவ ரகைஷ. மேலும் யோகத்தில் வளர அது உதவும். அதில் முழு வளர்ச்சி சிதாகாசம் எனப்படும். உயிர்ப்பும் (பிராண சக்தி), ஆதாரத்தீயும் ஒன்று. அதுவே, சிருஷ்டி மூலம், ஆதார வடிவம் அதன் செயல். அதுவே **யோகாக்னி.** யோக முயற்சியில் அது நமது வசம் ஆகிவிட்டால் **விஞ்ஞானமயக் கோசம்** நமக்குள் இயங்கத் துவங்கும். இந்நிலை அரிது அரிது மானிடற்கு. தேகம் சுயம்புவாக ஆகிவிட்ட நிலையில்தான் **விஞ்ஞானமயம்** மற்றும் **ஏகாக்ர பூமி** இயங்கும். "**ஏகாக்ர பூமி**" என்பது சித்த சலனம் அற்ற நிலையாகும். அங்குதான் ஞான உபதேசம் பிறக்கும். விஞ்ஞானமயம் இயங்கத் தொடங்கினால் அதன்பின் நமது மனம் உடலை, தேவகதியில் வளர்க்கும். "**தேவகதி**" என்பது யோக திருஷ்டியின் மூலம். அல்லீது தான் தன்னை அறிந்த நிலை. இயற்கையின் ஆட்டம் அதில் நம் வசமாகிறது. இந்நிலையில் அறிவே ஆற்றலாகும். அஷ்ட மகா சித்திகளில் ஒன்றான "**வசித்துவம்**" என்ற மகா யோக சக்தியின் நிர்ணயம் மேலே கூறிய விஞ்ஞான மயம் நமக்குள் இங்குவதுதான்.

### சோடச கலையின் தத்துவம்

**திருமூலர்** எழுதிய **திருமந்திரம்** ஒரு பாடலில் உடம்பை வளர்க்கும் உபாயம் என்பது பற்றி விளக்குகிறது. அதுவே, "**புலனடக்கம்**" ஆகும். மனித உடல் சித்த விருத்தியால், சக்தியை இழக்கிறது. இதனை மீட்பதே யோகம் அல்லது புலனடக்கமாகும். பிறகு "**ஆதாரத்தீ**" எழுந்து விடும். பிராண சக்திகள் புலனடக்கத்தில் வீணாகாமல் (மயிர்க்கால்களின் வழியாக) தடுக்கப்பட்டு நமது உடலை நாடும் போது "**கேவல கும்பக சித்தி**" ஏற்பட்டு அதன் மூலம் "இடா மற்றும் பிங்களை நாடிகள் சமன்வயப்படும்." உயிரும், உடலும் ஒன்றுபடும். அந்நிலையில் உடல் விரயமாகாத பிராண சக்தியை ஸ்வீகரித்துக் கொள்ளும். நாடிகள் தளராது இனி – அங்கு மனிதனின் உடல்

"திருமேனியாக" மாறும் – தேகம் அங்கு நிரந்தரம். மகா தபஸ்விகளின் உடல் நிலை அது. **இறைவனின் படைப்பு சக்தி மனிதனின் உடலில் வந்து சேர்வது இங்குதான். இது ஒரு பெரும் தவ நிலையாகும்.**

யோகத்தில் "**திருமேனி**" ஆகிவிட்ட மனித உடலில் ஸ்தூல சூட்சும தேக சக்திகள் ஒன்றுகூடி இயங்கத் தொடங்கும். மெய்ஞான உணர்வு (விஞ்ஞானமயக் கோசம்) தான் அதன் சூட்சும வடிவம். அங்கு நமது அறிவில் "**பிரம்ம விருத்தி**" தோன்றும். இதைப் பெறுவதே சோடச கலையின் மர்மமாகும். "**துரியம்**" என்பார் அதன் எழுச்சியை. அதுவே ஸ்ரீவித்தையின் பூர்த்திக் கட்டமாகும். சோடச கலையின் சிறப்பு "அமானுஷ தேக அமைப்பு" ஆகும். அங்கு மனதில் "உயிர்ப்பு" எழும். உள்நாக்கு "சக்தி பீடமாகும்". அதுவே "**அருள் வாக்கு**" எழும் ஞானபூமியும் ஆகும். அவ்விதம் வேதம் உபநிஷத்து போன்ற தெய்வீக நூல்களை இயற்றிய மகா தபஸ்விகளும் அமரகவி போன்றவர்களும் தங்கள் தேகத்தை தவத்தின் மூலம் திருமேனியாக்கித்தான் "**விஞ்ஞானமயக் கோசம்**" என்ற மெய்ஞான உணர்வை பெற்றனர்.

**திருமேனி**

நமது உயிர் மூச்சு அதன் மூலத்தில் "**நாத அலைகள்**" ஆகும். நாம் பேசும் போது அந்த நாத அலைகள் நழுவி நமது தேக இயக்கத்தில் போய்ச் சேர்கிறது. அதுவே நமது (வெளி நோக்கு) புலன்களின் பகிர்முகம். அதாவது நமது புலன்கள் வெளி உலகத்தில் சஞ்சரிப்பதாகும். அவ்வாறு, நமது மனம் புலன்கள் வழியாக வெளி உலகத்தில் சஞ்சரிக்கும் போது (சிதரும் போது நமது உயிர்ப்பு சக்தி அதி சூட்சும பிராண சக்தி) அங்கு நமது தேக வசம் விரியும். அதாவது சிதறி அழியும். அந்த விரிப்பே நமது "**சிறு மூச்சாகும்.**" எனவே, இவ்விதம் புலன் வழி சிதறும் மனதை அடக்கி ஆளும் போது மனிதனின் தேகம் திருமேனியாக மாறும். மேலும் **திருமேனி** என்பது மெய்ஞான நுட்ப அறிவு அலைகளை மனம் பெற்று விட்டது என்று பொருள். அதுவே புலனடக்கத்தின் உச்சக்கட்டமாகும்.

**தேகப்பற்று (ஸ்பரிசம்)**

**தேகப்பற்று** (ஸ்பரிசம்) என்பது **அறிவு உணர்ச்சியில் சாய்வது.** அதனை மீறுவது வெகு கடினம். எனினும் "தேகப்பற்று நீங்கிய ஆனால் நீங்கா நிலைதான்" ஞான திருஷ்டியைத் தரவல்லது. அதுவே சோடசத்தின் சிறப்பு (அல்லது) **சித்தர்கள் வாழும் இல்லம்** என்ற பெரும் தவநிலையை

அடைவதாகும். அங்கு உள்ளமே **பரமாத்ம நிலையம்** ஆகும். "**ஈசத்வம்**" என்ற அஷ்டமகா சித்திகளில் ஒரு பெரும் நிலை அதுதான். அதன் சிறப்பு என்ன வென்றால் *அங்கிங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரமன்* நம்மையாட் கொண்ட நிலையது. அதுவே "பரமபதம்" என்பதுமாகும். ஞான சம்பந்தர் "ஞானப்பால்" உண்ட நிலை இதுதான். இறைவனின் பேரறிவிலிருந்து மலரும் "**அருள் வாக்குகளை**" பெறுவதும் இங்குதான். அருள் வாக்குகள் என்பது அவைகளை உணர்ந்த மகான்களுக்கான காப்பு அல்லது ரகைஷயாகவும் செயல்படுகின்றன.

**தத்துவ ஞான போதம்**

"**அமரகவி**' என்பது **அகாரம்**. "**அகாரம்**" என்பது பிரணவத்தில் முதற்பாகம் ஆகும். யார் அறிவார் அகாரம் அவனென்று என்பது திருமூலர் வாக்கு. எனவே அகாரம் என்பது நமது உள்ளம் / இறைவன் நமக்குள்ளிருந்து சொல்லும் வாக்காகும். அதுவே ஞானக் குரல். வேதம் உபநிஷதம் போன்றவை தோன்றிய வழிமுறையாகும். அது பிரம்ம நிலையாகும். **சித்தத்தில் எண்ணத்தின் அசைவு நின்ற நிலையது.** அங்குதான் மெய்ஞான உபதேசம் உதிக்கின்றது.

சித்தத்தையடக்க இயற்கை நம் வசமாகும். அங்கு புலன்கள் நான்கும் அறிவில் ஒடுங்கும். அந்த அறிவே **துரியம்** மற்றும் **துரியாதீதம்** எனப்படும். அதுவே ஞான உள்ளமுமாகும். பூரணமாக புலன்கள் அவ்விதமாக ஒடுங்கி விடடூல் அந்த நிலைக்குத்தான் **பிரம்ம நிஷ்டை** என்று பெயர். இறைவனின் ஞான போதம் அங்கு தான் பிறக்கிறது. பிரம்ம நிஷ்டை என்பது தன்னைத் தான் தியானத்தில் இழந்த நிலையாகும். மனிதனின் பிரம்ம நிஷ்டையில் ஐந்து நிலைகளான விழிப்பு, கனவு, உறக்கம், துரியம், துரியாதீதம் என்ற தவ நிலைகள் ஒடுங்கி அடங்குகின்றன. இந்த ஐந்து நிலைகளைத் தான் "பஞ்சகிருத்திய நடனம்" என்று அழைக்கின்றனர்.

**ஐந்து நிலைகள்**

1. விழிப்பு நிலை
2. கனவு நிலை
3. உறக்க நிலை
4. துரிய நிலை
5. துரியாதீதம் நிலை

**திருமூச்சு**

சாதாரண மனிதன் சுவாசிப்பது வேறு. வேத வியாசர் போன்ற மகரிஷிகள் சுவாசிப்பது வேறு. மகான்களின் சுவாசம் **திருமூச்சு** என்று

அழைக்கப்படுகின்றது. சாதாரண மனிதனின் சுவாசம் சிறு மூச்சு (அல்லது) மூச்சுக் காற்று என்று அழைக்கப்படும்.

**திருமூச்சு** என்பது தெய்வீகமானது அது மனிதனின் விழிப்பு கனவு உறக்கம் துரியம் மற்றும் துரியாதீதம் (துரியத்தை தாண்டிய நிலை) என்ற ஐந்து நிலைகளையும் தன்னுள் அடக்கி ஆளுகின்ற சக்தி கொண்டதாகும்.

அவ்விதம் தெய்வீக சக்திகள் நிறைந்த பெரும் தவநிலைதான் (திருமூச்சு) ''நிச்சல தத்துவம்'' எனப்படும். அந்நிலை தளர்ந்து விட்ட நிலையில் தான் நமது சிறுமுச்சு செயல்படும். எனவே நாம் மூச்சுவிடுவது (சிறுமூச்சு) அவ்விதம் பெரும் தவநிலையான திருமூச்சை (அல்லது) நிச்சல தத்துவத்தை இழந்ததால் தான் எற்பட்டது என்பதையும், மீண்டும் தவத்தால் அதனை பெறுவதை யோகத்தின் பெரும் குறிக்கோள் என்றும் அறிய வேண்டும். எனவே, மூச்சையடக்கும் செயல் நாம் மீண்டும் திருமூச்சு என்றும் தெய்வீக சக்தியை பெறுவதற்காகத் தான் இருக்க வேண்டும். அதுவே (திருமூச்சு) ஸ்ரீ சங்கரர் கூறும் ''நிச்சல தத்துவம்'' என்ற நிலையாகும். ஆனால் மூச்சையடக்குவதால் மட்டும் இதனை அடைய முடியாது.

பிறக்கும் முன் நமது உடலும் உயிரும் கூடி நின்றது. அதுவே நமது உயிர் பஞ்ச கோசமாக மாறும் முன் இருந்த நிலையாகும். **தேக உணர்வு** என்று அங்கு நமக்கு எதுவும் கிடையாது. பூமியில் பிறந்தவுடன் மெதுவாக **''தேக உணர்வு''** வந்து விடுகிறது. தேக உணர்வின் பொருள் என்னவென்றால் நமது உடலும், உயிரும் இணைந்து இருந்த நிலை கெட்டுவிட்டது என்றும். மேலும் நமது உயிர் ஐந்து கோசங்களாக பிறிந்து விட்டது என்றும் பொருள். ஐந்து கோசங்களானவை

1. அன்னமயக் கோசம்
2. பிரானமயக் கோசம்
3. மனோன்மயக் கோசம்
4. விஞ்ஞானமயக் கோசம்
5. ஆனந்தமயக் கோசம்

என்பவைகளாகும்.

இவைகளில் **ஆனந்தமயக் கோசம்** என்பது ஒரு பெரும் மாயையைப் போன்றதாகும். அதனைத் தாண்டுவது அத்தனை சுலபமல்ல. ஆனந்தமயக்

கோசத்தின் அதிபதி தான் ஸ்ரீ கணபதி ஆவார். எனவே கணபதி அருளின்றி அதனைத் தாண்டி விஞ்ஞானமயக் கோசத்தை அடைவது இயலாது

**ஞான உள்ளம்** (ஸ்பரிசத்தின் பெருமை)

அடுத்து வரும் **விஞ்ஞானமயக் கோசம்** என்பது தான் யோகத்தில் தலை சிறந்த நிலையாகும். விஞ்ஞானமயக் கோசத்தில் தான் இறைவனின் "**ஞான உபதேசம்**" கிடைக்கும். விஞ்ஞானமயக் கோசம் அடைந்து விட்டால் நமது தேக நடை கருவறையில் உள்ளது போல ஆகிவிடும். (அல்லது) பிறக்கும் முன் கருவில் நாம் இருந்த நிலைக்கு நாம் சென்று விட்டோம் என்பதன் அடையாளம் தான் அது. மானிடர்க்கு இந்த நிலையை அடைவது மிக அரிது. அங்கு தேகம் சுயம்புவாக மாறி விடும். சுயம்பு தேகத்தில் தான் விஞ்ஞானமயம் இயங்கும். இது சாதாரண மானிடன் அடையும் நிலையல்ல.

**ஏகாக்ர பூமி**

ஞான உள்ளம் என்பது சித்த சலனம் இல்லாத நிலை. அங்குதான் ஞான உபதேசம் பிறக்கும்.

புலன்கள் நான்கும் ஒடுங்கிய நேரம் தேஜோ சக்தி நம்மை ஆட்கொண்டு வசமாகும். **தேஜோ சக்தி** என்பது சித்தின் அலைகள்தான், வேறொன்றுமில்லை. சித்தத்தில் சலனம் இல்லை யென்றால் தான் அது எழும்.

அவ்விதம், புலனடக்கதில் தேஜோ சக்தி நம் வசம் ஆகிய நிலையில் நமது தேகப் போக்கு நிராதார நிலையாயிருக்கும். அந்த நிராதார போக்கில் நமது சிந்தை பிராண சக்தியை (நமது உடல் இழப்பதை) தடுத்து மீட்கும். அவ்விதம் பிராண சக்தி விரயமாவதைத் தடுத்து, மீட்க மீட்க "**ஞான உள்ளம்**" புலன் வழியாக எழும். நாம் ஞான உள்ளம் பெறுதல் "தான் தன்னை அறிதலாகும்." அங்கு **நம் புலன் வழி அறிவாக இருக்கிறாய் – இறைவன்** மெய்ஞானம் ஆகிறான்.

உனக்குள் நீ ஒடுங்கி இருப்பது தான் (வெளி உலக சிந்தை இன்றி) "**காய கற்பம்**" என்பது. தேக ஓட்டம் அங்கு தேக மூலமிடம் (பரமாகாசம்) நங்கூரமிடுகிறது. அதுவே "**காக புசண்டர்**" என்னும் பெரும் சித்தர் கூறிய "**வெட்டாத சக்கரம்**" என்ற பொருளின் விளக்கமாகும். வெட்டாத சக்கரம் என்பது **ஞான உள்ளம்** ஆகும்.

மனிதன் யோகத்தில் தன்னைத்தான் இழந்து இறையுணர்வில் மூழ்கியுள்ள நிலையில் தான் "**பரமாகாசம்**" என்ற பரிபக்குவ நிலையை அடைய முடியும். பிரம்ம நிஷ்டை அதுவேயாகும். அதுவே இறைவனும் நாமும் ஒன்றாக

இரண்டறக் கலந்திருக்கும் நேரமாகும். ஸ்பரிசத்தின் மொத்த ஏழு நிலைகளைதான் அலைகள்.

ஞான உள்ளம் என்பது ஞான உபதேசத்தின் மூலம். **வெட்டாத சக்கரம்** என்ற அதன் விளக்கம் என்னவென்றால் "*உனக்குள் நான்கு பரமனில் மூன்று*" என்ற நிலைகளாகும். இந்த நிலைகள் யாவும் **ஸ்பரிசம்** என்ற உணர்வில் உள்ளது.

**"இறைவனில் நீ" – என்ற நிலை** (அனுமன் போன்றவர்கள்)

இந்நிலை ஞான உபதேசத்திற்கு வழி வகுக்கும். உனக்குள் அந்த சக்தி காய கல்பமாக விளங்கும், பெரும் தவ சித்தியாகும். அவ்விதம், ஞான உள்ளத்தைப் பெறுவது பிரேதம் உயிர்ப்பித்து எழும் நிலையான "**சிரஞ்சீவி**" என்ற யோக நிலையில் தான். அங்கு தான் ஞானக் குரல் உள்ளத்தினின்று கேட்கும். "வேதம்" அன்று இந்த நிலையில்தான் உதித்தது. அதுவே **அமரனின் வெற்றிக்கொடி**.

**சகஜ நிஷ்டை**

இதுவும் ஒரு பெரும் தவ நிலையாகும். உயிர்ப்பின்மை என்ற அதி சூட்சுமமான சக்திகள் உன் தேக வசமாகிய தவநிலை இது. உனது சிறு மூச்சு உனது சொல்லின் மேல் அமரும் நிலையது. இங்கு **சோடச மகா சக்தி** கிடைக்கும். ஸ்ரீ வித்தையின் கடை நிலை அதுவாகும். அதாவது உனது சொல் அடங்கிய நிலையில் தான் இறைவனின் ஞானக்குரல் கேட்கத் துவங்கும். "**மத்தியமை**" உனது சொல். அதாவது எண்ணத்தின் அசைவுகள் ஆகும். "பரா மற்றும் **பஸ்யந்தி**" என்பவை ஞானபூமியாகும். தேக நடை என்பது நமது புலன்களின் ஓட்டமாகும். "**வைகரி**" என்ற நிலைதான் "சொல் கடந்த **துரிய நிலை**" எனப்படுவது. **துரியம்** என்பது நான்காவது நிலையாகும். விழிப்பு கனவு, உறக்கம் என்ற சாதாரண ஜீவனின் நிலைகளைக் கடந்து நிற்கும் ஒரு யோக நிலை. சொல் கடந்த நிலையாகும். இந்த துரியம் என்ற யோக நிலையை "மண்டிலம் மூன்றும், வாயு ஓர் பத்தும், அடங்கிய வீடு துரியம்" என்று **ஔவைக்குறள்** என்ற யோக நூல் விளக்கமாகும்.

புலன்கள் நான்கும் உறங்க அது நித்திரையாகும். அந்த புலன்கள் நான்கும் விழித்துறங்க அது யோக பீடமாகும் (பிரம்ம நிஷ்டை.) எனவே, உறக்கம் வேறு நிஷ்டை வேறு. சாதாரண மனிதன் மற்றும் விலங்குகள் உறங்குவது உறக்கம். யோகிகள், பிரம்ம நிஷ்டர்கள். தவசீலர்கள் போன்றவர்களின் உறக்கம் போன்ற தவநிலை தான் பிரம்ம நிஷ்டையாகும். "*தூங்காமற் தூங்கி சுகம் பெறுவதெக்காலம்*" என்று **பட்டினத்தடிகளின் சீடர்**

பத்ரகிரி அவர்களின் "*அருட்புலம்பல்*" என்ற பாடல்களில் வருவதன் பொருள் (தூங்காமற் தூங்கும்) **துரியம்** (அல்லது) பிரம்ம **நிஷ்டை** என்பதே ஆகும். "**ஷட்சக்ர சித்தி**" என்பது மிகவும் அவசியமான ஒரு நிலையாகும். அதுவின்றி "நிராதார மனம்" மற்றும் தேக இயக்கம் கிடையாது. அது கிடைக்கப் பெற்றால்தான் "மனதின் ஓசை அடங்கி நமது புலன் இயக்கத்தில் ஒடுங்கும். சொல்லின் இயக்கம்தான் "மனஓசை" என்பது. அந்த இயக்கத்தின் பொருள் "**அர்த்த மாத்திரை**" எனப்படும். எனவே பேச்சு, சொல் ஆகியவைகளை அடக்குவதே யோகம். ஆதார சக்கரங்கள் நமது தேகத்தை இயக்குகின்றன. அந்த ஓட்டத்தை நிறுத்தியது நிராதாராம் என்ற நிலை. திருவையாரில் இசை வழி யோகம் செய்த தியாகராஜர் எழுதிய பாடலில் சோபில்லு சப்த சுவரம் *நாபி, இருத், கண்ட, ரசனா* என்பதன் பொருள் மேற் கூறிய தவநிலையை அடைவதே.

"சோடசக்கலை" என்பது நிராதார ஒலியைக் கேட்பதாகும். அதாவது, அந்தர் முகத்திலிருந்து தோன்றும் ஓசை அது. அதுவே பிரணவ மூலம். சித்தின் அலைகள் அறிவைத் தூண்ட (மூலாதாரம்) அந்நிலைக் கிட்டும். அந்நிலையை அடைவதற்கு ஸ்ரீ மூல கணபதியின் அருள் வேண்டும். மனம் சொல்லில் நின்றால் மனிதன் தனது சூட்சும பிராண சக்தியை இழக்கின்றான். அதை எப்படி தடுப்பது? அதுவே யோகம். அதாவது மனதை அடக்கி அறிவில் சாய்த்து விடு. அப்போது உனது பிராண சக்தி விரயமாகாமல் தடுக்கப்படும்.

அங்குதான் மனிதனின் சரீரம் உயிர் பெற்று மரணமில்லாப் பெருவாழ்வு பெற்று விடுகிறது. அதாவது இறப்பை வென்று விட்ட நிலை அது. அங்குதான் உனது உள்ளம் புலன்களில் சாய்கிறது. **புலனடக்கம் ஓங்கி நிற்கும். அங்கு உனது தேகம் "அமர கோசம்"** எனப்படும். அது இறைவனால் தவசிரேஷ்டர்களுக்கு அளிக்கப்படும் அதிமானுஷ சக்தியுள்ள தேகதத்துவ இயக்கமாகும். அங்கு "பெரும் நிஷ்டை" துவங்கும். புலனின் மூலம் இறைவன் அருள். **இந்த அமர கோசம் கொண்ட தேகம் வளர்ந்தால் அது "திருமேனி"யாக வளரும்.** அதுவே "பிரம்ம **நிஷ்டை**" எனப்படுவது. அதன் முடிவு எவருக்கும் தெரியாத ஒரு அனுபவமாகும். எல்லையில்லாக் காலம் கடந்து விட்டாலும் தொடர்ந்து இருக்கும் முடிவில்லாத யோக நிலை அது.

"**திருமேனி**" ஈசுவர தத்துவம் ஆகும். வேத வியாசுர் போன்றவர்கள் கண்ட பிரம்ம நிஷ்டை அதுவே. தபோதனம் என்பர் அந்நிலையை. அங்கு "**அறிவே**" **தெய்வமாக மனிதனுக்குள் இயங்குகின்றது. மெய்ஞானம்**

அங்குதான் கிடைக்கின்றது. தத்துவ ஞான போதம் கிடைக்கும் இடம், அந்த நிலை பிரம்ம நிஷ்டை.

ஸ்ரீ வித்தையின் அம்சம் நிராதார மனோநிலை பெருக்கும். தன்பால் எழும் "அகம் பிரம்மாஸ்மி" பேரறிவு நிலைகளைப் பெருக்கும். "ஞான உள்ளம்" என்பது தோஜோ மயம். அருள் வெளி ஞான பீடம். தேஜோ மயம் என்பது ஞான உள்ளம். பேரின்ப அலைகள் மோதும் அதில். அருள் வெளி அதுதான்.

"அருள்வெளி" என்பது ஞான பீடமாகும். நமது மாயை நீங்கிய (திரோதானம் மறைந்த) பெரும் தவநிலை அது. இறைவனின் அருள் போதம் அங்குதான் கிடைக்கும். நமது விழிப்பு நிலையிலேயே நிராதார மனத்தை (புலனடக்கம் கொண்ட மனம்) அடையும்போது அத்வைத உணர்வு (நானும் இறைவனும் ஒன்று தான் என்ற உணர்வு) மேலோங்கி வரும். ஆனால் ஒரிரு வினாடிகள் தான் இருக்கும். நெரூர் சதாசிவ பிரம்மேந்திராள் அறிந்த அத்வைத அனுபவம் மற்றும் அறிவுத் தோற்றம் அதுவே. ஆனால் அமரகவிக்கு ஞான உபதேசமாக கிடைக்கும். மனிதன் இறைவனுக்குள் ஒன்றி இருக்கும் அந்நிலையில் தான் ஞான உபதேசம் பிறக்கும். நெரூர் ஞானி பெற்ற நிலைக்கு பிரகிருதி லயம் என்றும் வேத வியாசர், அமரகவி போன்றவகள் அனுபவித்தது ஞான உபதேசம் எனப்படும். இரண்டு ஒரே தவநிலை. எதை தருவது என்பதை இறைவன்தான் தீர்மானிக்கின்றார்.

**சகஜ நிஷ்டை**

"நிஷ்டை" என்பது பலவிதம். "சகஜ நிஷ்டை" என்பது ஒரு தனிப் பெருமை வாய்ந்த நிஷ்டையாகும். அதாவது விழிப்பு நிலையில் கூட அத்வைத உணர்வு மேலோங்கி நிற்கும் அதிசயம். நமது சிற்றறிவும் நமக்குள் எழுந்த இறைவனின் பேரறிவு அலைகளும் இணைந்திருக்கும் நிலையாகும். சகஜ நிஷ்டையில் சித் சக்தியின் அலைகளை மனிதன் உணர்ந்து பெற்றுக் கொள்கிறான். "பிரம்ம உபதேசம்" பெறும் தவமுறையாகும். இறைவனுக்குள் நாம் இருக்கும் நமது மெய்மறந்த மெய்ஞான வேளையில் இறைவனின் அருளினால் ஏற்படுவது தான் ஞான போதம். சகஜ நிஷ்டை என்பது தவத்தின் சிகரமாகவுள்ள ஒரு நிலையாகும். அதாவது மனிதன் தனது சாதாரண நிலையிலேயே இறைவனின் பேரறிவு அருள் வடிவாக தனக்குள் புகுந்து செயல்படுவதை உணர்ந்து இறைவனுடன் தொடர்பு கொள்ளும் ஒரு மாபெரும் தவநிலை தான் சகஜ நிணடை. சாதாரண மானிடனுக்கானது அல்ல அது.

மெய் ஞான போதம்

தான் தன்னில் அமர்ந்து தன்மயமாய் இருக்கும் நிலையில் தான் ''ஞான உணர்வு'' தோன்றும். உனது தேகம் அப்போது சுயம்புவாக மாறி இருக்கும். மரணமில்லாப் பெருவாழ்வு என்று வடலூர் வள்ளலார் கூறியபடி. சித்தத்தை அடக்கியிருக்கும் நிலைதான் **''சதாசிவம்''** என்பது. ஞானப்பால் உண்ண உண்ண ''விஞ்ஞான மயம்'' என்ற பேரறிவு. பூமியில் வந்து விடுகின்றான் மனிதன். வேதம், உபநிஷதம் மேலும் **நிஜானந்த போதம்** போன்றவை அந்நிலையில் தோன்றியதே.

''**பரமாத்ம ஞானம்**'' தோன்றும் பூமியான விஞ்ஞானமய கோசத்தை எட்டுவது மிகக் கடினமான ஒரு காரியம். இதற்குத் தடையாக இருப்பவை நமது புலன்களும் அதனால் வீழ்ச்சியடைந்திருக்கும் நமது அறிவும் தான். **அவை நமது தேகப்பற்றில் மறைந்திருக்கின்றன. தேகப்பற்றை** மறப்பது **அல்லது விடுவது சாதாரண விஷயமல்ல.** தேகப்பற்றை விட்டவனுக்கு ஞானபூமி கிட்டும். **தேகப்பற்று ருத்ர பூமியாகும்.**

மனிதன் சுவாசித்துத்தான் வாழ வேண்டும். ஒரேடியாய் சுவாசம் நின்று விட்டால் மரணம் என்று பெயர். எனவே மனிதன் சுவாசத்தைத் தனது உயிர் என்று கருதுகின்றான். உண்மையில் அது அவனது உயிரல்ல. சுவாசம் மனிதனின் உயிர் அழிவதைக் காட்டும் பொருள். உயிர் அழிந்து கொண்டிருக்கிறது. மரணம் தன்னை நெருங்கிக் கொண்டிருக்கிறது. நிலையாக என்றும் அவன் இருப்பதில்லை என்பதைக் காட்டும் உயிரின் வீழ்ச்சி (அல்லது) தேய்மானம் தான் சுவாசம். அதுவே கால மிருத்யுவின் போக்காகும். கால மருத்யு (எமன்) உயிரைக் கரையச் செய்து சுவாசத்தைத் தருகிறான். சுவாசம் உயிரின் அழிவு நிலையைக் காட்டும் பொருள். பிரம்ம ரகசியமாக செயல்படுகின்றது – கால ம்ருத்யுவின் போக்கு. சிற்றறிவு அறியாது அதை.

**எண்ணம் அழிந்தால் சொர்கம்**

எண்ணம் தான் மனிதனின் பெரும் எதிரி. இறைவனையும் மனிதனையும் பிரிப்பது எண்ணம் தான். எண்ணங்கள் ஒய்ந்து தேய்ந்து போக, அதாவது, எண்ணமற்ற நிலை கிடைத்தால் உன் பார்வையில் மனம் செல்லாது. கண்ணிருந்தும் குருடனாக ''**கட்செவி**'' என்றழைக்கப்படும் பாம்பைப் போல திறந்த கண்ணிருந்தும் கண்ணுறங்கும் நிலையைத்தான் யோகத்தில் காணாக்கண் அல்லது ''**கேசரி சித்தி**'' என்று அழைக்கிறார்கள்.

அந்நிலையைப் பெற்று விட்டால் அங்கு நீ "**சதாசிவன்**" ஆவாய். பார்வையில் மனம் எழாத பரிபக்குவ நிலையது. வேதம், உபநிஷதம் போன்றவைகளைத் தந்த **வேத வியாசர், நெரூர் சதாசிவ பிரம்மேந்திரர்** போன்ற சான்றோர்கள் கண்டு அனுபவித்த பெரும் தவ நிலையது.

அறிவில் எண்ணம் பஞ்சபூத நடையாகும். பஞ்ச பூதங்களின் சக்தியை மூலமாகக் கொண்டு செயல்படும் (தன் மாத்திரை) புலன்கள் பூத நடையில் உள்ளன என்பது அதன் பொருள். அறிவில் எண்ணத்தைத் தடுத்து விட்ட பெரும் நிலைதான் "மேரு" என்று அழைக்கப்படுகின்றது. **ஸ்ரீ சக்ரத்தின் மத்தியிலுள்ள மேரு என்ற பகுதி இவ்வாறு எண்ணமற்ற அறிவு நிலையைக் குறிக்கிறது.** அந்நிலையில்தான் இறைவன் தவசீலர்களுக்கு பிரம்ம உபதேசதத்தை அளிக்கின்றான். மனிதர்களின் தேகநிலை அங்கு "பரமாகாசம்" என்று அழைக்கப்படுகிறது. இறைவன் அருளாளர்களிடம் குடிகொண்ட நிலை அதுதான். **ஞான சம்பந்தர், ஒளவை, அமரகவி, நம்மாழ்வார்** போன்றவர்கள் கொண்ட தவநிலை அது.

அந்த பரமாகாசம் என்ற பெரும் தவநிலையில் **பிரம்ம உபதேசத்தை இறைவன் செய்யும் போது யார் சொல்வது? யார் கேட்பது? ஞானக்குரல் அது.** *சோடச மகா சித்தியின் பெருமை அது.* "ஞானக்குரல்" என்பது **கேட்காமல் கேட்கும் அறிவு. அங்கு சொல்வது இறைவன், கேட்பது யார்? கேட்பது உனது "எண்ணமற்ற உணர்வு" – சோடச மகா சித்தி என்பது அதுதான்.** சித்தம் புலன்களை மீறிய நிலையது. புலன்கள் சித்தத்தை ஆட்டி வைக்க முடியாத தவநிலையது – "அகார இல்லம்" – அங்கு ஏற்படுகிறது. **நீ இறைவனில் அமர்ந்து இருக்கும் நேரமது. இறைவன் உன்னை ஆட்கொண்ட** தவத்தின் சிகரமான அங்குதான் ஞானக்குரல் **கேட்கும். ஈசன் செயலில் ஏற்படும் அனுபவம் (அல்லது) சித்தி அது.** மனிதனின் முயற்சியால் ஏற்படுவது அல்ல. வேத வியாசர் போன்றவர்கள் கண்ட அனுபவம் அதுதான். **அதுவே அமரனின் வெற்றிக் கொடி.** அமரகவியின் அருள் ஞான விளக்கப் பாடல்கள் இங்கு தரப்பட்டுள்ளன. அதனைக் கண்டு தெளிவு பெறுவோமாக.

**ஓம் தத் சத்**

# அமரகவியின் முயற்சியும் தேர்வும்

(வேதம் – உபநிஷத் எழுந்த அறிவு நிலைப்பெறல்)

## பிரம்ம ரிஷிகளின் யோக நிலை

**அமரகவி சித்தேஸ்வரர்**

"**அமரகவி**" என்பார் தாம் தம்மில் அமர்ந்த பிரம்ம ஞானி

தேக உணர்வை அறிவில் கோர்க்க அந்நிலை கூடும்.

கவி வாக்கில் மறைந்து இயங்கும் "**அகார ஒலியின்**"

அதிநுட்ப பேரறிவு அலைகளை தாங்கிய நிராதார மனம்.

**அருள் விழிப்பு:**

ஆதிசங்கரரின் "**பஜ கோவிந்தத்தில்**" கூறப்படும்

நிச்சலத் தத்துவம் என்ற "**அருள் விழிப்பு**" அதுவே

ஈசன் பால் எழும் அனுக்ரக வாக்கு.

அதன் நுட்பம் யாரறிவார்? – சொல்ல இயலாததன்மை.

அந்த அறிவே இந்நூலின் அடிப்படை.

மூடனும் ஞானியே அன்று – அமரன் அவன்.

தாம் தம்மை உணரும் பேரறிவும் – அதன் மீட்பும்.

நற்தவம் அதனைச் சாறும்.

1. "**திரோதானம்**" படைப்பு நிலம்,
பூத உடல் அதன் கிரியா வடிவம்,
ஐம்பூத உணர்வே அதன் போக்கு.

2. உணர்வு ஏழு படிகள் கொண்டது.
"**உள் மூன்றும்**" பேரறிவின் பால் இயங்கும் மனம்.
அதன் ஸ்வீகரிப்பே "**மெய்ஞ்ஞான உணர்வு**"
தபோ சக்திகள் நிறைந்த அதிமானுஷப் பிரவாவம்.

3. "பஹிர்" நான்கும் உடல் இயக்கத்தில் "**மனோவிருத்தி**"
சரிய சரிய, ஆத்மீக உணர்ச்சி எழும்.
**குண்டலினி எழுவது வேறென்ன?**
நோக்கு அதில் **மனோலயம்.**
**மூல அனல்** எழும் அதில் சீரி எழும்
ஆதாரத்தீ உயிர்ப்பு அதனை நாட,
மனம் தளரும்.
உயிர்ப்பு அதி சூஷ்ம பிரான வியக்திகள்
இரண்டின் கோர்வையே "ஞான உபதேசப்படலம்"
இந்நூல் அதன் வாய்ப்பு.

4. உயிர்ப்பும் ஆதாரத் தீயும் ஒன்றே.
அதுவே சிருஷ்டி மூலம்
ஆதார வடிவம் அதன் செயல்
தோன்றி மறைவும் சரீரம்
தாய் மூலம். அதுவே "**யோகாக்னி.**"
யோக முயற்சியில் தன் வசம் அமைய
அது எழுந்த பின்னே
"**விஞ்ஞான மயக்கோசம்**" இயங்கும் உன்னில்.
அதன்பால் மனம் உடலை "தேவ கதியில் வளர்க்கும்."
"**தேவ கதி**" யானது "**யோக திருஷ்டியும் மூலம்தான்**"

தன்னையறிதலும் இயற்கையின் நாட்டம்
அதில் தன்மயமாக்குதல்.
அங்கு அறிவே ஆற்றலுமாகும்.
"**வசித்துவம்**" என்ற மகா யோக சக்தியின்
நிர்ணயம் அதுவே சிந்தையை நாடி.

5. புலடைக்கம் உடம்பை வளர்க்கும் உபாயம் – **சித்த விருத்தி**
உள்நோக்கிப் பாய. அமரகவியின் சாதனை இங்கு முதற்படி.
உடல் இழக்கும் அதில். அதி சூஷ்ம உயிர்ப்பு வியக்திகள் –
மயிர்க்கால் வழி அதன் சேதம்.
ஆதாரத்தீ எழும் அந்த உயர்ப்பு வியக்திகள்
உடலை நாட, "**கேவல கும்பக**" அனுஷ்டான சித்தியில்
"**இடா, பிங்களை**" சமன்வய தேக வேகம் அதில்.

6. உயிரும் உடலும் ஒன்று படும் அதில்.
உடல் ஸ்வீகரிக்கும் பிரான **க்ஷயத்தை**.
உயிர் பால் எழும் நாடிகள் தளராது இனி.
"**திருமேனி**" அதன் செயல் தேகம் அதன்
அமைப்பில் நிரந்தரம். மகா தபஸ்விகளின் உடல்நிலை அது.
உடலை நாடும் அதில் சிருஷ்டி கர்த்தவ்யம்.

7. ஸ்தூல சூஷ்ம தேக வியக்திகள் ஒன்று கூடி இயங்கும் அவர் பால்.
ஸ்தூலம் பூத உடல். பிறப்பின் மூலம்.
அதன் சூஷ்ம வடிவம் "**மெய்ஞ்ஞான உணர்வு**"
("**விஞ்ஞான மயக்கோசம்**") அறிவில் தோன்றும்
"**பிரம்ம விருத்தி**" – அதனைப் பெறுவதே "**சோடச கலையின்**
**மர்மம்.**" வேதம் புகட்டும் "**அகம் ப்ரும்மாஸ்மி**"
என்ற மகா வக்கியத்தின் தத்துவார்த்தம் அதுவே.
மனம் அதில் – **அறிவாயலம்**. "**விசுத்தி பீடம்**" அதுவே.
"**நோக்கில்**" இழந்த பிராணக்ஷயம் உடலில் கைக்கூட.

**"நோக்கு உயிர் மூச்சின் பிரிவு"**
உடலில் அதன் அலைகளை உள்ளடக்கி யாள
தேக க்ஷயம் நீங்கும்
மேற்படிகள் **"ஞான பீடம்"** ஆகும்.

8. ஆதாரத்தீ எழ, உஸ்வாச, நிஸ்வாஸங்கள் சமன் வயமாகும்.
**"யோக நித்திரை"** துவங்கும் அதில்,
தேக புற நடை அனைத்தும் தன்னில் சாயும் நேரம்.
வளருமதில் **"சோடசக் கலை"** –
**மெய்ஞ்ஞான உணர்வு.**
**"துரியம்"** என்பார் அதன் எழுச்சியை.
**ஸ்ரீ வித்தையின் பூர்த்திக் கட்டம்** அதுவே –
(இறைவன் தாள் வணங்கி) அமரகவியின் தேர்ச்சி
அதில் பரிபூரணம்.

9. அமானுஷ தேக அமைப்பு கைக்கூடும்.
மனதில் உயிர்ப்பு எழ. சோடச கலையின் சிறப்பு அதுவே.
உள் நாக்கு **"சக்தி பீடம்"** – அருள் வாக்கு எழும்
**"ஞானபூமி."** அதிநுட்ப அறிவில் தோன்றும் **ஈஸ்வர சம்பத்து.**
இந்நூலின் பெருமை அதனையேச் சாரும்.
வேத மூல உணர்வும் அதுவே. **திருமேனி**
மறுமலர்ச்சி அடைவிக்கும் வியக்தி மூலமே –
அந்த அதிநுட்ப **"விநாடியே வந்து மறையும்."**
பெரு நாக்கு குரல் வழியில் மனம்.
**பேச்சில் அழியும் நாத அலைகள் "உயிர் மூச்சாகும்."**
பேசப்படும் அது நழுவும் தேக இயக்கத்தில் புற நடை
இயக்கம் புலன்வழி மனம் சிதறும் போது உயிர்ப்பானது
அதில் தேக வசம் விரியும்.
அந்த விரிப்பே சிறுமூச்சு ஆகும். அதை யடக்கியாள
**"திருமேனி"** உன் வசமாகும்.

10. "திருமேனி" என்பது மெய்ஞ்ஞான நுட்ப அறிவு அலைகள்
தறிக்கும் மனம். புலனடக்கத்தின் உச்ச கட்டம் அதுவே.
உச்சி என்பது புலன் வழி பாயும் மனம்.
பிறப்பு வடிவம் அதன் இயக்கம் – அறிவு
உணர்ச்சியில் சாய உணர்ச்சி தேக பற்று ("ஸ்பரிசம்")
அதனை மீறுவது வெகுக்கடினம்.
அது நீங்கா நீங்கிய நிலையேயளிக்கும், "ஞான திருஷ்டி"
சமன் வீதிகள் அவை புற உணர்ச்சியில்.
கீழது மூன்றும் தன்பால் இயங்க சோடஸத்தின் சிறப்பு.
அதனை மேற்கொள்ள திருமேனியாகும் –
சித்தர்கள் வாழும் இல்லம்.

11. "சங்கநாதம்" இருமுறை கேட்கும், கீழ்மேல்
தேக அம்ஸப் புணர்ச்சியில்.
தேவ ரக்ஷை அது, மேலும் மேலும் வளர.
அதில் முழுவளர்ச்சி, ஈசன்பால் உள்ளமும்,
அவன் அனுக்கிரக கடாக்ஷத்தில், பூலோக வாழ்வும்.

12. தேக நடையதில் "சிதாகாசம்" –
உள்ளம் பரமாத்ம நிலையம்.
ஈசத்வம் அதன் பெருமை, எங்கும் நிறைந்த பரமன்
தன்னையாட்கொள்ள அதுவே "பரமபதம்."
"ஞானப்பால்" உண்ட அதிநுட்ப பேரறிவில்
மலரும் "அருள் வாக்கு" பரமன் தன்னையாட்கொண்டு
அருளும் நேரம். அந்த பரம அருளே உன் காப்பு
இல் வாழ்விலும் என்றும்.

# தத்துவ ஞான போதம்

(இந்நூல் சாரம்)

**மானிட உடல் ரகசியம்:**

ஸ்ரீ வித்தையின் அனுபவ கிரந்தம், **அத்வைத சித்தந்தமும்** கூட தபசின் சிகர நடை, மெய் ஞானயின் நிஷ்டை அநுபவம் "**அமர கவி**" "**அகாரம்**" தேக வித்து – "**ஞான குரல்**" அதில் இந்நூலின் ஆசான்.

**பிரம்ம நிலை** அதில் **மெய் ஞான உபதேசம்**

சித்தத்தில் எண்ணத்தின் அசைவு நிற்க.

1. பரமன் இல்லம் ஞான பூமிகை உடல் பஞ்ச கோசம்.
   பஞ்சகோச இடைவெளி இந்திரியம் நான்கும் ("ஜன்ம பூமி")
   **ஞான உள்ளம்** அதன் கோர்வை, ("**நிச்சல் தத்துவம்**")

2. சித்தத்தை அடக்கி ஆள இயற்கை தன்வசம் அறிவில்
   ஒடுங்கும் இந்திரியம் நான்கும் – அறிவு, "**துரியம்,**"
   **துரியாத்த ஞான உள்ளம்.**
   ஒடுங்க, ஒடுங்க ஞான போதம் பிறக்கும்.
   உரைப்பது பரமன் – தன்னைத் தான் இழக்க
   பெரும் நிலை அது – "**பிரம்ம நிஷ்டை**"

3. பஞ்ச கிருத்திய நடனம் அதில் அடக்கம்
   பஞ்ச கிருத்தியம் – **ஜாக்கிரதம், ஸ்வப்னம், சுஷீப்தி, துரியம், துரியாதீதம்,** சருமநடை – பிரேத உலகம்
   தோன்றி மறையும் வியக்தி.

4. இவை அனைத்தும் அடக்கி ஆளும் சக்தி "**திருமூச்சு**"
   திருமூச்சு தேவ சக்திகள் நிறைந்த – **நிச்சல தத்துவம்**
   "**சிறு மூச்சு**" – அதன் தளர்வு,
   கால ம்ருத்யு போக்கில்.

5. பிறப்பில் உடலும் உயிரும் கூடி நிற்கும் – **உயிர் பஞ்சகோசம்**

தேக உணர்வு அதன் சரிவு

உள்ளம் **விக்ஞானம்** நாட

தேக நடை பிறப்பின் போக்கு.

6. இந்நிலை அறிது அறிது மானிடர்க்கு

தேகமதில் சுயம்பு நாடும் – சுயம்பு தன்னில் தான் இயங்க

**"விஞ்ஞானமயப் ப்ராப்தி" – "ஏகாக்ர பூமி"**

சித்த சலனம் அற்ற அது கூடில் **ஞான உபதேசம்** பிறக்கும் –

**ஞான உள்ளம்** வேறென்ன.

7. புலன் நான்கும் ஒடுங்கும் நேரம்

தேயு உன் வசம் அன்று

சித்தின் அலைகள் அவை

தேக போக்கு அதில் **"நிராதாரம்"**

8. சிந்தை அதில் பிராண கஷயம் மீட்கும்

மீட்க மீட்க **ஞான உள்ளம்** புலன்வழி எழும்

தான் தன்னை அறிதலாகும்

நீ புலன் அறிவு – அவன் மெய்ஞானம் – சர்வ லோக ரக்ஷகம்

9. உன்னில் நீ – **"காய கற்பம்"**

தேக ஒட்டம், தேக மூலமிடம் நங்கூரமிட

புஜண்டர் வாக்கு வெட்டாத சக்கரம் வேறென்ன

இந்நூல் அதன் பயிற்சி.

10. தேக மூலம் "பரமாகாயம்" – தேவன் இல்லம்

தண்ணைத்தான் இழக்க – கூடும் நிலை

ப்ரம்ம **நிஷ்டை** அதன் தேர்வு

நீயும் பரமனும் ஒன்று அதில்.

11. வெட்டாத சக்கரம் ஞான உள்ளம்
தன்னில் நான்கு, பரமனில் மூன்று
அவனில் நீ, "ஞான உபதேசம்"
உன்னில், அது "காய கற்பம்."

12. பெரும் தவ சித்தி அது
பிரேதம் உயிர்ப்பித்து வாழ
கேட்கும் அதில் "ஞானக் குரல்"
அன்று "வேதம்" – இன்று "இந்நூல்".

13. உயிர்ப்பு தேக வசம் – "சகஜ நிஷ்டை"
சிறுமூச்சு வாக்கின்பால் அமர
சோடசம் கைக்கூடும்
ஸ்ரீ வித்தை கடையம்சம்

14. சொல் அடங்க கேட்கும் "ஞானக் குரல்"
"பரா", "பஸ்யந்தி" – ஞானபூமி
"மத்யமை" உன்சொல் – எண்ணத்தின் அசைவு – புலன் ஓட்டம்
தேக நடை அதுவே – கற்ப ஓட்டம்.
"வைகரி" சொல் கடந்த துரியம், தன்னில் ஊன்றி
புலன் நான்கும் உறங்க – "நித்திரை"
விழித்துறங்க – "யோக பீடம்"
தேர்ச்சி அதில் – "பிரம்ம நிஷ்டை"

15. தேக காப்பு உன்னில் நிராதார இயக்கம்
அதுவே "ஷட்சக்கர சித்தி"
"மன ஓசை" புலன் இயக்கத்தில் ஒடுங்க
நாபி, இருத், கண்ட, ரசனா அதன் நடை.

16. மனஓசை சொல்லின் இயக்கம்
"அர்த்த மாத்ரா" வெளிநடப்பு
"சோடஸம்" நிராதார ஒலி – "பிரணவ மூலம்"
சித்தின் அலைகள் அறிவை தூண்ட
"மூலாதாரம்" வேறன்ன–
என்னறிவு நிலையின்று
மூலகணபதியின் அனுக்கிரக ரக்ஷகம்

17. சொல்லில் நின்ற மனம் பிராண இழப்பு
மனம் அறிவில் சாய பிராண மீட்பு
பிரேதம் "உயிர்ப்பித்து" வாழும் அதில்
பூத உள்ளம் புலனில் சாய.

18. தேகம் அதில் "அமர கோசம்"
பூத உணர்வு இழக்க பிறப்பில் சரியும் அது
"கால மிருத்தியு"வின் போக்கில் – ஏழு பருவம்
(உதரம் தாங்கும் தேக தத்துவமனைத்தும் – சித்தத்தில் ஒடுங்க)
"அமர கோசம்" தேக நடை இனி உன்னில்
ஈசுவர ரக்ஷகம் புலனின் மூலம் நிஷ்டை கவர.

19. "திருமேணி" அதன் வளர்ச்சி
பிரம்ம நிஷ்டை ஓங்கி நிற்க
யாறிரிவர் அதன் முடிவு தேர்ச்சி
எல்லையில்லா காலம் கடக்க கடக்க

20. "திருமேனி" ஈசுவர தத்துவம்
உன் அமைப்பு அதில் நிஷ்டை ஊட்டும் அறிவு "தபோ தனம்,"
அறிவே தெய்வம் – மெய்ஞானம் – தத்துவ ஞானபோதம்
அமரகவியின் அறிவு நிலை இன்று.

**ஸ்ரீ வித்தையின் அம்சம் – நிராதார மனோநிலை பெருத்தும், தன் பால் எழும் ஞான விருத்தி – அகம் பிரம்மாஸ்மி – பேரறிவு நிலைகளை பெருத்தும்**

21. ஞான உள்ளம் "**தேஜோமயம்**"
பேறின்ப அலைகள் மோதும் அதில்
அருள் வெளி அது – "**ஞான பீடம்**"
"திரோதானம் மறைந்த நிலம்"

22. பரமன் அநுக்கிரகம் மேலிடும் அதில்
ஜாக்கிரதம், நிராதாரம் நிறைவு பெற
**அத்வைத உணர்வு** அதில்
ஓர், இரு ஷணம் அமரகவியின் சகஜ நிஷ்டை
சித்தின் அலைகளை ஸ்வீகரிக்க.

23. அவனில் நான் நிற்கும் நேரம்
அளித்தான் **ஞான போதம்**
நான் எளியேன் அதற்கு
எல்லாம் ஈசன் செயல்

24. நெரூர் சதாசிவ பிரம்மேந்திராள் அறிவு தோற்றம்
"**சர்வம் பிரம்ம மயம்**" என்னில்
அது "**ஞான உபதேசம்**"
மானிட சரீர அமைப்பு ரகசியம்.

# மெஞ்ஞான போதம்
## (அமரகவியின் கல்வி)

தான் தம்மில் "ஞான உணர்வு"
புலன் தடை மீறி
தேகம் அதில் "சுயம்பு"
கால மிருத்யு அகல.

அமரன் இன்று "சதாசிவன்"
ஞானப்பால் உன்னை உன்ன
விக்ஞானம் தந்திடும் வரம்
இந்நூல் அதன் பெருமை.

சதாசிவன் யார் – ஞானபூமிகை
புலன் நான்கும் அதன் எதிர்ப்பு
அறிவின் வீழ்ச்சி – தேகபற்றில்
ருத்திர பூமிகை அது – நீ நிற்பது இன்று.

சுவாசம் உயிரல்ல – அதன் வீழ்ச்சி
சடலம் அதன் போக்கு
கால மிருத்யவின் அமைப்பு
பிரம்ம ரகசியம்.

என் வழி பெரியோர் பலர்
மனதில் நிராலம்பம் பெற்று
நிச்சல தத்துவம் அது
பெரும் நிலை அது – எண்ணம் சாய.

தேகம் அதில் ஸ்பூரிக்கும் பிராணக்ஷயம்
புலன் நான்கும் ஏகோபித்து எழ
கேவலம் அதன் கோர்வை
எண்ணம் தேயத் தேய.

எண்ணம் உன் சத்ரு
பார்வையில் எழுந்த மனம்
கற்ப ரகசியம்
அதுவன்றி நீ சதாசிவன்.

எண்ணம் பூத நடை அறிவில்
வெகு கடினம் அதவை மீற
மேரு அதனின் சின்னம்
பிரம்ம உபதேசம் போதபடி என்னில்.

ஸ்ரீ வித்தையின் பூர்த்தி இன்று
எண்ணம் அந்த போதம்
உன் கூடு அதில் – பரமாகாயம்
தேவன் இல்லம் அது உன்னில்.

நான் பெற்ற பாக்கியம். அதுவே இன்று
சோடசத்தின் பெருமை
ஞான குரல் வேறென்ன
கேட்காது கேட்கும் அறிவு

சொல்வது பரமன் – கேட்பது எண்ணமற்ற உணர்வு
சோடசத்தின் சிறப்பு – சித்தம் புலனை மீறி,
அந்நாள் தேகம் அதன் வட்டம்
அகார இல்லம் பரமனில் அமர்ந்து.

ஓர் இரு க்ஷணமே என் பாக்கியம் இன்று அதில்
நான் ஏது அதில் – அவன் ஆட்கொள்ள
கடை நிலை அது – தபசின் சிகரம்
எல்லாம் ஈசன் செயல் – அதுக்கிரகம் எழில் உன்னில்.

அமரகவி சித்தேஸ்வரா

<u>**பகுதி – 2**</u>





# வாசகர்களுக்கு ஒரு விண்ணப்பம்

**படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்** என்கிற ஐந்தொழில்களும் இறைவனின் திருவிளையாடல்கள் ஆகும். படைப்பில் மாயையை வைத்து இறைவன் மனிதனின் புலனடக்கத்தைத் தடுத்து இருக்கிறான். இதனால் **மனம், புத்தி, சித்தம், அகங்காரம்** என்கிற தத்துவங்கள் மனிதனுக்குள் விகாரமடைந்து "**ஆத்மபோதம்**" பெறுவதைத் தடுக்கின்றன. இந்நிலையில் மனிதன் இயற்கைச் சக்திகளின் ஆதிக்கமான **மூச்சு, பேச்சு, எண்ணம்** போன்ற தேக இயக்கங்களைத் தாண்டித் தியானம், சமாதி என்கிற பெரும் நிலைகளை அடைய வேண்டும்.

அங்குத்தான் பரமாத்மாவுடன் இரண்டறக் கலந்து "**அருள் வடிவான ஞானத்தைப்**" பெற முடியும். அடியார்கள் யாவரும் அந்நிலை அடைந்துதான் பேறு பெற்றனர். ஆக, மாயையின் இத்தடைகளைத் தாண்டிச் சென்று இறைவனுடன் உறவாடும் யோகச்சாதனையைச் செய்யவே முன்னோர்கள் பல வழிகளை வகுத்திருக்கின்றனர். அவற்றுள் சிறப்பானவை:

1) "ஸ்ரீவித்யா உபாசனை மார்க்கம்,
2) ஸ்ரீ சங்கரரின் அத்வைதச் சித்தாந்தம்,
3) பதஞ்சலி முனிவர் வகுத்திருக்கும் **அஷ்டாங்கயோகம்**" என்பன.

• "சித்தத்தை அடக்கி சும்மாயிருக்கும் திறனைப்" பெற உதவும் இம்மூன்று ஆன்மிக வழிமுறைகளையும் இணைத்துத் தனது சுய அனுபவத்தில் ஸ்ரீமகா கணபதியின் உபாசனைமூலம் அனுபவித்த "**அருள் ஞான உபதேசங்களைத்**" தனது சொந்த செலவில் இரண்டு நூல்களாக ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார் பிரம்ம நிஷ்டாள் ஸ்ரீஅமரகவி இராமச்சந்திரா அவர்கள். இவர் **காஞ்சிப் பரமாச்சாரியார்யாள்** (ஜகத்குரு) **ஸ்ரீ. ஸ்ரீ. சந்திரசேகரேந்திர மகாசுவாமிகள்** மற்றும் **சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ. ஸ்ரீ. சந்திர சேகர பாரதி மகா சுவாமிகள்** ஆகியோர்களுடன் ஏறத்தாழ ஐம்பது ஆண்டுக்காலம் தொடர்பு கொண்டவர். பலவித ஆன்மிக, தத்துவ, தெய்வீக விஷயங்களை அவர்களுடன் கலந்து கருத்துகளைப் பரிவர்த்தனை செய்துகொண்டவர். முதல் நூலை ஸ்ரீபரமாச்சார்யார்யாள் அவர்களுக்கு "**அன்புச் சின்னமாகச்**" சமர்ப்பித்த இவர், அதில் வேதாந்த, ஆன்மீக, யோக மார்க்கங்களை (அருட் பாக்களாக உதித்தவற்றை) (தமிழில்) சேர்த்திருக்கின்றார். வேதம், உபநிஷத், கீதை இன்னும் சமஸ்கிருதம் கூட

தெரியாத ஒருவன் ஆங்கிலம் மட்டும் தெரிந்தால் போதும். 'நிஜானந்த போதம்' என்ற (ஆங்கிலம்) புத்தகத்தைப் படித்து அறிந்து கொண்டு விட்டால் மேற்கூறிய வேதம் போன்றவைகளில் இல்லாத கூறப்படாத உண்மைகளைக்கூட அறிந்தவனாகி விடுவான். அத்துனை ஆன்மிக விஷயங்கள் கொண்ட அந்த புத்தகம் மறுபதிப்பு (திருத்தியது) ஆகப்போகிறது. காத்திருந்து பயன் பெற வேண்டுகிறேன். மேலும் பக்தகோடிகள் விருப்பத்திற்கேற்ப அதனை தமிழில் மொழி பெயர்ப்பு செய்யும் எண்ணமும் தீவிரமாக உள்ளது என்பதை இங்கு கூற விரும்புகின்றேன். மக்கள் இவைகளைப்படித்து இறையுணர்வு மேலோங்கி விளங்க வேண்டும் என விரும்பும் எளியேன்

இவண்,

(வி. ஆர். விஜயகுமார்)



# ஓங்காரமும் கணபதியும்

***ஷட்சக்கரம்***

மனித உடலில் ஆறு ஆதார சக்கரங்கள் உள்ளன. அவை முறையே கீழிருந்து மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி இவற்றுக்கு மேலாகச் "சகஸ்ராரம்" என்ற ஸ்தானம் நமது சிரசின் மேல் உள்ளது. இதைத்தான் "உச்சி" என்று நாம் அழைக்கிறோம். ஆங்கிலத்தில் இதனை "CEREBRUM" என்று அழைக்கின்றனர்.

இப்படி நமது உடல் இயற்கையின் செயலினால் இயங்கக் காரணமாகவும், ஆதாரமாகவும், உள்ள இந்த ஆறு நிலைகளைத் தான் யோக சாத்திரம் "ஷட் சக்கரம்" அல்லது "ஆதாரச் சக்கரம்" என்று அழைக்கிறது. இவை நமது முதுகெலும்பின் முன்னும், பின்னுமாக உள்ள சூட்சும நிலைகளைத் தவிர வேறு ஏதுமில்லை.

இந்த ஆறு ஆதாரச் சக்கரங்களுக்கு முறையே ஒவ்வொரு தேவதை அதிபதியாக உள்ளனர். முதலாவதாக மூலாதாரம் என்ற சக்கரத்தின் அதிதேவதை "ஸ்ரீ மகா கணபதி" ஆவார். ஸ்ரீ வித்யா உபாசனை எனப்படும் தேவி•வழிபாடு அல்லது ஸ்ரீ சக்கர பூஜா விதிகளிலும் இவ்விடத்தைக் கணபதியின் ஸ்தானமாகக் கொண்டு சிறப்பாக இதனைச் சார்ந்த பூஜைகள் ஜபங்கள் போன்றவைற்றைச் செய்து ஸ்ரீ மகா கணபதி (ஸ்ரீ வித்யா கணபதி) அருள் பெற்று ஸ்ரீ சக்கரப் பூஜையின் பூரண நிலையை சாதகர்கள் அடைவது வழக்கம்.

இனி. "ஓம்" என்ற பிரணவத்திற்கும் யோக முறைகளுக்கும் உள்ள தொடர்பையும் அதன் ஆதாரத் தேவையான ஸ்ரீ மகா கணபதியின் முக்கியத்துவத்தையும் காண்போம்.

இறைவனே "ஓம்" என்னும் பிரணவ வடிவமாகச் செயல்பட்டுச் சகல புவனங்களையும் இயக்குகிறான் என்பது வேதங்கள் முதல் சகல சாத்திரங்களும் அறிந்த உண்மை. "ஓம்" என்ற பிரணவத்திடமிருந்துதான் ஐந்து மகா பூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பன தோன்றின. திருமூலரும் இதனைப் பின்வரும் பாடல்களால் விளக்குகிறார்கள்.

ஓங்காரத் துள்ளே உதித்த ஐம்பூதங்கள்
ஓங்காரத் துள்ளே உதித்த சராசரம்
ஓங்கார தீதத்துயிர் மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே.

திருமந்திரம் பாடல்

இப்படிப்பட்ட ஓங்காரம் எப்படி நமது ஆதாரச் சக்கரங்களுடன் தொடர்பு கொண்டுள்ளது என்பதனை இங்குக் காண்போம்.

## பிருத்வி தத்துவத்தின் அதிபதி

நமது உடலின் ஆறு ஆதார சக்கரங்களில் முதலாவதான "மூலாதாரம்" நமது நாபிக் கமலமாகச் செயல்படுகிறது. நாபியில்தான் "மண்" என்ற ஐம்பூதங்களில் ஒன்றான தத்துவம் குடிக் கொண்டுள்ளது. மேலும், இங்குதான் மண் தத்துவமானது, நமது தேகத்தில் மூலப்பிராணன் மனத்தின் "செயல்" மற்றும் "தேகம்" எனப்படும் நமது நுண்ணுடம்பு ஆகிய மூன்றும் இணைந்த ஆதிச் சக்தியாக செயல்படுகிறது. மூலகணபதி எனப்படும் ஆதி தேவதையே இந்த மகா சக்தியின் அதிபதியாவார். இவரே நமது மூலப் பிராணன் அல்லது உயிர் நிலையானது புலன்களின் செயல்களாலும் இயற்கையின் பாதிப்பாலும் செயலிழந்து, தெய்வத் தன்மையை இழந்து, புலன் வழி செல்லும் மனம், புத்தி மற்றும் ஸ்தூல சரீர இயக்கத்திற்கு ஆதாரமான சிறு மூச்சாகவும் செயல்படுகிறது.

அதாவது, மனிதனின் புலன்கள் செயலற்று நின்று விட்டால், மூச்சு நின்று விடும். உயிர் உடலை விட்டு நீங்கி விடும். எனவே, உயிரும் உடலும் இணைந்திருக்கும் அல்லது மனிதன் உயிரோடு இருக்கும் நிலைக்குப் புலன்கள், மூச்சு தேக உணர்வு, தேக உறுப்புகளின் இயக்கம் என்பன அவசியமாகின்றன. புலன்களாக இவை யாவும் அடங்கிய நிலைதான் சாதாரண மனிதனுக்கு இறப்பையும், தெய்வப் புருஷர்களுக்கு இறப்பைப் போன்ற நிலையான சமாதி என்ற யோக நிலைகளையும் தருகிறது. எனவே, நமது விழிப்பு நிலைக்கு ஆதாரமான தேக மற்றும் புலன்களின் செயல்கள் நடக்க நமது தெய்வீகத் தன்மை செலவாகிறது. இதனைத் தடுத்துச் சமாதி அல்லது நிஷ்டை கைகூடுவதே யோகச் சாத்திரத்தில் பெரும் சித்தியாக வருணிக்கப்படுகிறது. இப்படி தெய்வத் தன்மை, புலன்களாக மற்றும் தேக இயக்கமாக மாறி செயல்படும் தத்துவத்திற்கு அதிபதியே இந்த மகா கணபதியாவார். எனவேதான் அசையும் அல்லது இயங்கும் உயிர்கள் பொருட்கள் யாவற்றிற்கும் அதிபதி இவரே என்றும் எல்லாக் கணங்களுக்கும்

தலைவர் இவரே என்பதால் இவரை கணபதி என்றும் வேத சாத்திரங்கள் வருணிக்கின்றன.

மேற்கூறியபடி மூலப் பிராணன் மனம், தேகம், (மனம், வாக்கு, காயம் எனப்படும் திரிகரணங்கள்) மூன்றும் இணைந்த நிலையில்தான் நமது தெய்வீகத் தன்மை வெளிப்பட்டு, சித்திகளும், தெய்வ நிலைகளும் கிடைக்கின்றன. இந்த (திரிகரண சுத்தி) மனம், வாக்கு, காயம் என்ற மூன்றின் இணைந்த உத்தம நிலையைத்தான் **பிருத்வி** அல்லது **மண்** என்ற ஐம்பூதத் தத்துவம் விளக்குகிறது. இந்த மண் என்ற தத்துவத்தின் அதிபதிதான் ஸ்ரீ மகா கணபதி ஆவார். இதனைக் குறிக்கவே களி மண்ணினால் பிள்ளையார் பிடித்து வழிபடும் வழக்கத்தை முன்னோர் ஏற்படுத்தியுள்ளனர். அவ்வாறு, களிமண் **பிருதிவி தத்துவத்தை** உணர்த்துகிறது.

நமது உயிர் நிலையின் ஆதாரத்தைக் கொண்டு ஏற்படும் இந்தப் பெரும் யோகப் பீடத்தைத்தான் "**சக்தி பீடம்**" என்று அழைக்கிறோம்.

ஸ்ரீ மகா கணபதியின் ஆதிக்க கோட்டையான மூலாதாரமும் நாபிக் கமலமும் எப்பொழுதும் இணைந்தே செயல்படுகின்றன. கர்ப்பத்திலேயே இந்த இணைப்பு ஏற்பட்டு விடுகிறது. மூலாதாரம் இரண்டு நிலைகளைக் கொண்டது. புலன்களின் செயல்களை உருவாக்க நாபியாகவும் புலனடக்கத்தில் அல்லது யோகச் சமாதியில் சகஸ்ராரம் என்ற நிலையின் பகுதியான பிரம்ம ரந்திரம் என்ற ஆதார நிலையாகவும் செயல்படுகின்றது. இவைற்றைத் தான் **மேல் மூலம்** என்றும் **கீழ் மூலம்** என்றும் பண்டைய யோக நூல்கள் வர்ணிக்கின்றன. பிறந்தவுடன் நமது நுண்ணுடம்பு செயலிழந்து ஸ்தூல தேகத் தத்துவத்தின் அடிமையாக மாறுகிறது. இதனால், நமது தெய்வீகத் தன்மை பிறந்தவுடன் செயலிழந்து ஞான திருஷ்டி என்ற (மூன்றாவது கண்) சக்தி இழக்கப்பட்டு வெளி உலகத்தில் புலன்கள் செயல்பட்டு லயித்து விடுகின்றன.

***சப்த பிரம்மன்***

இதனை மீறி மீண்டும் கர்ப்பத்தில் நாமிருந்த நிலையான "சமாதி" அல்லது "யோக **நித்திரையை**" அடைவதே யோகத்தின் சாரம் அல்லது "அஷ்ட மகா சித்தி" என்று பலவாறாக அழைக்கப்படுகிறது. எனவே, பஞ்ச பூதங்கள் பிறப்பில் பிரிந்த நிலைக்கு ஆளானதைத் தடுத்துப் பஞ்சபூதங்கள் ஒன்று சேர்ந்த நிலையான **பிரணவத் தேகத்தை** அடைவதே

"யோகம்" எனப்படும். இந்நிலைக்கு அதிதேவதையே ஸ்ரீ மகா கணபதியாவார். மூச்சையடக்கி யிருக்கும் கும்பகம் என்ற நிலைக்கு பின் மூச்சே உயிராக மாறிவிடும். பெரும் யோக நிலைக்கு அதிபதி இவரே. நமது மூலப் பிராணன், விசுத்தி என்ற ஆதார நிலைக்கும், ஆக்ஞா என்ற நிலைக்கும் இடையில் மேலும் கீழுமாக மாறி மாறிச் செயல்படுகிறது. திரிகரண சுத்தி எனப்பட்ட "**சூரியக் கலை**" தான் நமது மூச்சுக் காற்றிலும், பேச்சின் அலைகளிலும் மறைந்து கிடக்கும் பிராணச் சக்தியாகும். கண்டத்திற்கும் (கழுத்து) புருவ மையத்திற்கும் இடையில் ஓடி ஒளிந்து செயல்படும் இதனை, எண்ணத்தைக் கொண்டு அடக்கி நாதப் பிரம்மனை அறிவதே "**நாதோபாசனை**" எனப்படும். "சப்த பிரம்மன்" என்று அழைக்கப்படும் மகா சக்தியே ஸ்ரீ மகா கணபதியாவார்.

*சமாதி நிலை*

மூச்சையடக்கிச் சாதனை புரியும் இந்த யோக நிலையில் மூல குண்டலினி அல்லது சூரியக் கலையின் சக்தியுடன் லயித்திருக்கும் பெரும் யோகச் சித்தி இதுவே. அதாவது, தேகத் தத்துவத்தினை மீறிய நிலை இது (சவமாகிய நமது தேகம் சிவமாகிய நிலை). நாயன்மார்கள் ஆழ்வார்கள் போன்றவர்களைப் போலத் "**திருமேனி**" எனப்படும் தெய்வீகச் சரீரமாக நாம் மாறிய நிலை இதுவே. புலனடக்கத்தின் பூரண நிலை இங்குத்தான் **மனக்கண்** அல்லது ஞான திருஷ்டியாகச் செயல்படுகிறது. **திருமூலர், போகர், ஆதி சங்கரர்** போன்றவர்கள் தங்கள் உடலை விட்டு இன்னொரு உடலில் புகுந்து செயல் புரிந்த (கூடு விட்டுக் கூடு பாயும் சக்தி) தெய்வீக லீலைகள் இந்நிலையை அடைந்தவர்கள்தான் செய்ய முடியும். மரணம் அல்லது இறப்பையும் கடந்த சமாதி நிலை இதைத்தான் குறிக்கிறது. சங்கீத மும்மூர்த்திகளில் சிறந்த **தியாகையர்** தனது பாடலில் குறிப்பிட்ட யோக நிலையான "**ரசனா**" என்பது இந்நிலையைக் குறிக்கிறது.

இந்நிலையை அடைந்தவர்களை சிரஞ்சீவி என்றழைக்கிறோம். நமது தேகம் பிரணவத்தினின்று தோன்றிய பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் ஆனது. வேதத்தில் இந்தச் சேர்க்கை "**பஞ்சீகரணம்**" என்று அழைக்கப்படும். இறப்பில் இவை மந்திர மற்றும் இதரச் சாதனைகளால் பிரிக்கப்படுகின்றன. இதனை உயிரோடு இருக்கும்போதே பிரிப்பதுதான் "**சமாதி**" என்று பெயர். இதற்கு அதிதேவதை ஸ்ரீ மகா கணபதி ஆவார். எனவே, ஐம்பூதங்களின் ஆதியுமான ஓம் என்ற பிரணவத்தின் வடிவமான மற்றும் அதிபதியான ஸ்ரீ மகா கணபதியின் சிறப்பு பெரியது என்பது தெளிவு.

# ஷண்மதமும் ஸ்ரீ கணபதி வழிபாடும்

**ஆறு மதங்கள்**

ஆதி சங்கரர் ஆறு மதங்களை நிறுவினார். சூரியனை வழிபடும் சௌரம், சிவனை வழிபடும் சைவம், விஷ்ணுவை வழிபடும் வைணவம், முருகனை வழிபடும் கௌமாரம், சக்தியை வழிபடும் சாக்தம், கணபதியை வழிபடும் காணாபத்தியம் என்பவையே அவை. ஆன்மிக மக்களின் வழிபாட்டு விருப்பத்திற்கேற்பச் சங்கரர் மேற்கண்டவாறு ஆறு மத வழிபாட்டினை உருவாக்கினார். இருப்பினும் விநாயகரை இந்த ஆறு மதங்களும் ஆதரிக்கும் சில உண்மைகளை இங்குக் காண்போம். இது மட்டுமன்றி "முக்கியக் கடவுள்" என்று அழைக்கப்படுவதின் காரணத்தையும் சிறிது ஆராய்வோம்.

**சௌரம்:** இது சூரியனைப் பிரதான தேவதையாகக் கொண்டு வழிபடும் முறை. சூரியனின் பல பெயர்களில் 'ஆதித்யன்' என்பதும் ஒன்று. நவகோள்களும் நமது தேகத்தில் ஒவ்வொரு பகுதியின் செயல்களை நடத்துகின்றன. இதில் சூரியனின் ஆதிக்கத்தில் உள்ள சிலவற்றை இங்குக் காண்போம். மனிதனின் ஆத்மா, வலது கண், தேக அமைப்பு, பேச்சு இவையாவும் சூரியனின் கட்டுப்பாட்டுக்குள் உள்ளன என்று ஜோதிடம் மற்றும் இதர யோக நூல்கள் பறை சாற்றுகின்றன. இதில் பேச்சும், சுவாசமும், கண் பார்வையும் **கணநாதன்** செயலாகும். **கணநாதன்** அருளின்றி யோகத்தில் இவை அடங்கா. ஏனவே, ஆதித்யன் செயல்களால் ஏற்படும் இவை கணநாதன் அருளுக்குள் கட்டுப்படுவதால் சூரியனை வழிபடும் மக்கள் இவரை ஆராதிப்பதில் மகிழ்ச்சி அடைகின்றனர். சித்தர்களின் பாடல்களில் ஆதித்யன் எனப்படும் மூச்சும், பேச்சும், எண்ணமும், ஒடுங்கிய நிலைதான் தவநிலை அல்லது தன்னை அறிந்த நிலை (முக்தி) என்று குறிப்பிடுவதாக வரும் பாடல் ஒன்றை இங்குத் தருகிறோம்.

**"ஆதித்யன் ஓடி அடங்கும் இடம் கண்டு**
**சாதிக்க வல்லார் தம்மை உணர்ந்தவர்**
**பேதித்த உலகம் பிதற்றும் பிதற்றெல்லாம்**
**ஆதித்யனோடே அடங்கும் தானே".**

எனவே, கணநாதனை முக்கியக் கடவுள் என்று சௌரம் உணர்கிறது என்பது தெளிவாகிறது.

**கௌமாரம்:**

குமரனை பிரதான தேவதையாகக் கொண்டு செயல்படும் வழிபாடு இது. எங்கும் நிறைந்த தேஜோ சக்தி பரந்து விரிந்து கிடக்கும் தன்மையாகக் குமரக்கடவுள் நிலை விளக்குகிறார். பிரணவத்தோடு இணைந்திருப்பது தேஜஸ். "ஓம்காரத்தின்" வீரிய செயல்கள், தேஜோ சக்தியாக வெளிப்படுகிறது. இப்படி வெளிப்படும் தன்மை குமரனைக் குறிக்கிறது. உலகில் நிகழும் அதிசயங்கள், அற்புதங்கள் யாவும் குமரனின் செயல்கள் ஆகும். கணநாதன் பிரணவ சொரூபம். ஓம் என்பதே மூல கணபதி ஆகும். சத் + சித் + ஆனந்தம் என்ற ஞான சொரூபமாக விளங்கும் பெரும் யோக நிலைக்கும் செல்வத்திற்கும் கணநாதனின் அருள் வேண்டும். எனவே, பிரணவமாகிய கணநாதனுடன் இணைந்திருக்கும் தேஜோ சக்தியான குமரனை வழிபடும் மக்களும் கணநாதனை முழு முதற் கடவுள் என்று உணர்ந்துள்ளனர். முருகன் புகழ் பாடும் **அருணகிரி, கச்சியபர், நக்கீரர்** ஆகியோரும் கணநாதனை முதற்கண் தெய்வமாகக் கொண்டு எழுதிய பாடல்களும் எண்ணற்றவைகளாகும். இதில் திருமுருகாற்றுப் படை எழுதிய நக்கீரர் கணபதி வழிபாட்டை உபாசனையாகக் கொண்டவர். இவர் எழுதிய விநாயகர் அகவலில் ஔவை போல், அருணகிரி போல் ஆக வேண்டும். அதற்கு உன் அருள் வேண்டும் என்று விநாயகரிடம் வேண்டுவது இங்கு நல்ல விளக்கமாகிறது.

எனவே, கௌமாரமும் விநாயகனை விடாமல் ஏற்றவும் போற்றவும் செய்கிறது. கந்த புராணத்தாலும் "*மண்ணுலகத்தினிற் பிறவிமாசற.... போற்றுவோம்*" என்ற பாடலும், அருணகிரிநாதர் திருவண்ணாமலையில் அருளிய திருப்புகழில் முருகனுக்கு வள்ளி, தெய்வானை என்கிற (இச்சா, கிரியா) சக்திகளை மணமுடித்து வைத்த விநாயகர் என்ற கருத்தைக் "*கைத்தல நிறைகனி அப்பமுடன் அவல்பொரி......... ....பெருமானே*" என்ற பாடலில் விளக்குகிறார். அதன் பொருள் "ஞான சொரூபனே" என்பது. முக்காலம் உணர்ந்த ஞானம் கைத்தல நிறைகனியாகும். அதற்கு கணநாதன் துணை வேண்டும். மேலும் அஷ்ட மகா சித்திகளில் கடைசி நிலைகளான ஈசத்துவம் வசித்துவம் என்ற இரண்டு பெரும் சித்திகளை "கைத்தல நிறைகனி" என்ற சொல் உணர்த்துகின்றது. அந்த இரண்டு சித்திகளும் ஸ்ரீபரமேஸ்வரனுக்கே உரியவை. அவைகளைத்தரும் சக்தி ஸ்ரீகணநாதனுக்கு உண்டு என்பதை அருணகிரிநாதர் பாடல்கள் மூலம் விளக்குகின்றார்.

சைவம் :

சிவனைப் பிரதான தேவதையாகக் கொண்டு வழிபடும் மதம் இது. சிவம் என்றால் மங்களம் என்று பொருள். நன்மைக்கு வித்தாகும் யாவையும் இந்த மங்களம் என்ற சொல்லில் அடங்குகிறது. ஔவையார் தனது யோக நூலில் "***சிவத்தைப் பேணில் தவத்திற்கு அழகு***" என்று சிவனைப் பெரிதும் புகழ்ந்துள்ளார். இந்த ஔவையின் வழிபாட்டு தெய்வம் **கணநாதன்** ஆகும். எனவே, தவத்திற்குச் சிவத்தின் துணை அவசியம் என்று தெரிகிறது. சிவம் என்றால் உண்மையில் பேரறிவு நம்மை ஆட்கொண்ட "**ஞான பீடமாகும்**". முக்காலமும் உணர்ந்த முனிவர்கள் அனுபவித்த நிலை இது. ஏனவே, "***சிவமின்றித் தவமில்லை***" என்பது சித்தாந்தம் ஆகிறது. சைவ சித்தாந்தத்தின் பெரும் யோக நூல் **திருமந்திரம்** ஆகும். இதனை எழுதிய திருமூல நாயனார் "*ஜீவன் சிவனாவதே முக்தி*" என்கிறார். சிவத்தை வளர்க்கும், சிவமாக விளங்கும், பரிபூரண ஞானத்தைச் செயல்படுத்தும் சக்தியாகக் கண நாதனைப் பின்வரும் பாடலில் போற்றுகிறார்.

"ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன் தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே."

மேலும், தேவாரப் பாசுரங்களில் வரும் ஒரு பாடல் சைவத்தையும், சாக்தத்தையும் இணைக்கும் பாலமாக ஆனை முகனைச் **சிவசக்திச்** சொரூபமாக சித்தரிக்கிறது. "*பிடியதன் உருவுமை கொளமிகு கரியது*"...... இப்படிச் **சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோதானம், அனுக்கிரகம்** என்ற ஐந்தொழில்களையும் புரிகின்ற அரும் பெரும் நாயகனாக கண நாதனைத் திருமூலர் வருணித்துள்ளார். ஆக, சைவம் வழிபாட்டிற்கு முன்னரும் வழிபாட்டிலும் முக்கியக் கடவுளான **கணநாதனை** மறப்பதில்லை.

வைணவம்:

விஷ்ணுவைப் பிரதானத் தேவதையாகக் கொண்டு வழிபடும் மதம் இது. விநாயகரை "**விஷ்ணு அம்சம்**" என்று வேத நூல்களே பல இடங்களில் கூறி இருக்கின்றன. கிருஷ்ணாவதாரத்தில் ஸ்ரீ கிருஷ்ணன் "**கணபதி உபாசனை**" தான் செய்தார். மேலும், கணபதி அவருக்குச் சித்தியாகி இருந்தது என்பது யாவரும் அறிந்தது. ஸ்ரீ கிருஷ்ணன் செய்த

லீலைகளும், அவர் உலகிற்குத் தந்த "பகவத் கீதையும்" சாதாரண அறிவிற்குள் அடங்காதது என்பது யாவரும் அறிந்ததே. இது மட்டுமின்றிப் பகவத் கீதை மகாபாரதத்தில் ஒரு பகுதி ஆகும். மகாபாரதத்தை எழுதிய வேதவியாசரும் விநாயகரின் துணையோடுதான் வேதங்கள், பதினெட்டுப் புராணங்கள் போன்ற நூல்களை இயற்றும் பணியில் வெற்றி கண்டார். பன்னிரண்டு ஆழ்வார்களில் மூத்தவரும், முன்னோடியுமான "**நம்மாழ்வார்**" பிறந்ததும், வைகுண்டத்தில் ஸ்ரீமன் நாராயணன் விநாயகரைப் பார்த்து, "*உன் அம்சமாகச் சடகோபன் (நம்மாழ்வார்) பூலோகத்தில் தோன்றி இருக்கிறான். நீ அவனுக்கு உன் போதனையைத் தருவாயாக*" என்று கேட்டுக் கொண்டார். அவ்விதமே பதினாறு ஆண்டுக் காலம் குழந்தை சடகோபன் ஆகாரமின்றி, மூச்சு பேச்சின்றிக், கண் திறவாமல் (நிஷ்டையில்) ஆழ்வார் திருநகரில் உள்ள கோயிலின் புளிய மரப்பொந்தில் கிடந்தது. பசி, தாகம், உறக்கம் இவையாவுமின்றி ஆனால் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக குழந்தை சடகோபன் வளர்ந்து வந்தது. இந்த 16 ஆண்டுக் காலமாக முழுமுதல் கடவுளாகிய கணநாதனின் ஞான உபதேசத்தில் சடகோபன் லயித்து வளர்ந்து வந்தார். இப்படிப் பக்தியிலும் உயர்ந்த சடகோபனை ஸ்ரீமன் நாராயணன் "*இன்று முதல் இவரை (நம் + ஆழ்வார்) = நம்மாழ்வார் என்று யாம் அழைப்போம்*" என்று கூறி மற்ற ஆழ்வார்கள் இவரைத் தங்கள் தலைவனாக ஏற்றுக் கொள்ளும்படி செய்தருளினார். அங்கிங்கு எனாது எங்கும் நிறைந்த பரி பூரண ஞானம், ஆனந்த ஜோதி, பேரறிவின் பெருஞ்சுடர் கணநாதன் ஆவார். யாவருள்ளும், எவற்றுள்ளும் ஒளிந்திருக்கும் ஆத்மாவே பரமாத்மா ஸ்ரீமன் நாராயணன் ஆவார். ஏனவே, எங்கும் எதிலும் இணைந்திருக்கும் இவ்விருவரும் ஒருவருக்குள் ஒருவர் ஆவார். இப்படி வைணவ ஸ்தலங்களிலும் வழிபாட்டு முறைகளிலும் இடம் பெற்றுள்ள கணநாதன் முக்கியக் கடவுள் என்பது நியாயமானது. விஷ்வக்சேனர் என்று வைணவம் இவரை அழைக்கிறது.

சாக்தம்:

இது சக்தியைப் பிரதானத் தேவதையாகக் கொண்டு வழிபடும் மதம். இந்தச் சக்தி உபாசனையில் "**ஸ்ரீ வித்தை**" என்பது பிரசித்தமானது. இதில் "**ஸ்ரீ தேவியைப்**" பிரதானத் தேவதையாகவும் அவள் வசிக்கும் இடத்தை சுற்றிலும் கோட்டைகள் இருப்பதாகவும் மற்ற எல்லாத் தேவதைகளும் இக்கோட்டையின் பகுதிகளில் காவல் காப்பதாகவும் கொண்ட பாவனையில் "**மேரு**" என்று அழைக்கப்படும் ஒரு கூம்பு வடிவ சக்தி

பீடத்தைப் பூஜையில் வைத்து அதன் உச்சியில் (பிந்து) ஸ்ரீ தேவி இருப்பதாகப், பாவித்து வழிபாடு செய்கின்றனர். இவ்விதமான கூம்பு வடிவ பீடத்தை வைத்துக் கொள்ள முடியாத நிலையில் இதன் உருவ விளக்கமாக **"ஸ்ரீ சக்கரம்"** என்கிற சக்கரத்தை வைத்துப் பூஜிக்கின்றனர்.

இப்படி ஸ்ரீ சக்கர உபாசனையில் ஸ்ரீ தேவி பிரதான தெய்வமாகிறாள். இந்த ஸ்ரீ சக்கரத்தில் மூன்றுக்கு கீழ் நோக்கு முக்கோணங்களும் மூன்றுக்கு மேல் நோக்கு முக்கோணங்களும் ஒன்றன் மேல் ஒன்றாக இடம் பெறுகின்றன. இவற்றின் மையத்தில் ஒரு வட்டமும் அதன் மையத்தில் தேவி இருப்பதாகவும் வருணனை செய்யப்பட்டு இருக்கிறது. ஆதிசங்கரரும் **"சௌந்தர்யல ஹரி"** என்ற நூலை ஸ்ரீ சக்கர பூஜைக்கு உகந்தவாறு அமைத்துள்ளார். இதில் வரும் பெரும்பாலான அட்சரங்கள் ஸ்ரீ தேவியின் மூல மந்திரங்களான **சோடசி, மகா சோடசி,** பாலா போன்றவற்றின் பீஜாட்சரங்களைக் கொண்டுள்ளன. உண்மையில் **"மேரு"** அல்லது ஸ்ரீ சக்கரத்தில் ஸ்ரீ தேவியாக வருணிக்கப்பட்டிருக்கும் **"பிந்து"** மூல கணபதி ஆவார். இதுவே "ஓம்" என்ற பிரணவம். பிரணவத்துள் சக்தியும் ஓர் அங்கமாக இருக்கிறாள் என்பதை உணர்த்தும் படியாகத்தான் **வல்லபை கணபதி** (சக்தி கணபதி) விளங்குகிறார். "மாயை" சக்தியின் சொரூபம். இதில் **"சிறுமாயை"** என்பது மானிடனின் (மதி மயக்கம்) அறியாமை. இது போல் தேவர்களுக்கும் மதி மயங்கும். மதி இழக்கும் கட்டங்கள் உள்ளன. அங்குப் **பெருமாயை** அவர்களை ஆட்டுவிக்கும். இவ்விரு மாயைகளும் கணநாதனின் அருள் கொண்டு விலகும். அம்பிகையே மாயையாகச் செயல்படுவதால் கணநாதன் அருள் இருந்தால் மாயை நீங்கிப் பேரறிவை உணர முடியும். ஸ்ரீ சக்கரத்தில் காணப்படும் கீழ் நோக்கிய முக்கோணங்கள் அம்பிகை அல்லது மாயையைக் குறிக்கும். இதை வேதங்கள் உபநிஷத்துகள் முதலியன **"பிரகிருதி"** என்று குறிப்பிடுகின்றன.

மேல் நோக்கிய முக்கோணங்கள் ஆன்மிக முன்னேற்றத்தைக் குறிக்கின்றன. இதன் அதிபதி **"கணநாதன்"** ஆவார். மேலும், மாயை முற்றிலும் நீங்கிய நிலையில் சாதகன் பல யோக நிலைகளை, சித்திகளை அனுபவிக்கின்றான். அவற்றுள் **கேவல கும்பகம், பிரணவ சித்தி, பிரம்ம நிஷ்டை** போன்றவை முக்கியமானவையாகும். அஷ்ட மகா சித்திகளும் இங்குக் கை கூடுகின்றன. இவற்றுக்கும் மேலாக, இறைவனின் ஞான உபதேசம் உள்ளத்தில் தோன்றும். இந்த நிலையில்தான் வேத வியாசர்

கணநாதன் துணையோடு வேதங்களை இயற்றினார். திருமூலர் திருமந்திரம் கூறும் "சவம் சிவமாகிய" நிலையும், வடலூர் இராமலிங்க அடிகளார் (வள்ளலார்) விளக்கிய "மரணமிலாப் பெருவாழ்வும்" இங்குதான் யோகிகளுக்கு இறைவனால் கொடுக்கப்படுகிறது. மனித முயற்சியை மட்டுமே மூல தனமாகக் கொண்டு செய்யும் சாதனை அன்று இது. பிறப்பிலேயே **ஞான சம்பந்தர்** பிள்ளைப் பருவத்திலே பாடிய தெய்வீக மறைகள் இந்நிலையில் தோன்றியவை தான். இந்நிலையை அடைந்தவனைத் தான் சைவத் திருமுறைகள் "***தோடுடைய செவியன்***" என்றழைக்கின்றன. இப்படி மாயையாகி இருக்கும் சக்தி விலகி, அம்பிகை அருளான ஞான உபதேசத்தைப் பெறுவதற்குப் பிரணவ சொரூபமும், நாத பிரம்மமும், பேரறிவுப் பொருளாகவும் விளங்கும் "**மூல கணபதி**" சக்தி வழிபாட்டிலும் மறைந்திருக்கிறார் என்பது முக்கியக் கடவுள் விநாயகர் என்பதற்கு மற்றும் ஓர் எடுத்துக் காட்டாகும்.

**காணாபத்தியம்:** கணபதியைப் பிரதான தேவதையாகக் கொண்டு வழிபடும் மதம் இது. உலகில் புலன்களுக்குத் தோன்றுபவை, தோன்றாதவை என இருவகை உண்டு. தோன்றுபவை **ஸ்தூலம்** என்றும், தோன்றாதவை **சூட்சுமம்** என்றும் பொதுவாக யோக நூல்கள் வருணிக்கின்றன. யோகம், தவம், உபாசனை இவை யாவும் ஸ்தூலத்தை நீக்கிச் சூட்சும உலகத்தில் மனிதன் பிரவேசிப்பதே சாதனை என்று பறைசாற்றுகின்றன. இப்படிச் சூட்சுமத்தை அல்லது இயற்கையின் மர்மத்தை மனிதன் அறிந்து கொள்ளத் தடையாக இருக்கும் காரணங்கள் ஸ்தூலத்தைச் சார்ந்தவையாகும்.

நமது தேகம் ஐம்பூதங்களின் சேர்க்கையால் ஆனது. இந்தச் சேர்க்கையைப் பிரிப்பதுதான் யோகம். இந்த ஐம்பூதங்கள் "***ஓம்காரத்திலிருந்து உதித்தவை***" என்று திருமூலர் சொல்கிறார். இந்த ஓம்காரமே அண்டசராசரங்கள் தோன்றுவதற்கு முன்னிருந்த ஒரு மிகப் பெரும் படைப்பிற்கு உகந்த அமைதியாகும். பிரம்ம சிருஷ்டியில் உள்ள 84 லட்சம் உயிர்களும் பிரணவத்தின் சொரூபமான இந்தப் பெரும் அமைதியிலிருந்து தோன்றியவைதான். யோகிகள் தவத்தின் சிகரத்தில் இந்த அமைதியை அனுபவிக்கின்றனர். அஷ்டாங்க யோகத்தினால் இந்நிலையை அடைய முடியாது. ஏனெனில், இது "***சமாதி***" நிலையைத் தாண்டி இருக்கும் பிரம்ம நிஷ்டையாகும்.

கணநாதனே நாதப் பிரம்மம் அல்லது சப்த பிரம்மம் என்றழைக்கப்படுகிறார். நாதமென்பது ஒலியின் அதிநுட்பப் பேரலைகளாகும் (சூட்சுமம்). இதனை உணர்வதற்கு நாம் ஸ்தூலத்தை விடுத்துச் சூட்சும நிலைக்குச் செல்ல வேண்டும். அதாவது, மானிடக் கதியிலிருந்து "தேவ கதிக்குச்" செல்ல வேண்டும். அதாவது, மானிடனின் வாழ்வு மூச்சு, பேச்சு, தேக உணர்வு, எண்ணம், தேகப்பற்று ஆகியவற்றைக் கொண்ட தேக இயக்கத்தைச் சார்ந்திருக்கிறது. பசி, தாகம், உறக்கம் இவையும் தேவைப்படுகிறது. இவை அனைத்தும் சரிவர நடந்தால்தான் மனிதன் சாரசரி மானிடத் தன்மையோடு இருக்க முடியும். இதுவே ஸ்தூல கதியாகும். ஆனால், இவையனைத்தும் ஒய்ந்து அடங்கிய நிலையைத்தான் "***தேவ கதி***" என்றழைக்கிறோம். தன் நிலை மறந்த தெய்வீக தியாக நிலையில் இங்குத்தான் "பிரணவம்" ஞான உபதேசத்தை வழங்குகிறது. (அதிசூட்சும ஒலி அலைகள்). இதுவே '*அகாரம்*' எனப்படும். மேற்கூறிய அகாரமே பிரணவத்தின் 'அ' என்ற ஒலியாகும். பிரணவத்தின் அ + உ + ம என்பவை முறையே மூச்சு + எண்ணம் (மனம்) + பேச்சைக் குறிக்கின்றன. உயிரோடு இவையாவும் ஒடுங்கி இருக்கும் நிலைதான் *ஏகாக்ட்சரி சித்தி* என்பது. இதுவே (*ஏகாக்ட்சரி*) மூல கணபதியின் பீஜாட்சரமாகும். இந்த "***ஏகாட்சரி சித்தி***" ஓம் என்ற கணநாதனின் அருள் கொண்டுதான் ஏற்படுகிறது.

### *தெய்வீக மூச்சு*

கருவில் நமதுள்ளிருக்கும் தெய்வீக உயிர் சக்தி, நாம் பிறந்ததும் மாயையால் (பிரக்ருதி) கவரப்பட்டு வலுவிழந்து நமது மூச்சாக, பேச்சாக, எண்ணமாக, (மனம்) நிலைகுலைந்து போகிறது. இதனை மீட்டு மீண்டும் ஆன்மிக உயிர் மூச்சை நாம் பிடிப்பதே யோகம் (அல்லது) தவமாகும். நமது மூச்சு, எண்ணம், பேச்சு இவற்றை தேகத்தின் வெளியிலுள்ள இயற்கை இயக்குகிறது. யோகம், தவம் இவற்றின் மூலம் புலன்களை வென்று மனம், பேச்சு, எண்ணம் இவையாவும் அடங்கியிருக்கும் நிலையில் (பிரம்ம நிஷ்டை) நமது சாதாரண மூச்சு இயங்காமல் "***தெய்வீக மூச்சு***" நமக்குள்ளே இயங்கும். இந்தத் தெய்வீக மூச்சுக் காற்று நமது மூச்சுக் காற்றுக்கு உள்ளேயே மறைந்திருக்கின்றது. இதனை மீட்டுப் பெரும் தியான நிலையில் வெளிமூச்சை விட்டு விட்டு இறையுணர்வில் லயித்திருப்பதே யோகம்.

இந்தத் தெய்வீக மூச்சும், (உள்ளுக்குள் இயங்கும்) கண நாதனின் கையில் இருக்கிறது. எனவே, ''*கும்பகம்*'' என்னும் வெளி மூச்சையடக்கும் சித்தி இவரது அருளால்தான் ஏற்படுகிறது. இங்குதான் பிரகிருதி என்னும் அம்பிகையின் மாயை மறைந்து சாதகன் தெய்வீக நிலையில் ''ஞானம்'' பெறுகிறான். எனவே தான் இவரை ''*ஞான முதல்வன்*'' என்கிறார்கள்.

### *அமிர்த கலை*

சித்தர்கள் விரும்பும் கணபதி: ''ஓம்'' என்பது மூல கணபதியின் பீஜாட்சரமாகும். யோகிகள் இதனைப் பற்றித்தான் ''*அமிர்த கலை*'' என்ற பெரும் சித்தியை அடைகின்றனர். இதுவே அண்டத்தையும், பிண்டத்தையும் ஆட்டுவிக்கும் பீஜாட்சரமாகும். சித்தர்கள் அனுபவிக்கும் பெரும் தவ நிலைகளில் இந்த ஏகாட்சரமும், அதன் சித்தியினால் அவர்கள் பெரும் அமிர்த கலையும் பெரிதும் பாராட்டப்படுகிறது. ''சித்தர்கள்'' என்றால் சித்து விளையாடுபவர்கள் என்ற தவறான கருத்து மக்களிடையே உள்ளது. இதற்குக் காரணம் தற்காலத்தில் சித்தர்கள் என்று தம்மைக் கூறிக் கொள்ளும் எத்தர்கள் உலகில் இருப்பதே. உண்மையில் தவத்தில் பெரும் சித்திகளைப் பெற்றவர்களே சித்தர்கள். ''அஷ்டமா சித்திகள்'' கைவரப் பெறினும் அமைதியான பிரம்ம நிஷ்டையில் (இறையுணர்வில்) ஆழ்ந்திருப்பவர்கள் சித்தர்கள். உலகோரைத் தவிர்த்து, உலக ஞானத்தைத் துறந்து, பேரின்பத்திலே திளைத்திருப்பவர்கள் இவர்கள். பல சித்தர்களில் குறிப்பாகப் பதினெட்டுச் சித்தர்கள் தமிழ்நாட்டில் ஆன்மிகக் கோட்டையை அலங்கரிக்கின்றனர். குறிப்பாக **அகத்தியர், போகர், திருமூலர், இடைக்காட்டு சித்தர், கருவூரார்,** பாம்பாட்டி **சித்தர்,** பட்டினத்தார், **அகப்பேய் சித்தர்** போன்றவர்கள் பெரும் தெய்வீக நிலையை அடைந்தவர்கள் ஆவார்கள்.

### *மூல கணபதி*

சாதாரண மனிதனின் மூச்சுக்காற்றுக்குச் ''சிறுமூச்சு'' என்று பெயர். யோகத்தில் தவத்தில் சிறு மூச்சு அழிவுற்று ''**திரு மூச்சாகச்**'' செயல்படுகிறது. இந்த மூச்சைத்தான் திருமூலர் போன்றவர்கள் ''வாசி'' என்றழைக்கின்றனர். இந்த வாசியின் அதிதேவதை ''மூல கணபதி'' ஆவார். மேலும், இறைவனின் பிரம்ம உபதேசத்தைச் சாதகன் பெறுவதற்கு இது உறுதுணையாகும். சித்தத்துள் மறைந்திருக்கும் ''பிருத்வி''

தத்துவமானது இப்படி ஞான உபதேசமாக மலர்கிறது. இந்தப் பிருத்வி தத்துவத்திற்கு அதிதேவதை மூல கணபதி ஆவார். பிருத்வி என்றால் மண் என்றும் பொருள். எனவே, இந்த உண்மையை உணர்த்தவே களி மண்ணினால் பிள்ளையார் பிடித்து விநாயகர் சதுர்த்தி கொண்டாடப்படுகிறது.

*ஞான முதல்வன்*

இப்படி ஓம்காரமாகவும், பிரம்ம ஞானத்தில் ஆதி மூலமாகவும், படைப்பிற்கு முன் இருக்கும் பெரும் சக்தியாகவும் (அமைதியாகவும்) பஞ்ச பூதங்கள் தோன்றக் காரணமாகவும், சகல தேவதைகளும் நாடும் முழுப்பொருளாகவும், (முற்றிலும் மாயையின் கலப்பில்லாத பரம், பொருளாகவும்) வேதங்கள் போற்றும் நாத பிரம்மனாகவும், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில்களையும் செய்பவரும், செய்யத் துணை செய்பவரும் ஆகிய ஞான முதல்வனான மூல கணபதியைத் தொழுவது, சகல தேவதைகளையும் தொழுத பயனை அளிக்கும். இந்த உண்மையை ஔவையார் மிகச் சிறப்பாகப் பின் வரும் வரிகளால் விளக்கியிருக்கிறார்.

"திருவாக்கும் செய்கருமம் கை கூட்டும்
பெருவாக்கும், பீடும், பெருக்கும்
உருவாக்கும், அதலால் வானோரும்
ஆனைமுகத் தானைக் காதலால் கூப்புவர் தம்கை"

எனவே, யாவருக்கும், எம்மதத்திற்கும் சம்மதமான கணநாதனை ஏற்றுவோம், போற்றுவோமாக!



# சங்க நாதம்

## *தெய்வீகச் சின்னங்கள்*

பரமனின் கையிலுள்ள ஆயுதங்களில் ஒன்று சங்கு. பாஞ்சஜன்யம் என்று இதற்குப் பெயர். தெய்வங்களின் கைகளில் ஆயுதங்கள் எதற்கு? அன்பே சிவம் என்று சைவ சித்தாந்தங்கள் கூறுகின்றனவே? என்ற கேள்வி மக்களிடையே எழுவது இயற்கை. இதற்குரிய விளக்கமும் யோகத்தில் சங்கு எதைக் குறிக்கிறது என்பதையும் இங்கு நாம் காண்போம்.

வேதங்களில் சில பொருள்கள், ஆயுதங்கள் சில ஆன்மிகத் தத்துவங்களைக் குறிக்கும் வகையில் அமைந்துள்ளன என்றும், அந்தந்தத் தேவதைகளின் கைகளில் ஏந்திய ஆயுதங்கள் இருப்பதாகச் சித்தரித்து இருக்கின்றனர். இதில் தவறு ஒன்றும் இல்லை. இதைக் கொண்டு நாஸ்திகம் பேசுவதும் அறியாமை என்றே கூற வேண்டும். உதாரணமாக மண்டை ஓடும், எலும்பும் ஆபத்துக்குரிய சின்னமாக மருத்துவத்திலும், மற்றும் இதர வகையிலும் உபயோகத்தில் இருப்பதைக் காணலாம். அதிகச் சக்தி வாய்ந்த மின்சாரக் கம்பி அல்லது இணைப்பிற்கும் கூட ஆபத்தை உணர்த்தும்படி இந்தச் சின்னம் உபயோகப்படுகிறது. இதே போன்று சின்னங்களின் மூலம் தத்துவத்தை உணர்த்தும் வழக்கம் நமது இலக்கியத்திலும், புராணங்களிலும் நிறைந்து காணப்படுகிறது. இது போலத் தான் "சங்கு" பெரும் யோகச் சித்தியைக் குறிக்கிறது.

இது போன்று பல சின்னங்கள் பல பெரும் தத்துவங்களை உணர்த்தும்படி மிக அழகாக அமைந்துள்ளன. உதாரணமாக,

**சின்னம் – தத்துவம்**

**1. சங்கு** (ஏழு சுவரங்கள் உணர்ந்த யோக நிலை)

நாதம் – பெரும் யோக சித்தியை இது குறிக்கிறது, துரியம் என்ற நான்காவது யோக நிலையை இது குறிக்கிறது. "**யோக நித்திரை**" என்ற பெரும் தவநிலையை இது குறிக்கிறது. யோகத்தில் இரண்டு முறை இதை கேட்பது ஒரு சித்தி. மூன்று முறை கேட்பது மற்றொரு சித்தி.

**2. தாமரை**

இது சோடச மகா சித்தியையும் குறிக்கும் பெரும் சித்திகளைக் குறிக்கிறது. **அஷ்டமா சித்தியை** குறிக்கிறது. சிற்றறிவு நீங்கிப் பேரறிவு பெற்ற நிலையையும் குறிக்கிறது. இதுவும் பேரறிவையும், சித்திகளைத்தரும் வல்லமையையும் காட்டுகிறது.

**3. வீணை**

ச, ரி, க, ம, ப, த, நி என்ற ஏழு சுவரங்களை இது குறிக்கிறது. இவை யாவும் அடங்கின ஒரு தெய்வீக ஒலி தான் "ஓம்" என்னும் **பிரணவ ஒலி.** எனவே, **கலைமகள்** இதை ஏந்தி இருப்பதாக வருணிக்கின்றனர். **பிரணவ சித்தியையும்** இது குறிக்கிறது. வீணை ஏழு சுவரங்களைக் குறிக்கிறது. யோக சாதனையில் ரிஷிகளுக்கு பல சுவரங்களின் ஒலிகளும் கேட்கும். அதில் "த" என்னும் **தைவதம்** தான் மிகப்பெரிய சித்தியாகும். அகத்தியர் போன்றவர்கள்தான் அதைக்கேட்க முடியும். சித்திகள் அடைந்ததின் அடையாளம் தான் அது. இறைவனுடன் தொடர்பு கொண்டு ஞான உபதேசங்களைப் பெற்று நான்கு வேதங்கள் மற்றும் பல தத்துவங்களை நமக்கு அளித்த வேத வியாசர் தவத்தில் கேட்கும் இந்த "த" என்ற **தைவதம்** எனப்படும் சுவரத்தின் ஓசைதான். தவத்தில் முற்றிய நிலையில் இறைவனோடு உறவாடும் பக்குவம் கிடைத்தால்தான் அதைக்கேட்க முடியும். அடுத்தது சப்தசுவரத்தில் உள்ள "நி" என்ற **நிஷாதம்** என்ற சுவரம். இதனை சாதகன் கேட்டால் அவன் ஸ்தம்பனம் ஆகிவிடுவான். அதுவே சமாதி. திரும்பி சுய நினைவு வராது.

**4. கதை**

ஆஞ்சநேயர், பீமன், விஷ்ணு போன்றவர்கள் இதைக் கையில் ஏந்தியிருக்க நாம் காண்கிறோம். **கதை** தீமையை அழித்து, தீயவர்களை அழித்து நன்மைகளைக் காப்பதையும், நல்லோரைக் காப்பதையும் காட்டுகிறது. ஜீவகதி என்பது மனித உடலின் செயல்பாடு. தேவகதி என்பது அதிமானுஷ உடலின் செயல்பாடு. பிரம்மகதி என்ற தேவதா உடலின் செயலை இந்த "கதை" குறிக்கிறது. இது கையில் இருக்கும் தேவதை மானிட அதிமானுஷ நிலைகளைத் தாண்டி தெய்வீக நிலையில் உள்ள எல்லாம் அறிந்த தன்மைகளைப்பெற்றிருக்கிறது என்பதை உணர்த்தும். அதுவே "கதை." மேலும், இது **சம்காரம்** செய்யும் சக்தியையும், தத்துவத்தையும் குறிக்கிறது.

**5. அங்குசம்**

இதைக் கொண்டு யானையின் மதத்தை அழித்து யானையைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவது யாவரும் தெரிந்ததே. மதம் கொண்ட யானையான புலன்கள் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் போன்ற மனித உணர்வுகளை யோகத்தில் அடக்குவதையும் பிரம்ம நிஷ்டையைக் கண்டு உணரத் தேவையான "*புலனடக்கம்*" பெறுவதற்குச் செய்யும் யோக முயற்சியையும், வெற்றியையும் இது குறிக்கிறது. கர்ம வினையை அழிக்கும் ஆற்றலையும் இது குறிக்கிறது. ஸ்ரீகணநாதன்த் தொழ தொடர் வினைத் தொலையும் என்பதை உணர்த்துகிறது "அங்குசம்."

**6. சராங்கம்**

இதை "வில்" என்பார்கள். இதைக்கையில் தரித்திருப்பதன் பொருள் "குண்டலினி சித்தியைத்" தர வல்லது என்பதைக்குறிக்கும். எனவே வில் **குண்டலினிச்சக்தியைக்** குறிக்கிறது.

**7. ஓலைச்சுவடி அல்லது புத்தகம்**

கலைவாணியின் மற்றும் தேவி காயத்திரியின் கைகளில் இதைக்காணலாம். இது வேத ஞானத்தை பேரறிவைக்குறிக்கும். இதை கைகளில் ஏந்தியுள்ள தேவதையை தொழுதால் ஞானம் கிடைக்கும் என்று பொருள்.

**8. நாகம்**

இதுவும் குண்டலினி சக்தியைக் குறிக்கிறது. கணநாதன் இதை தனது இடையில் கட்டிக்கொண்டிருப்பதைக் காணலாம். இவரைத் தொழுதால் குண்டலினி சித்தி கிடைக்கும் என்றும் அதற்கு அவரே தலைவன் என்றும் பொருள்.

இப்படிச் சின்னங்களைக் கொண்டு தத்துவங்களை விளக்கும் திறன் நமது பாரத தேசத்தில் மட்டுமே உண்டு. இப்போது "சங்கு" எதைக் குறிக்கிறது. யோகத்தில் இதன் தத்துவம் என்ன என்பதைக் காண்போம்.

***மூன்று நிலைகள்***

மூன்று நிலைகள் – மனிதன் அனுதினம் மூன்று நிலைகளை அனுபவித்துக் கொண்டு இருக்கிறான். அவை **விழிப்பு, கனவு, நித்திரை** என்பனவாகும்.

**விழிப்பு நிலை** – உலக வாழ்க்கையில் உழலும் இவன் புலன்கள், மனம், புத்தி, சித்தம், எண்ணம், பேச்சு, சிற்றறிவு செயல் – இவையாவும் இந்த விழிப்பு நிலையில் ஏற்படுகின்றன. ஆயினும், **பிரம்ம நிஷ்டை** இதில்தான் மறைந்திருக்கிறது. இதனைக் கண்டு உணர்வதே யோகம், தவம் என்பன எனலாம்.

**கனவு நிலை** – இங்கு மனிதன் மனம் விழிப்பில் கண்டு உணர்ந்த யாவையும் கொண்டு செயல்படுகிறது. கற்பனையின் கைவண்ணமும் முன் கரும வினையின் செயல்களும் கூட இங்குத் தங்கள் காணிக்கையைத் தருகின்றன. இதில் பார்ப்பதெல்லாம் மாயையின் தோற்றம் தான்.

**உறக்கம்** – இதில் மனிதனின் தன்னை மறக்கிறான். நினைவுகள் இங்கில்லை. மனிதன் பரமாத்மாவின் அருகில் சென்று விடுகிறான். இதனால்தான் உறக்கத்தில் காணும் சுகம் இனிக்கிறது – இணையற்றது என்றும் நாம் நினைக்கிறோம்.

*நான்காவது நிலை – துரியம்*

மேற்கூறிய மூன்று நிலைகளை யாவரும் அனுபவிக்கின்றனர். யோகம், தவம் என்பன அவைகளைத் தாண்டி நான்காவது நிலையான "துரியம்" என்ற ("**யோக நித்திரை**" அல்லது "பிரம்ம நிஷ்டை") பெறுவதை எப்படி என்பதைக் கூறுகின்றன. விஞ்ஞானம் ஸ்தூலமான பொருள்களை, சிற்றறிவுக்கு எட்டும் இயற்கையின் மேலோட்டத்தை மட்டும் ஆராய்கிறது. ஆனால், **யோகம்** என்பது அண்டத்திலுள்ளது யாவையும் பிண்டத்துக்குள் காண்பது. அதாவது, வெளி உலகத்தில் புலன்கள் செல்வதைத் தடுத்து, இயற்கையின் முழுச்செயல்களையும் தனக்குள்ளாகவே கண்டு கொள்வதாகும். **எனவே, எங்கு விஞ்ஞானம் திகைத்து நிற்கிறதோ அங்கு தான் "ஆன்மிகம்" (அல்லது) "யோகம்" தொடங்குகிறது.** ஆராய்ச்சியில் விஞ்ஞானி ஆழ்ந்த சிந்தனையில் லயிக்கிறான். அவனால் தன்னிலை மறந்த நிலையோ தியானமோ, நிஷ்டையோ அங்கில்லை. நிஷ்டையில்தான் இயற்கை தன்னை மனிதனுக்கு உணர்த்துகிறது. தன் செயல்கள் யாவையும் மனிதன் அறிய உதவுகிறது. எனவே, "யோகம்" என்பதில் மனிதன் தன்னையும், இயற்கையையும் உணர்ந்து, தன்னிலை மறந்த தியானத்தில், தன்னைக் கொண்டே இயற்கையை வெல்கிறான்.

**யோகம் என்றால் என்ன?**

யோகம் – யோகம் என்றால் இணைப்பது என்று பொருள். எதை எதனோடு இணைப்பது? நமது ஆத்மாவைப் பரமாத்மாவோடு இணைப்பதுதான் யோகம். தியானத்தில் (அல்லது) பிரம்ம நிஷ்டையில் இறைவனுடன் உரையாட முடியும். இங்கு இறைவன் இவனுக்கு ஞான **போதத்தை** வழங்குகிறான். (**ஞான சம்பந்தரைப்** போல.) இந்த நிலைதான் "**துரியம்**" என்ற 4ஆவது நிலையாகும். இந்த நிலை நமது "**விழிப்பு**" நிலைக்குள் ஒளிந்து கொண்டிருக்கிறது. இதைக் கண்டு உணர்வதே யோகம். இந்த நிலையை **யோக நித்திரையில்** அடையும் பொழுதுதான் '**சங்க நாதம்**" ஒலிக்கும்.

***ஓம்கார நாதம்***

"துரியம்" இருப்பது விழிப்புக்குள்ளே – என்பது சித்தர்கள் பாடலாகும். இந்தத் "துரியம்" என்ற நிலையில் நமது உடலின் இயக்கம் எப்படி இருக்கிறது என்பதை **ஔவையார்** தனது யோக நூலில் நன்கு விளக்கியுள்ளார். நமது உடலின் செயல்கள் தச வித வாயுக்களால் இயங்குகின்றன. இவற்றில் முக்கியமானவை ஐந்து. அவை பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்பன. இவற்றால்தான் சுவாசம், பசி, தாகம், சக்தி, தேக வளர்ச்சி, மனநிலை, புலன்களின் செயல்கள் மற்றும் பல செயல்கள் நடைபெறுகின்றன. இதைத் தவிரச், சூரிய நாடி, சந்திரநாடி, அக்னி நாடி என்ற 3 முக்கிய நாடிகள் கொண்ட 108 நாடிகள் இயங்குகின்றன. இவையனைத்தையும் அடக்கிய நிலைதான் "*துரியம்*'. துரியம் என்ற நிலை எப்படியிருக்கும் என்பதை கற்பனை செய்து கொள்ளலாம்.

"மண்டலம் மூன்றும் வாயு ஓர்
பத்தும் அடங்கிய வீடு துரியம்"

என்பதே ஔவையின் வாக்கு. மேற்கூறிய தேகம், மனம், மற்றும் ஆத்ம சலனங்கள், செயல்கள் முற்றும் அடங்கி விட்டால் அதற்கு "மரணம்" என்று பெயர். இது யாவரும் அறிந்த ஒன்று. எனவே, மரணத்தையும் தாண்டி, மரணத்தில் நமது தேகம் நிற்கும் செயலற்ற நிலையை, விழிப்பு

நிலையிலேயே பெற வேண்டும். பின்னர் அதைத் தாண்டிப் "*பிரம்ம நிஷ்டை*" என்னும் துரியம் தாண்டிய நிலைக்குச் செல்ல வேண்டும். அங்குதான் இறைவனுடன் நாம் உறவாடவும், அவன் அருள் வாக்கை, அல்லது ஞான உபதேசத்தைப் பெற முடியும்.

சங்க நாதம் கேட்பது "**ஓம்கார நாதத்தைப்**" பிடித்ததாகும். ஏழு சுவரங்களைக் கேட்டு யோக நிலையில் மேல் சென்ற அற்புத அனுபவம்தான் சங்க நாதம் கேட்பது. **பூமியின்** புவியீர்ப்பு நமது 'தேகத்தின் செயல்களுக்குக் காரணமாக உள்ளது. இதன் செயலால்தான் உண்ணும் உணவைத் தொண்டையில் விழுங்க முடியும். நீரைக் குடிக்க முடியும். மேலும் கழிவுப் பொருள்கள் நமது தேகத்தை விட்டு வெளியேறுகின்றன. எனவே பூமியின் புவியீர்ப்பு – இன்றி மனிதன் தேகச் செயல்கள் நடவாது. அவன் உயிரோடு இருக்க முடியாது. ஆனால் யோகத்தில் **துரியம்** என்ற நான்காவது நிலையில் பூமியின் புவியீர்ப்பைத் தாண்டிப், பசி, தாகம், இவையற்று ஆத்மாவுடன் கலந்து ஆனந்தத்தில் லயிக்கிறோம். அங்குச் சென்றவர்கள் மீண்டும் பூலோக உணர்வு பெறுவதே பெரும் சித்தி ஆகும். இறைவன் அருளினால் தான் "**துரியம்**" கிட்டுமேயன்றி மனித முயற்சியில் மட்டும் கிடைக்கும் பதவி அன்று அது. "**கண்ட சித்தி**" என்ற யோக நிலையைத் தாண்டிய பகுதிதான் **துரியம்.**

*காய சித்தி*

"**துரியம்**" என்ற நிலையில் சாதகன் தன்னையும், அனைத்தையும், ஒன்றாக வேறுபடுத்தாமல் தெய்வீக உணர்வில் காண முடியும். புலன் வழியும், எண்ணத்திலும் இதுவரை சஞ்சரித்த ஆத்மாவைத் தடுத்து, உயிர்மூச்சோடு இணைத்திருக்கும் நிலைதான் "**துரியம்**" என்பது. இப்படித் துரிய நிலையை அடையச் சாதகன் பேச்சினை (**சொல்**) முழுவதுமாக அடக்க வேண்டும். வெறும் வெளிப் பேச்சை அடக்கினால் மவுன **நிலை** மட்டுமே வரும். இந்த மவுனத்திலும் பேசப்படாத, பேசுவதற்கான எண்ணங்கள், வார்த்தைகள் யாவும் நமது சிற்றறிவில் இருக்கும். இவற்றையும் முழுவதுமாக அடக்க வேண்டும். இந்தப் பேச்சின் சூட்சும சக்தி (பேசப்படாத ஆனால் பேசுவதற்குத் தயாராகும் எண்ணம், சொல் யாவும் **மூலகணபதியின்** ஆதிக்கத்தில்

உள்ளது. சிருஷ்டிக்கு முன் இருக்கும் பெரும் அமைதி நிலைக்கு அதிபதி "**மூல கணபதி**" ஆவார். எனவே மூச்சு, எண்ணம் மட்டுமின்றிச் சொல்லையும் (சொல்லும், சொல்ல இருக்கும் பேச்சின் அலைகள்) ஸ்தம்பிக்கச்செய்ய வேண்டும். அப்போதுதான் "**காய சித்தி**" ஏற்படும். "**காய சித்தி**"யில் தேக உணர்வு, பற்று அறவே நீங்கிய நிலையில் துரியத்தை அடைய வழி பிறக்கிறது. அப்படிப்பட்ட "துரியம்" கணநாதன் அருளின்றி சித்தி ஆகாது. "துரியம்" மனித முயற்சியில் மட்டுமே கிடைக்கும் பொருள் அல்ல.



# யோகத்தின் சிகரம்

(பிரம்ம நிஷ்டை)

## சமாதியும் யோக வழிகளும்

"சமாதி நிலை" தான் யோகத்தின் முடிவு என்ற எண்ணம் பொதுவாக எல்லாராலும் நம்பப்படுகிறது. பதஞ்சலி முனிவரின் அஷ்டாங்க யோகம் இதனைப் பெறும் வெற்றியாகக் கூறுகிறது. யோக நூல்கள் நமது உடலில் ஆறு ஆதார சக்கரங்கள் உள்ளன என்று கூறுகின்றன. இவை முறையே **மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாதகம், விசுத்தி, ஆக்ஞை** என்பவை ஆகும். யோகச் சாதனையில் "**குண்டலினி**" சக்தியை எழுப்பி மேற்கூறிய ஆறு ஆதாரச் சக்கரங்களையும் தாண்டி ஏழாவது நிலையான "சகஸ்ராரம்" என்ற ஸ்தானத்தில் குண்டலினியைச் சேர்ப்பதுதான் "சகஸ்ரார சித்தி" என்ற பெருநிலையாகக் கருதப்படுகிறது. இதைத்தான் யோக நூல்கள் "**ஆறுருவி ஏழேறி ஆனந்தத் தேனுண்ணும் சீறியெழும் ஆதாரத்தீ**" என்று குண்டலினியை வருணிக்கிறது.

பதஞ்சலியின் அஷ்டாங்க யோகம் மூச்சையடக்கி அதன் மூலம் சித்த சலனத்தை அடக்குவதை யோகமாகக் காட்டுகிறது. தற்கால ஸ்ரீ வித்யா உபாசனையிலும் (பிராணாயாமமும்) மூச்சையடக்கிச் சோடசி, போன்ற மந்திரங்களின் பீஜாக்ஷரப் பலத்துடன் சகஸ்ரார சித்தியை அடைவதை நோக்கமாகக் கொண்டுள்ளது. ஆக, ஆறு ஆதாரங்களைத் தாண்டி ஏழாவது நிலையான சகஸ்ராரம் (உச்சி) என்ற நிலையில் சஞ்சரிப்பது யோகத்தின் முடிவு என்ற எண்ணம் பொதுவாக மக்களிடம் உள்ளது. இது தவறு. உண்மையில் யோகத்தின் முடிவு ஐந்தாவது நிலையான "*விசுத்தியில்*" முடிவடைகிறது. இதன் விளக்கம் கீழே தரப்படுகிறது.

## கேசரி சித்தி

தற்கால ஸ்ரீ வித்தை, யோகாசனங்கள், பிராணாயாமம் இவற்றைக் கொண்டு சித்தத்தின் சலனத்தைப் பூரணமாக நிறுத்த முடியாது. இயற்கை நமது ஆக்ஞா சக்கரத்தைத் தாக்கி அதன் வழியாக

மூச்சு, எண்ணம், சித்த சலனம், தேக இயக்கம், புலன்களின் ஓட்டம் போன்ற இவற்றைச் செயல்படுத்துகிறது. எனவே ஆறாவது ஆதாரச் r; fukhd ***"ஆக்ஞை"*** இயற்கையின் சதிக்குத் துணை போகிறது. மனிதனைத் தெய்வமாக மாறும் நிலைக்கு செல்ல விடாமல் தடுக்கிறது. எனவேச், சாதகன் ஆக்ஞையின் சதியை வெல்ல வேண்டும். ஐந்தாவது நிலையான ***விசுத்தியில்*** அவன் ஒடுங்க வேண்டும். "*விசுத்தி*" தான் **காம பீடம்** என்றழைக்கப்படுகிறது. பிரணவ தேவி ஸ்ரீ காமாட்சியின் அருள் வாக்கு அங்குதான் கிடைக்கிறது. இதனை அடைய மூச்சு, பேச்சு (உள், வெளி) எண்ணம், மனம், தேக உணர்வு இவையாவும் ஒருங்கே அடங்கிய நிலையான "பிரம்ம நிஷ்டை" தேவை.

*சகஸ்ராரம்* (Brain or Cerebrum) ஆக்ஞையின் துணையோடு புலன்களை இயக்குகிறது. இதற்கு நமது கண்ணின் பார்வை பெரிதும் உதவுகிறது. யோகத்தில் "கண்ணின் பார்வை" மறைக்கப்பட வேண்டும். "தியானம்" இதற்கு உதவுகிறது. எனவே தியானத்தில் (நிஷ்டை) கண்ணிருந்தும் பார்வையற்று, காதிருந்தும் கேட்கும் திறனற்று நிற்கும் நிலையான "**கேசரி சித்தி**" உண்டாகிறது. இந்தக் **கேசரி சித்தி** ஏற்பட்டால் சகஸ்ரார சித்தி உண்டாகிறது. அதாவது, சாதகன் பூதாகாசத்தைக் கடந்து "**சிதாகாசத்தில்**" இங்கு பிரவேசம் பண்ணுகிறான். "**சொரூப சித்தி**" இங்கு ஏற்படுகிறது.

**சகஸ்ரார சித்தி**

"*சகஸ்ராரம்*" விசுத்தியின் துணைக் கோளாகும். கண் பார்வையும், எண்ணங்களும் சகஸ்ராரத்தின் மூலம் இயற்கையால் உண்டாகிறது. தியான யோகத்தில் விசுத்தியில் நிலைத்தவனுக்குச் சகஸ்ராரம் விசுத்தியின் அடிமையாகிறது. விசுத்தியின் வழியாகத்தான் இறைவனின் தெய்வ தரிசனம், ஞான உபதேசம், தெய்வீக வாக்கு ஆகியவை கிடைக்கின்றன. எனவே, பிரம்ம நிஷ்டையில் சகஸ்ராரம் எண்ண அலைகளைத் தூண்டுவதில்லை. கண் திறந்திருந்தும் பார்வையின் செயலில்லை. இந்த நிலையில் சகஸ்ராரத்தையும் ஆக்ஞா சக்கரத்தையும் அடிமைகள் ஆக்கிக் கொண்ட விசுத்தியிலிருக்கும் சாதகனின் உடலைச் சுற்றி ஒரு தெய்வீக ஒளி உருவாகிறது. இதுவே *சொரூப சித்தியாகும்.*

*அமர வாக்கு*

இந்த ஜோதி வடிவைத் தான் "***சோடசக் கலை***" என்று யோக நூல்கள் வருணிக்கின்றன. இந்தச் சோடசக் கலைதான் *சொரூப சித்தியில்* ஏற்படும் பேரறிவின் அலைகளாகும். இந்தச் சொரூப சித்தி ஏற்பட எண்ணத்தை உயிரோடு சேர்க்க வேண்டும். அங்குப் பிராணனும், அக்கினியும் சம்யோகமாகிறது. வெளிப்பேச்சு, பேசும் நிலைக்கு முன்பிருக்கும் அல்லது மௌனத்தில் செயல்பட்டிருக்கும் பேச்சின் அலைகளும் பேச்சும் ஒருங்கே இணைந்து **அமர வாக்காக** மலரும். எண்ணம் உயிராக மாறிய நிலையில் (பிரம்ம நிஷ்டை) '*பர **பிந்து***" எனப்படும். எண்ணத்தின் வேகம் தூண்டப்பட்டு "***அகாரம்***" ஒலிக்கிறது. சித்தத்தில் குடி கொண்டுள்ள பிருதிவி தத்துவம் (அதி நுட்ப ஒலி அலைகள்) தான் அகார ஒலி ஆகிறது. இந்த அகாரமே "**ஆதித்யன்**" என்று யோக நூல்களில் வருணிக்கப்படுகிறது. பர பிந்துவை, உயிரோடு சேர்க்கும் நிலையில்தான் யோகிகளுக்குத் "***திருமூச்சு***" என்னும் தெய்வீக சுவாசநிலை சித்திக்கிறது. இந்த பிருதிவி தத்துவத்தின் அதிபதி தான் "**மூல கணபதி**" ஆவார்.

*யோகத்தின் சிகரம்*

"பாலா" என்ற சக்தி மானிட வாழ்வின் இயல்பு (பூத சிருஷ்டி.) திரோதானம் என்பது பாலாவின் செயல் (ஜெகத் மித்யை) "பிரம்ம சத்தியம்" என்பது சிற்றறிவை வென்று பேரறிவை நமது ஆத்மாவின் வழியாக உணர்வது. இதுவே "*சகஸ்ரார சித்தி.*" விசுத்தியில் லயித்து நின்ற நிலையின் அனுபவங்கள்.

எனவே, "*சகஸ்ரார சித்தி*" அல்லது "முக்தி" என்பது "கேவல கும்பகம்" பெற்றுக் குண்டலினி சக்தியை எழுப்பி விசுத்தியில் ஸ்திரமாகிச் சகஸ்ராரம், ஆக்ஞா என்ற இரு ஆதாரங்களை ஸ்தம்பிக்கச் செய்வதே யோகத்தின் சிகரமாகும். "சகஸ்ராரம்" என்ற ஏழாவது நிலையில் குண்டலினி சக்தி லயமாகி விட்டால் ***நிர்விகல்ப சமாதி*** (கோமா) என்ற ஜடநிலை ஏற்பட்டு விடும். ஞான ஒளி, ஆத்ம போதம், இறைவனுடன் உரையாடல், ***கிருஷ்ணார்ஜுன சம்வாதம்*** என்ற பிரம்ம உபதேசம் பெறுகின்ற நிலை இவையாவும் விசுத்தியில் மட்டுமே யோகிகளுக்குக் கிடைக்கக் கூடியவை. ஆக, விசுத்தியில் லயித்திருக்கும் நிலையைத்தான்

உண்மையில் "*சகஸ்ரார சித்தி*" ஆகும். அங்குதான் பிரம்ம நிஷ்டை ஏற்படுகிறது. ஞான போதத்தை இறைவன் அருள்கிறான். அதுவே யோகத்தின் சிகரம் ஆகும்.



# சமாதியைத் தாண்டி.......?

*நிஷ்டை*

சமாதி என்றால் புலன் அடங்கி, தேக உணர்வு அற்று, சித்த சலனம் இன்றி மூச்சு, பேச்சு அற்ற நிலை என்பது பொதுவாக எல்லாரும் அறிந்த உண்மை. சாதாரண மனிதன் அறிந்து கொள்ளும் விளக்கம் இது. யோகத்தில் இதுவே கடைநிலை என்ற எண்ணம் மக்களின் மனத்தில் பரவலாக உள்ளது. உண்மை என்னவென்றால் தவம் அல்லது யோகத்தின் முடிவு சமாதி அல்ல. ஜீவன் முக்தி அல்லது சிரஞ்ஜீவி நிலை என்பது சமாதியையும் மீறிய நிலையாகும். இதுவே பிரம்ம நிஷ்டை அல்லது துரியம் என்ற நான்காவது நிலையைத் தாண்டிய தெய்வீக நிலையாகும். இங்கு மனிதன் தெய்வமாகி விடுகின்றான். தெய்வம் இவனது உள்ளத்தின் வழியாக ஞான உபதேசம் செய்கின்றது. இந்த நிலையில்தான் வேதங்கள் உபநிஷத்துக்கள் தோன்றின.

சாதகன் யோகத்தில் அடையும் சாதாரணச் சமாதி நிலையில் அவனது ஆத்மா சூன்யத்தில் லயித்து விடுகின்றது. ஜீவன் முக்தர்கள் அடையும் சவிகல்ப சமாதி அல்லது நிஷ்டையில் இறைவனின் போதனையும் ஒருங்கே கிடைக்கின்றன. ஜீவன் முக்தர்கள் இறைவனோடு உறவாடக் கூடியவர்கள். இறைவனின் போதனையைப் பெறக் கூடியவர்கள். இந்தப் போதனைகள் மூலம் பலம் பெறுகிறார்கள். இவை மக்களின் ஆன்மிக முன்னேற்றத்திற்கு உதவுகின்றன. ஆதிசங்கரர், நம்மாழ்வார், நெருர் சதாசிவ பிரம்மேந்திரர் போன்ற மகானுபவர்கள் ஜீவன் முக்தர்களாவார்கள். இவர்களால் முக்தி அடைந்த பின்னும் மக்களுக்கு நன்மையும், ஆன்மிக உயர்வும் உண்டாகின்றன. இவர்கள் அடைந்த தியான சமாதியை அடைவதே ஆன்மிகத்தில் முயற்சிக்கும் ஒவ்வொரு சாதகனின் குறிக்கோள் ஆக வேண்டும்.

*நிர்விகல்ப சமாதி*

நமது உடலில் சூரிய நாடி, சந்திர நாடி, அக்னி நாடி என்ற மூன்று நாடிகள் உள்ளன. இவை மூலாதாரம் எனப்படும் ஆசன வாயிலின் அருகில் உள்ள ஸ்தானத்திலிருந்து முதுகெலும்பின் தண்டு வடத்தின்

மூலம் பிடரியை அடைகின்றன. அஷ்டாங்க யோகத்தில் சமாதி எட்டாவது நிலையாக வருணிக்கப்பட்டிருக்கின்றது. **தியானம், தாரணை** என்ற நிலைகளைத் தாண்டிய ஒரு யோகச் சித்தியாக வருணிக்கப்பட்டிருக்கின்றது. இந்த நிலையில் யோகிகளுக்கு எல்லா ஞானமும், தெய்வீக உண்மைகளும், பிரமம் உபதேசங்களும் இறைவன் போதிக்கின்றான் என்கின்ற தவறான கருத்து மக்கள் மனத்தில் உள்ளது. இதன் உண்மை நிலை என்னவென்றால் சூரிய மற்றும் சந்திர நாடிகளின் உதவியோடு இயற்கை நமது தேகத்தையும், புலன்களையும் அறிவையும் இயக்குகின்றது. இந்தத் தேக இயக்கம் முதலான சலனங்களை நிறுத்தி இருக்கும் நிலையைத்தான் சமாதி என்று அழைப்பார்கள். உண்மையில் இதனை **நிர்விகல்ப சமாதி** என்று அழைப்பார்கள். நிர்விகல்ப சமாதியில் சூரிய நாடியும், சந்திர நாடியும் சமன்படுத்தப்படுகின்றது. இங்கு இறைவனால் ஞான உபதேசம் கொடுக்கப்படுவதில்லை. பூலோக எண்ணம், ஞானம், தேக உணர்வு என்பவை யாவும் அழிந்த நிலையில் இயற்கையோடு ஒன்றியிருக்கும் நிலையது. இந்த நிலையை அடைந்தவன் மீண்டும் தேக உணர்வைப் பெற முடியாது. போனவன் இங்கு போனவன்தான்.

*ஞான பீடம்*

இந்த நிலையில் சாதகனின் ஆன்மா சூன்யத்தில் லயித்து விடும். மேலும், ஒரு மாதத்திற்குள் இவனது ஆத்மா தேகத்தை விட்டுத் தலையின் உச்சியைப் பிளந்து கொண்டு வெளியேறிவிடும். இன்றைய மருத்துவத்தில் குறிப்படும் **கோமா** என்கிற நிலையைப் போன்றது இது. ஞான உபதேசம் அல்லது இறைவனின் போதனை பெற வேண்டும் என்றால் தியான நிலைக்கு (அஷ்டாங்க யோகத்தின்) மேலும் மேற்கூறிய சமாதி நிலைக்குக் கீழ் உள்ள இடைப்பட்ட நிலையில்தான் சஞ்சாரம் செய்ய வேண்டும். இங்குத்தான் பிரமம் நிஷ்டை என்ற ***ஞான பீடம்*** அமைந்துள்ளது. வேத வியாசர் இந்தப் பிரம்ம நிஷ்டையில் தான் வேதங்களையும், புராணங்களையும் உபதேசமாக இறைவனிடமிருந்து பெற்றார். மூலகணபதியின் துணையில்லாமல் இந்த முயற்சியில் வெற்றி கிடைக்காது.

*ஞான யோகம்*

சமாதிக்கு அருகில் உள்ள இந்த நிலையில் போதனை பெற்று மீண்டும் சாதாரண மானிட நிலைக்குச் சாதகன் வந்து போதனையைக்

குறித்துக் கொள்ள வேண்டும். ஒன்று அல்லது இரண்டு நொடிகள் மட்டுமே சாதகன் பிரம்ம நிஷ்டையில் தொடர்ந்து இருக்க முடியும். எனவே, ஞான யோகத்தின் (***பிரம்ம உபதேசம்***) ஒவ்வொரு வரிக்கும் இது போன்று தவத்தின் மேல் நிலைக்குச் சென்று மீண்டும் மனிதனின் சகஜ நிலைக்கு வந்து உபதேசத்தை குறித்துக் கொள்ள வேண்டும். நான்கு வேதங்களையும் இதர 18 புராணங்களையும் வேத வியாசர் இயற்ற இந்த முறையை ஒவ்வொரு எழுத்துக்கும் கடைப்பிடித்து இருக்கிறார் என்றால் எத்தனை கடினமான தவ முயற்சியால் சாதனை புரிந்து இருக்கின்றார் என்பதை உணர முடியும்.

எனவே, வேத வியாசரும் மானிடனாக இருந்து மேற்கூறிய பிரம்ம நிஷ்டைக்கு ஒரு கண நேரத்தில் செல்லும் தவ வலிமை பெற்று இருந்தார். பிரம்ம நிஷ்டையிலேயே ஸ்திரமாக லயித்து இருக்கும் பெரும் தவ நிலை ***அகத்தியர், திருமூலர், ஞான சம்பந்தர், நம்மாழ்வார்*** போன்ற தெய்வாம்சமான தபஸ்விகளுக்கு மட்டுமே உரித்தானது.

எனவே, ஜடமாகத் தியானத்தில் லயித்திருக்கும் சமாதி நிலையை (***நிர்விகல்ப சமாதி***) விட ஜீவன் முக்தர்கள் அனுபவிக்கும் பிரம்ம நிஷ்டை என்ற தவ நிலை உயர்ந்தது மட்டுமின்றி இறைவனின் ஞான உபதேசம் கிடைப்பதற்கும் உதவுகின்றது. அந்த பிரம்ம நிஷ்டை ஸ்ரீகணநாதன் அருளால்தான் ஏற்படும்.



# ஐந்தொழில்களும் ஸ்ரீ கணபதியும்

*ஐந்தொழில்கள்*

*"சுவற்றை வைத்துத் தான் சித்திரம் வரைய வேண்டும்"*. அதுபோல் கதைகள், புராணங்கள் இதிகாசங்கள் என்பவை யாவும் பல தத்துவங்களை உணர்த்தவே தோன்றின. எனவே, புதிராக இருக்கும் இயற்கையின் உண்மைகளை அறிந்து கொள்ள இக்கதைகள் மற்றும் புராணங்கள் உதவுகின்றன.

***வேத வியாசர்*** பதினெட்டு புராணங்களையும், நான்கு வேதங்களையும் இயற்றினார். இவை பெரும் தபோ நிஷ்டையில் இறைவனால் கூறப்பட்ட உண்மைகளின் அல்லது தத்துவங்களின் கதை வடிவங்களாகும். புராணக் கதைகள் யாவும் உண்மையானவை. அவற்றுக்குப் பின்னால் மறைந்திருக்கும் தெய்வீகத் "தத்துவங்களும்" உண்மையானவை. எனவே, தத்துவங்களைப் படிக்கும் மக்கள் அவற்றை விளக்க உதவும் புராணக் கதைகளைப் புறக்கணிக்கக் கூடாது.

யுகங்கள் மொத்தம் நான்கு வகைப்படும். ***கிருத யுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலி யுகம்*** என்பவையே அவை. சர்வேஸ்வரரான இறைவன் யுகங்கள் தோறும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் என்ற ஐந்தொழில்களையும் செய்கிறார்.

**படைத்தல்**

படைக்கும் தொழிலை இறைவன் செய்வது 84 லட்சம் வேறுபட்ட யோனிகளைக் உருவாக்கத்தான். அதாவது, ஊர்வன, பறப்பன, நடப்பன மேலும் இன்னும் எத்தனை வகைகள் உண்டோ, அவற்றுள் உள்ள யாவும் இந்த 84 லட்சம் யோனிக்களுக்குள் அடங்கும். எனவே, குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன் என்பது தவறு. அதை வெளியிட்ட டார்வின் என்ற ஆராய்ச்சியாளர் தனது கருத்து தவறானது என்பதை வெளியிட்ட போது மக்கள் அவரைக் கொன்று விட்டார்கள் என்று கூறுப்படுகிறது. எனவே புலிக்குப் புலியும், சிங்கத்திற்கு சிங்கமும், எலிக்கு எலியும் என்பது போல் ஓரினத்திலிருந்து தோன்றும் எதுவும் அதன் தாயைப் போன்று தான் இருக்க முடியும் என்பது நாம் நடைமுறையில் காணும் உண்மை. எனவே,

84 லட்சம் யோனிகளின் (ஜீவராசிகள்) வழியாகத் தான் இறைவன் படைப்புத் தொழிலைச் செய்கிறான்.

### காத்தல்

பிரும்மா, விஷ்ணு, ருத்ரன் எனப்படும் மூம்மூர்த்திகளுள் "***விஷ்ணு***" எனபவரே இத்தொழிலைச் செய்கிறார். உண்மையில் காத்தல் என்பதன் தத்துவம் என்னவென்றால் "மாயை"யிலிருந்து நம்மைக் காப்பாற்றுவது என்பதாகும். எனவேதான் தவத்தில் சிறந்த யாவரும் இவரைக் "*கபட சூத்திரதாரி*" என்று அழைக்கின்றனர். இவரது அருள் மிகவும் அவசியமாகிறது. யோகம், தவம் என்பது யாவர்க்கும் பொது. அதில் வெற்றி பெற்று அரிய சக்திகளையும், சித்திகளையும் பெறுவது அசுரர்களுக்கும் தேவர்களுக்கும் மற்றும் மகான்களுக்கும் பொதுவானது. ஆயினும் அவர்களுள் நல்லோரைத், தீயோர் அழிக்காமல் காப்பது விஷ்ணுவின் லீலைகள்.

### அழித்தல்

"அழிவு" என்பது படைப்பின் இறுதிக் கட்டம். படைக்கப்பட்டவை யாவும் காலத்திற்குக் கட்டுப்பட்டவை. எனவே, உரிய காலம் வந்ததும் அவை மறைந்து விட வேண்டும். இந்த மறைவிற்குக் காரணமாக இருந்து அழிப்பதைத் தனது விளையாட்டாகக் கொண்டிருக்கும் இவரே "***ருத்ரன்***" எனப்படுவார். இவரை வணங்குவதும் இவரது அருளைப் பெறுவதும் எக்காரியத்திற்கும் இன்றியமையாதது. "மகா ***ருத்ரன்***" எனப்படும் இவரே நமது தேகத்தத்துவங்களுக்கும் சலனங்களுக்கும் கூடக் காரணமாயிருக்கிறார். உடல் அழியாமல் இருந்தால்தான் மனிதன் எதனையும் சாதிக்க முடியும். எனவே, இந்தச் சவம் சிவமாகும் நிலையை அடைய நாம் செய்யும் தவத்திற்கு இவரது கருணை மிக முக்கியமாகிறது. தவத்திற்கு உடல் ஒத்துழைக்க இவர் அருள் தேவை.

### மறைத்தல்

இறைவன் படைத்த "மாயை" மற்றும் "அறியாமை" சக்தியே நம்மை மயக்கத்தில் ஆழ்த்தும் விதியாகவும் நியதியாகவும் செயல்படுகின்றன. முன்வினைப் பயனுக்கேற்ப நமது புலன்கள், மதி, மூச்சு, தேக இயக்கம் என்பன செயல்படுகின்றன. இதனால் நமது மனம்,

புத்தி, சித்தம், உணர்வு என்பன நம்மைப் பலவித உணர்ச்சிகளுக்கும், ஆசைகளுக்கும், எண்ணங்களுக்கும் செயல்களுக்கும் அடிமையாக்கி விடுகின்றன. இவற்றை வென்று புலனடக்கம் பெறுவதே "யோகம்", தவம் என்பன. ஆக, மனிதன் தனது ஆறாவது அறிவிற்கு அப்பாற்பட்ட பெரும் "**ஞான வெளி**"யை எட்டிப்பிடிப்பதற்குத் தடையான இந்த இயற்கைச் சக்தியே "மாயை" எனப்படும். இது நமது முற்பிறவிகளில் செய்த வினைகளின் மொத்தப் பலன் என்பது தெளிவு.

**அருளல்**

முன்வினைப் பயனுக்கேற்ப நமது புலன்கள் மற்றும் தேகத்தத்துவம் இவையாவும் செயல்படுகின்றன என்றும் அவையே மாயை (அல்லது) அறியாமை எனப்படுகிறது என்பதையும் மேலே கண்டோம். அவற்றை இறைவன் திருவருள் கொண்டுதான் வெல்ல முடியும். இறைவனின் இந்தக் கருணையைத்தான் அருளல் என்று அழைக்கிறோம்.

***சிறு மாயை – பெரு மாயை***

மேற்கூறிய ஐந்தொழில்களையும் செய்யும் பரமாத்மாவைச் "***சர்வேஸ்வரன்***" அல்லது "***பரம்பொருள்***" என்றும் மற்றும் "***ஆதி மூலம்***" என்றும் பலவாறாக அழைக்கிறோம். மாயை என்பது அறிவின் மயக்கம் (அல்லது) அறிவிற்கு உண்மைகள் புலப்படாமல் இருக்கும் நிலை (அல்லது) காலம் என்று கூறுலாம். இந்த மதிமயக்கம் மூன்று விதமான கர்ம வினைகளின் பயனாகச் செயல்பட்டு நமது தேக, மதி மற்றும் ஆத்ம இயக்கத் தத்துவங்களைப் பாதிக்கின்றன.

வினைப்பயனை முற்பிறவியில் செய்த வினைகளின் பயன்கள் என்றும், இப்பிறவியில் நாம் செய்யும் வினைகளின் பயன்கள் என்றும் இனி வரப்போகும் பிறவிகளில் நமது வினைகளின் பயன்களாகக் கிடைக்கப் போவது என்றும் "சாத்திரங்கள்" அழைக்கின்றன. இவற்றின் பயன்கள் முன் பின் மாறியும் நமது தேகம், மதி, ஆத்மா ஆகியவற்றை ஆக்ரமித்தும் செயல்படும். எனவேதான், ஜோதிடம், வைத்தியம், ஆகமம் போன்ற பல சாத்திரங்களை முன்னோர்கள் வகுத்து இருக்கின்றனர். இவற்றின் துணைகொண்டு வருங்காலம், நிகழ்காலம், கடந்த காலம் இவற்றை உணர்ந்து இவற்றின் பலாபலன்களுக்கு ஏற்ப ஆவன செய்து மக்கள் தங்கள் வாழ்வில் அமைதியைப் பெற வேண்டும் என்றும் முன்னோர்கள் விரும்பினார்கள். எனவே, தவத்தில் சிறந்த முனிவர்கள் இது போல் பல

சாத்திரங்களை இறைவன் கருணையின் பேரில் உணர்ந்து சாத்திரங்களாக எழுதியிருக்கின்றனர்.

மேற்கூறியபடி, வினைப்பயனாக ஏற்படும் மதி மயக்கத்தை "மாயை" என்று அழைக்கிறோம். மனிதனுக்கு ஏற்படும் இந்த மயக்கம் "*சிறு மாயை*" எனப்படும். இது போலத் தேவதைகளுக்கும் (இந்திரன், சந்திரன் போன்று) மதி மயக்கம் ஏற்படும். அதற்குப் "*பெரு மாயை*" என்று பெயர். இந்த இரு மாயைகளுக்கும் அதிபதி "ஸ்ரீ மகா கணபதி" ஆவார். எனவேதான் "*முழுமுதற் கடவுள்*" என்றும் ஆதிமூலம் என்றும் தேவர்களால் போற்றப்படுகிறார். முதலில் கூறிய ஐந்தொழில்களையும் இயக்கும் சக்தியைக் கொண்ட இவரது பெருமையைத் துதிக்கையுடன் கூடிய இவரது ஐங்கரங்கள் உணர்த்துகின்றன.

எனவேதான் 18 சித்தர்களுள் தலை சிறந்து விளங்கும் "*திருமூலநாயனார்*" இவரை "*ஐந்துகரத்தினை ஆனை முகத்தினை* என்று வருணிக்கின்றார்" இதைத்தான் விநாயகரின் பெரும் கருணை பெற்ற ஔவையாரும் இவரை "*வானோரும் காதலால் கூப்புவர் தம் கை*" என்று வருணிக்கின்றார். ஆதலால், சிறுமாயை, பெருமாயை என்ற இரண்டிற்கும் அப்பாற்பட்டு அவற்றின் அதிதேவதையாக இவர் விளங்குகிறார்.

முன் சொன்னபடி நான்கு யுகங்களில் ஒவ்வொரு விதமான சக்தியும் தேக அமைப்பும், அறிவும் அமைகின்றன. உதாரணமாக, அசுரன், இராட்சதன் போன்ற இனங்கள் முன் யுகங்களில் இருந்து வந்த பெரும் சமயங்களை வால்மீகி, வியாசர் போன்ற மகரிஷிகள் புராணங்களாகவம், இதிகாசங்களாகவும் படைத்தனர். ஆனால், எல்லா யுகங்களிலும் படைக்கப்பட்ட ஜீவன்களையும் சிறு தேவதைகளையும் ஆட்கொண்டு மதியிழக்கச் செய்வது இவ்விரண்டு மாயைகள்தான். எனவே, காரண காரியங்களைக் கொண்டு இறைவனின் திருவிளையாடல்கள் ஏற்படும். இவற்றின் விளைவுகள் தான் புராணங்களாகவும், இதிகாசங்களாகவும் தோன்றியுள்ளன. மேலும், இவற்றைப் பெரும் தவநிலையில் படைத்த நமது முன்னோர்கள், மனிதனின் வாழ்க்கைக்கு உகந்தவாறும், அவனது ஆன்மிக (அல்லது) அறிவு வளர்ச்சிக்கு ஏற்றவாறும் அமைத்து இவற்றால் மனிதன் தன்னையும் தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கையின் தத்துவங்களையும் உணரும்படி செய்துள்ளனர். எனவே, இவற்றைப் படிக்கும் நாம்

புராணங்களில் காணப்படும் கதைகளையும், அதில் நிறைந்திருக்கும் பெரும் உண்மைகளையும் சமமான கண்ணோட்டத்துடன், பக்தியுடன் காண வேண்டும். உயிரும், உடலும் போன்ற இவை இரண்டும் (கதைகளும் + தத்துவங்களும்) மனிதனுக்குப் பெரும் சிந்தனைத் திறனையும், ஆழ்ந்த தெய்வ பக்தியையும் தரவல்லன. "நேற்று, இன்று, நாளை" என்ற மூன்றையும் இணைக்கும் பாலம் இது போன்ற தத்துவம் ஒன்றுதான். எனவே, காலச் சக்கரத்தின் சுழல்களை பிரதிபலிக்கும் இந்த அரிய உண்மைகளை நன்கு உணர்வோம்.



# நிஜ ஆனந்த போதம்

*ஜாடாராக்னி*

மனிதனின் எண்ணத்திற்குள் தெய்வீக வாக்கு மறைந்திருக்கிறது. இந்த அமரவாக்கு அவனது ஆத்மாவிற்குள் உறைந்துள்ளது. அவனது அலைபாயும் சித்தத்தில் அமர்ந்துள்ளது. மனிதன் உயிரோடிருக்கச் சுவாசம் அவசியம். சுவாசிக்காமல் அவன் உயிரோடு இருக்க முடியாது. ஆனால், சுவாசம் நடக்கும் வரை சித்தம் சலனப்பட்டுக் கொண்டிருக்கும். இந்த மூச்சுக் காற்று எங்கிருந்து வருகிறது என்றால் மனிதனுக்குள்ள தேஜோ சக்தி தேய்ந்து சிதறிய நிலையில் உருவாகிறது. இந்தத் தேஜோ சக்திதான் மனிதனுக்குள் இருக்கும் ஐந்து வித அக்னிகளின் ஒருங்கிணைப்பாகும். பொதுவாக, மனிதன் உயிர் வாழ மூச்சுக் காற்றும் உணவும் அவசியமாகின்றன. இந்த உணவை உண்பதற்குப் பசியும், செரிப்பதற்குச் சக்தியும் தேவைப்படுகிறது. இந்த இரண்டு காரியங்களையும் செய்வது மேற்கூறிய ஐந்து அக்கினிகளுக்குள் ஒன்றான ***"ஜாடாராக்னி"*** அல்லது "***பசி, தீபாக்னி***" என்பதாகும்.

மனிதனின் தேஜோ சக்தி சிதறிய நிலையில்தான் இந்த ஜாடாரக்னி ஏற்படுகிறது. தேஜோ சக்தியின் உதவியால் தான் நமது எண்ணத்திற்குள் மறைந்திருக்கும் அருள் வாக்கை உணர முடியும். இந்த *தேஜோ சக்தியை* மீண்டும் பெற ஜாடாராக்னி மறைந்து, "***தேஜஸ்***" ஆக மாற வேண்டும். ஜாடாராக்னி மறைந்து விட்டால் பசி, தாகம் எல்லாம் அறவே ஒழிந்துவிடும். இந்த நிலையில் மனிதன் உயிர் வாழ முடியாது. ஆகவே பசி, தாகம் இவற்றைக் கட்டுப்படுத்தினால் தேஜோ சக்தி உதிக்க வழி கிடைக்கும். இந்தக் கருத்தை மனதிற் கொண்டுதான் உபவாசங்கள், விரதங்கள் போன்ற யோக முறைகளைத் தெய்வ வழிபாட்டில் முன்னோர் இணைத்துள்ளனர். எனவே, தேஜோ சக்தியின் உதவியால் மட்டுமே சித்தமிசை குடி கொண்டுள்ள பேரறிவான தெய்வத்தை, "அருள் வாக்கு" மூலமாக உணர முடியும். முற்காலத்தில் காட்டில் தவம் செய்த முனிவர்கள் தேக உணர்வு அற்று, பசி தாகம் ஆகியவைகளை அடக்கிச் சித்தத்தைச் சிவன்பால் செலுத்திச்

சித்திகளைப் பெற்றனர் என்றால், அவர்கள் செய்த தவம் எத்துணை கடுமையானது. எப்படி மரணத்தையும் மிஞ்சி நிற்பது என்பதை நாம் இங்குச் சிந்திக்க வேண்டும். பிறப்பில் நாம் இழந்த தேஜோ சக்தி நமது எண்ணமாக, மூச்சாக, பேச்சாக, தாகமாக, தேக உணர்வாகச் செயல்படுகிறது. இவை அனைத்தையும் அடக்கி மீண்டும் தேஜோ சக்தியைப் பெறுவது தான் யோகம். இந்தச் சாதனையின் சுருக்கமான விளக்கத்தை இனிக் கீழே காண்போம்.

***தேஜோ சக்தி*** என்பதைச் சுருக்கமாகச் சொன்னால் நமது உடலில் ஜாடாராக்னியும், சுவாசமும் சித்த சலனமும் ஒன்று கூடி ஸ்தம்பித்த நிலையாகும். இதற்கிடையில் மேற்கூறிய அருள் வாக்குச் சக்தியோடு இணைந்திருக்கும் **ஆதித்யன்** அல்லது **சூரியக் கலை** நமது ஆத்மாவுடன் இணைப்பின்றி இயற்கையால் மற்றும் நமது பிறப்பால் துண்டிக்கப்பட்டிருக்கிறது. இந்த இணைப்பை மீண்டும் பெறுவது யோகத்தின் முதற் பாதி ஆகும்.

***வாக்கு மவுனம்***

சித்த சலனத்தை மந்திர சித்தியால் வென்று அதனை நிறுத்த வேண்டும். இந்த நிலையில் மனிதன் காலம், தேசம் என்ற இயற்கையின் விதிகளை மீறிய நிலைக்குச் சென்று விடுகிறான். இது மட்டுமின்றி அவன் சாகா நிலைக்கு அருகில் சென்று விடுகிறான். மரணப்படுக்கையைத் தாண்டிய நிலை இது. எமன் இவனது உயிரைக் கவர்வதில்லை. எண்ணம் தோன்றுகின்ற கருமூலம் இங்குத்தான் இருக்கிறது. இங்கு மனிதன் **ஆதித்யன்** என்ற சூரிய நாடியில் சித்தத்தில் ஒடுங்குகிறான். புலன்கள் மற்றும் இகலோக உணர்வோடு தொடர்பற்ற சுத்த சித்தம் இங்குத்தான் இருக்கிறது.

கருவில் பேரறிவாக (ஞான திருஷ்டி) நம்முடன் இருந்த சக்தி நாம் பிறந்ததும் தேய்ந்து கர்ம வினையால் சித்த விருத்தியாக மாறி விடுகிறது. இந்தச் சித்த விருத்தியைத்தான் சந்திரகாந்தம் அல்லது இட நாடியின் (இடா) கதிர்வீச்சு என்று யோக நூல்கள் வருணிக்கின்றன. நமது ஆத்மா பிங்கலை என்னும் சூரிய நாடியோடு இணையாமல் சந்திர நாடியை அனுசரித்து இருக்கும் நிலை இது. இதுவே மாயை எனப்படும்.

இப்படி ஆத்மா சந்திர நாடியை ஒட்டியிருப்பதால் பேரறிவிடம் அதனைச் சார்ந்த ஆதித்ய கலையையும் அழிந்து நமது பேச்சின் திறனாக மாறுகிறது. எனவே, "*வாக்கு மவுனம்*" மனத்தின் மவுனம்" ஆகிய இரண்டின் துணைகொண்டு மவுனத்தின் அடித்தளத்தில் இருக்கும் ஆதித்யன் கலையும், அதனைக் கொண்டு முக்காலத்தையும் உணர்த்தும் பேரறிவையும் யோகத்தில் பிடித்து இழுக்க வேண்டும்.

எனவே, பேச்சை அடக்கி ஆதித்தன் கலையையும், மூச்சையும், எண்ணத்தையும் அடக்கிச் சித்த சலனத்தை நிறுத்தி அருள் வாக்காக மலரும் ஞான திருஷ்டியைப் பெற வேண்டும். இதற்குச் சிறந்த உபாயம் "*நாதோபாசனை*" என்பது என்று யோக நூல்கள் கூறுகின்றன.

***நாதோபாசனை* என்றால் என்ன?**

நாம் பேசும் பேச்சின் ஒலி அலைகள் காற்றில் மிதந்து வந்து நமது செவிகளை அடைந்து நமது கேட்கும் சக்தியோடு இணைகிறது. இப்படித்தான் நாம் பேசுவதை நாமே கேட்க முடிகிறது. இந்த நிலைமாறி நமது சொல், அது காற்றில் செல்லும் வழிமுறை அதனைக் கேட்கும் நமது திறன் இவை மூன்றும் ஒருங்கிணைவது நமது மவுனத்தில்தான். எனவே பெரும் மவுனத்தில் நமது பேச்சு நாதமாக மாறுகிறது "**ஊமை எழுத்து**" என்று இதற்குப் பெயர். இதுவே **ஆதித்தன் கலை** என்பது. இப்படி இறையுணர்வு ஆழ்நிலை தியானத்தில், நமது மூச்சு, பேச்சு, எண்ணம் இவையாவும் அழிந்த நிலையில் நாத ஒலியாக (காமகலா) உள்ளத்திலிருந்து இறைவனின் போதனைகள் உருவாகுகின்றன. இதுவே ஞான உபதேசம் என்றழைக்கப்படும் இங்கு மனிதனின் ஆத்மாவே அவனுக்கு ஆசானாகிறது. இங்கு மனிதனின் உள்ளத்திற்கும் அவனது ஆத்மாவிற்கும் ஓர் இணைப்பு ஏற்படுகிறது. அந்தர்யாமியாக எல்லா உயிர்களுக்குள்ளும் இயங்கும் இறைவன் இங்கு மனிதனின் உள்ளத்தில் போதனை செய்கின்றான்.

**ஞான உபதேசம்**

யோக முறையில் இதனைச் சற்று விளக்குவோம். அஷ்டாங்க யோக முறையில் மூச்சை அடக்கும் செயல் **பிராணாயாமம்** என்றழைக்கப்படுகிறது. இதன் பொருள் மூச்சை அடக்குவது என்பதாகும். மூச்சும் மனமும் ஒன்றுக்கொன்று இணைந்துள்ளது.

மூச்சில்லை என்றால் மனமில்லை, மனமில்லை என்றால் மூச்சில்லை. எனவே, மூச்சையடக்கி முக்தி பெறலாம் என்ற முயற்சி வீணானது. மேலும், மூச்சையடக்குதல் ஆபத்தானதும் கூட. நேராக மூச்சை அடக்குவது இயற்கையுடன் மோதுவதற்குச் சமம். மேலும், மூச்சின் இருப்பிடமான நாபிக்கமலம், மூச்சை அடக்குவதால் தேஜோ சக்தியை வெளிக் கொணடு வர முடியாது. மூச்சுடன் கலந்திருக்கும் எண்ணமும் மனமும் அழிந்து மவுனத்தில் இலயிக்க வேண்டும். அங்கும் சிறிதளவு ஓர் ஆனந்த நிலை கிடைக்க வாய்ப்பிருக்கிறது. மூச்சை இயக்கும் இயற்கை நம்மிடம் சரணாகதி அடையும் முதல் நிலை இதுதான். இங்குக் கிடைக்கும் சிறு ஆனந்த நிலையில் சாதகர்கள் மயங்கி நின்று விடுகிறார்கள்.

இந்தப் பிராணாயாமச் சித்தியைப் பெறுவதற்கு ஸ்ரீ வித்யா உபாசனையில் ***சோடசாக்ஷரி மந்திரத்தைக்*** கையாளுகின்றனர். சிலர் பிராணாயாமத்தையும் சோடசாக்ஷரி மந்திர ஜபத்தையும் இணைத்தும் முயற்சி செய்கின்றனர். அவர்களும் ஜீவன் முக்தி அடைவதில்லை – இறைவனின் ஞானபோதமும் பெறுவதில்லை. எது இங்குத் தடையாக இருக்கிறது என்றால் பேச்சின் அடித்தளம் ஆகும். வெளிப்பேச்சு, பேச்சாக மாற இருக்கும் பேச்சின் அலைகள் ஆக இவை இரண்டும் முற்றிலும் அழிய வேண்டும். இந்த வெளிப்பேச்சு மற்றும் பேசப்படாத பேச்சின் அலைகளுக்கும் அதிபதி **மூல கணபதி** ஆவார்.

எனவே, மூல கணபதியின் அருளின்றி பேச்சின் அலைகள் முற்றிலும் அழியாது. இந்தச் சாதனை சித்தித்தால் ஒழிய ஞான உபதேசம் உள்ளத்திலிருந்து தோன்றாது. வேத வியாசர் கணநாதனின் துணை கொண்டு நான்கு வேதங்களைப் பிரம்ம நிஷ்டையில் ஞான உபதேசமாக உணர்ந்து உலகிற்கு அளித்தார் என்பதன் பொருள் இதுதான். ஸ்தூலமான ஒலி அலைகள் சாதாரண மனிதனின் செவிகளுக்குக் கேட்கின்றன. அதிசூட்சுமமான ஒலி அலைகள் தான் "***நாத ஒலி***" என்றழைக்கப்படுகிறது. தவத்தில் மனிதனின் உள்ளத்திலிருந்து அவனது அந்தராத்மா செய்யும் போதனை இதுதான். இதுவே பகவத் கீதையின் தத்துவ விளக்கமாகும். "*ஜீவ ஆத்மாவை*" ***அர்ஜுனனாகவும்***, "*அந்தர்யாமியைக்*" ***கிருஷ்ணனாகவும்***, ஞான உபதேசத்தைப் பகவத் கீதையாகவும், தந்து இருக்கும் இரகசியம் இங்குத் தெளிவாகிறது.

**அருள் வாக்கு**

சித்தத்தின் விருத்தியை நிறுத்துவதே "*சகஸ்ரார சித்தி*" என்ற தவறான கருத்தும் மக்களிடையே நிலவுகிறது. சித்தத்துள் உறைந்திருக்கும் இறைவனின் வாக்கு மனிதனின் உள்ளத்தில் தோன்றுவதற்குச் சித்தத்தை அடக்கியதோடு அல்லாமல் பேச்சும், சொல்லும் உற்பத்தியாகும் சிற்றறிவும், மனமும் அழிய வேண்டும். ஆத்மாவில் கலந்திருக்கும் ***ஆதித்யன் கலை*** சித்தத்தில் மனிதனின் வலச் செவியில் மறைந்திருக்கிறது. பேச்சு, மூச்சு, எண்ணம் இவையாவும் அழிந்து, பெரும் தவ நிலையில்தான் இந்த ஆதித்யன் கலை உதயமாகும். இதுவே ஓம்காரத்திலுள்ள "**அகார சித்தியாகும்**". சைவ சித்தாந்தங்கள் "**அகாரத்தை**" ஸ்ரீ பரமேஸ்வரன் என்று வருணிக்கிறது. தியான சமாதியில் மூச்சு, பேச்சு, எண்ணம் யாவும் அடங்கிய நிலையில் மனிதனின் பேச்சுத் திறனே மேற்கூறிய அகார ஒலியாக மாறுகிறது. இந்தத் தத்துவத்தை ***அமரகவி சித்தேஸ்வரர்*** வெகு அருமையாகச் சித்திரித்திருக்கிறார். அந்தப் பாடல் பின் வருமாறு:

*"மூச்சு பிறக்க காது அறுந்தது*
*ஒட்டு அதை நாவின் மூலம்"*

மனிதனின் உயிர்மூச்சு (**மகா தேஜோ சக்தி**) கருவில் அழியாமல் இருக்கிறது. பிறந்தவுடன் மனிதன் இந்தச் சக்தியை இழக்கிறான். இந்தச் சக்தியை தான் "**காது**" என்று மேற்கண்ட செய்யுள் குறிக்கிறது. இங்குக் காது என்பது இறைவனின் "ஞான உபதேசத்தை" (*ஓம்காரத்தை*) கேட்கும் சக்தி என்பது தான். பிறந்தவுடன் இந்தச் சக்தி மறைந்ததை அறுந்தது என்று குறிப்பிடுகிறார். மனிதன் பிறந்ததும் உயிர்மூச்சு மறைந்து "***சிறுமூச்சு***" செயல்படுகிறது. இதை **மூச்சு** என மேலே குறிப்பிடுகிறார். அறுந்த காதைப் (உயிர்மூச்சு) பெறுவதற்கு, பேச்சை அடக்கிச் சாதனை புரிய வேண்டும் என்பது பொருள். நாவின் மூலம் என்பதன் பொருள் இதுதான். எனவே, தவத்தில் பிரம்ம நிஷ்டை பெற்று இறைவனோடு உறவாடி ஞான உபதேசம் பெறுவதற்கு மூச்சை மட்டும் அடக்கினால் போதாது. எண்ணத்தை மட்டும் நிறுத்தினாலும் போதாது. சொல் (பேச்சு) பூரணமாக அடங்க வேண்டும். அடங்கிய இந்தச் சொல் அகாரச் சித்தியாகி "***அருள் வாக்குப்***" பெறுவதற்கு வழி செய்கிறது. இதை அறிந்து உணர்வதே நிஜ ஆனந்த போதம்.

# பிரணவ தேகமும் ஞான தேகமும்

"அருட் பெருஞ்சோதி தனிப்பெரும் கருணை
தனிப் பெரும் கருணை அருட்பெரும் சோதி"

என்று சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் இறைவன் ஜோதி வடிவமாக இருக்கிறார் என்று கூறியுள்ளார். அறிவு "ஜோதி" வடிவமாக இருக்கிறது என்று யோக நூல்கள் வருணிக்கின்றன. தாயுமானவர் அறிவைப் பற்றிக் கூறுகையில் "*சித்தமிசை குடி கொண்ட அறிவான தெய்வமே தேஜோ மய ஆனந்தமே*" என்று இறைவன் பேரறிவாகவும், ஒளி மயமாகவும், ஆனந்த வடிவமாகவும் இருக்கிறார் என்று வருணித்துள்ளார்.

### மனிதனின் சிற்றறிவு

மனிதன் ஆறு அறிவு கொண்ட ஜீவனாக இருக்கிறான். இந்த ஆறாவது அறிவினால் புலன்களின் துணைகொண்டு மனிதனின் புத்தி, மனம், சித்தம் ஆகியவை செயல்படுகின்றன. இவை இயற்கையின் ஸ்தூல வடிவங்களை மற்றும் செயல்களை மட்டுமே விளக்கும். விஞ்ஞானிகளும் இந்த ஆறாவது அறிவிற்குள் அடங்குகின்றனர். புலன்களைக் கொண்டு விஷயங்களை அறிவது "சிற்றறிவு" என்று பெயர். இது "நான்," எனது, என்ற அகங்காரத் தத்துவத்துடன் செயல்படுவதாகும். இங்குச் சிற்றறிவில் பரபக்தியோ, தியானமோ, இறையுணர்வோ, எல்லாம் இறைவன் செயல் என்ற மெய்யடக்கமோ கிடையாது. எனவே, இந்தச் சிற்றறிவை, இதன் கீழ்ச் செயல்படும் புலன்கள், தேகச் செயல்கள், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், ஆணவம் ஆகியவை யாவும் அடங்கிய நிலையான பிரம்ம நிஷ்டையில், இறைவனின் ஏழாவது அறிவான பேரரறிவு இயங்கத் தொடங்கும். அச்சமயம், நமது தேகம் சாதாரண மனிதத் தன்மையற்றுத் தெய்வீக நிலையில் இயங்கும். இந்தத் தெய்வீகத் தன்மை கொண்ட தேகத்தைப் "*பிரணவ தேகம்*" என்று யோக நூல்கள் கூறுகின்றன.

### ஐந்து வகை தேகம்

இப்படி மனிதனின் ஸ்தூல தேகம் தேவ கதியில் இயங்கிப் பிரணவ தேகமாக மாறும் நிலைகளை கணங்களுக்கேற்ப வள்ளலார்

ஐந்து வகைளாக வகுத்துக் கூறியுள்ளார். அவை முறையே

**1. இருள் தேகம்,**

**2. மருள் தேகம்,**

**3. சுத்த தேகம்,**

**4. பிரணவ தேகம்,**

**5. ஞான தேகம்**

என்று ஐந்து விதமாக வருணித்திருக்கிறார். வேத நூல்கள் இதனை **ஸ்தூல தேகம், சூட்சும தேகம், காரண தேகம், மகா காரண தேகம்** என்று வருணித்துள்ளன. நாயன்மார்களில் சிறந்தவரும், சைவ சித்தாந்தத்தைத் ***திருமந்திரம்*** எனும் நூலாகத் தந்தவருமான **திருமூல நாயனார்** இந்த நிலையை "*ஜீவன் சிவமாகிய நிலை*" என்று வருணித்துள்ளார்.

**அழிவில்லாத நிலை**

சவம் சிவமாகிய நிலை என்றும் வருணிப்பதுண்டு. மனித தேகம் காலம், இடம் என்ற இயற்கையின் சட்டத்திற்குக் கட்டுப்பட்டதாகும். ஆனால் யோகத்தால், தவத்தால், தேகம் சிவமாக மாறிவிட்டதால், இயற்கையின் நியதிக்கு அப்பாற்பட்டதாகிவிடும். இந்த நிலையையடைந்த மகான்களைத்தான் "***சிரஞ்சீவி***" என்று அழைக்கிறது வேதம். சிரஞ்சீவி என்ற பதத்தின் பொருள் என்றும் நிலைத்திருத்தல், அழிவில்லாதது என்பதாகும். இராமாயணத்தில் வரும் ஆஞ்சநேயர், ஜாம்பவான் போன்றவர்கள் சிரஞ்சீவிகளாக இன்றும் தவத்தில் நிலைத்திருந்து மக்களுக்கு அருள் பாலித்து வருகின்றனர். இந்தச் சிரஞ்சீவி நிலையைத்தான் யோக நூல்கள் வருணிக்கின்றன. யோகத்தில் இந்த நிலையையடைந்த மகான்கள் **பிரணவ தேகத்தில் (அல்லது) ஞான தேகத்தில்** இருப்பதாகவும் சஞ்சரிப்பதாகவும் சொல்லப்படுகின்றது. இதன் யோக விளக்கத்தை இனிச் சிறிது சிந்திப்போம். சித்தர்கள், யோகிகள், தவசிரேஷ்டர்கள் கண்டு உணர்ந்து அனுபவிக்கும் பேரின்ப நிலையில் லயித்து சமீப காலத்தில் வாழ்ந்த *நெரூர் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர்*, மந்தராலய மகான் *ஸ்ரீ இராகவேந்திரர்* போன்றவர்களும் மற்றும் *அகத்தியர், பாம்பாட்டி சித்தர், இடைக்காட்டுச் சித்தர், திருமூலர்,* ஔவையார், *அமரகவி சித்தேஸ்வரர்* போன்றவர்கள் இந்த வகுப்பைச் சார்ந்தவர்களாவர்.

**பிரணவம்** என்பது ஓம் என்ற எழுத்து. ஏகாட்சரம் என்ற இது சகல காரியங்களுக்கும் காரணமாகிறது. பிரணவத்தின் கூறு ஏழு சுவரங்களான ச, ரி, க, ம, ப, த, நி என்பது உண்மை. நாதோபாசணையில் பிரணவத்தின் பொருள் அவ்வாறு அடங்கியிருக்கிறது. ஏழு சுவரங்களில் ''த'' என்ற **தைவதம்** பெரும் தவநிலையைக் குறிக்கிறது. அதனைக்கேட்ட ஞானி (நிஷ்டையில்) இறைவனுடன் தொடர்பு கொள்ளும் ஆற்றலைப் பெறுகிறார். வேதரிஷி வியாசர் அவ்வாறு தைவதம் சித்தியாகித்தான் வேத நூல்களைப் பெற்று நமக்கு ஞானத்தை உண்டாக்கினார். அவ்விதம் சித்தி பெற்றவர்களது தேகம் நமது மானிட தேகம் போல இல்லாமல் தெய்வீகமான ''சுயம்பு'' தேகமாக மாறி விடும். மேலும் தேவகதியில் செயல்படும் அவைகள்தான் ''**பிரணவ தேகமும், ஞான தேகமும்**'' ஆகும். இதில் பிரணவ தேகத்தைக் காட்டிலும் சிறந்தது, மேலானது ஞான தேகம் – ஞானசம்பந்தர், ஔவை, அமரகவி, அகத்தியர் போன்றவர்கள் கொண்ட தேகம் ஞான தேகமாகும். ஞான உபதேசம் அதில் தான் கிடைக்கும்.



## பிரணவ் தேக யோக விளக்கம்

*அமிர்த கலை*

நமது உடலில் *அமிர்த கலை* என்ற பெரும் சக்தி நமது *"மூலப் பிராணனுடன்"* சேர்ந்திருக்கிறது. பிறப்பில் நமது தெய்வீகச் சக்தியான மூலப் பிராணன் கர்ம வினை மற்றும் இயற்கையின் செயலுக்கேற்ப வலுவிழந்து முச்சு, பேச்சு, தேக உணர்வு, புலன்களின் இயக்கம், எண்ணம் ஆகிய சித்த சலனங்களாக மாறி, மனிதனின் கர்ம தேகத்தை இயக்குகின்றன. யோகத்தில் மேற் கூறிய சலனங்களை வென்று புலனடக்கத்தில் தியான சமாதியான நிஷ்டையில் நாம் லயித்து விட்டால், நமது கர்ம சரீரம் நீங்கித் தேவ கதியில் இயங்கும் *பிரணவ தேகமாக* மாறிவிடும். அங்குதான் "**அமிர்த கலை**" என்னும் மகத்தான சக்தி நமக்குள் ஊறும். இதுவே இறைவனிடமிருந்து நமக்கு ஞான உபதேசத்தையும், போதனைகளையும் பெற்றுத் தருகிறது.

இந்த அமிர்த கலையைத்தான் (நாத ஒலி) "**காம பீஜம்**" என்று ஸ்ரீ வித்தை வருணிக்கிறது. இந்தக் காம பீஜத்தை நமது உயிரோடு தியானத்தில் சேர்ந்திருக்கும் தருணம் நமது நாபிக்கமலத்தில் பேச்சு மூச்சை விழுங்கும். அப்போது நமது சுவாசம் மேல் நோக்கும் முகமாகச் செயல்படத் துவங்கும். அங்குச் சாதாரண மனிதனைப் போல் வெளிக்காற்றைச் சுவாசிக்கத் தேவையில்லை. "*பிராண வாயு*" நமக்குள்ளாகவே இயங்கி நமது சுவாசத்தின் தேவையைப் பூர்த்தி செய்து விடுகிறது. இது சிரஞ்சீவிகள் நிலையாகும். இங்குச் "*சோடசக் கலை*" தெய்வீகக் காட்சியாக மாறி ஞான போதம் செய்கிறது. இதுவே ஸ்ரீ தேவியின் ஞானப்பால். ஞானசம்பந்தர் அனுபவித்த பெரும் தவநிலையாகும் இது. இதை உணர்ந்து அன்னையின் ஞான போதத்தைக் கேட்ட செவிகளை உடையவனைத்தான் "*தோடுடைய செவியன்*" என்ற ஞானசம்பந்தரின் தேவாரச் செய்யுள் உணர்த்துகிறது. இதுவே அமரகவி சித்தேஸ்வரும், இடைக்காட்டுச் சித்தரும் அனுபவித்த நிலை. (பிரணவ தேகம் / ஞான தேகம்).

*தியான சமாதி*

இப்படி "*அமிர்த கலை*" (*காம பீஜம்*) தோன்றிய நிலையில் *சோடசக் கலை* என்ற ஞான உபதேசம் மகான்களின் உள்ளத்திலிருந்து தோன்றிப், பல உண்மைகளை உலகிற்குத் தந்துள்ளது. இங்கு ஞானிகள்

தேக உணர்வற்று, செயலற்று, பிரம்ம பாவத்தில், பரபிரம்ம உணர்வில் லயித்திருக்கின்றனர். சமீப காலத்தில் வாழ்ந்த நெரூர் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் இந்த நிலையில் "*ரே ரே, சர்வம் பிரம்ம மயம்*" என்று சொல்லியதன் பொருள் "***நானும் எல்லாப் பொருள்களும் ஒரே பிரம்மமாகத் தெரிகிறது***" என்பதாகும். இங்குதான் சித்தம் தெளிகிறது. *பிரம்ம பாவத்தில்தான்* நாபி கீழ் நோக்கி இயங்கும் மனிதனின் சுவாசத்தை மாற்றிச், சுவாசத்தின் உயிர் நிலையைத் தியானத்தில் தெய்வீக வாக்கோடு இணைக்கிறது. இங்கு நாம் சாதாரணமாகப் பேசும் பேச்சுத் திறனும், மனமும் அடங்கி ஒடுங்கிய நிலையில்தான் நமது உயிரின் மகாசக்தி நமது உள்ளத்திலிருந்து வெளிப்படும் தெய்வ வாக்கோடு இணைகிறது. இதனைச் செய்வது நமது நாபிக் கமலமே ஆகும்.

சித்த விருத்தியில் மனிதனின் பிராணச் சக்தி அவனது மயிர்க்கால் வழியெல்லாம் வெளியேறி இளமை குன்றி, மூப்பு, பிணி, சாக்காடு போன்ற அழிவு நிலையை அவனது உடலுக்குச் சேர்க்கிறது. தியான சமாதியில் இந்தப் பிராண விரயங்கள் நீங்கி மயிர்க்கால் வழியெல்லாம் வெளியேறும் பிராணச் சக்தி சேமிக்கப்பட்டு மேற்கூறிய உயிரின் சக்தியோடு இணைக்கப்படுகிறது. "***ஔவையாரும்***" தனது யோக நூல்களில் "***மயிர்க்கால் வழியெல்லாம் மாய்கின்ற வாயுவைத் தேகத்தில் பூண்***" என்று கூறியுள்ளார். எனவே, தியானச் சமாதியில் "**வாயு தாரணை**" எனப்படும் பிராணச் சக்தியின் சேமிப்பு அதிகரித்து நமது உயிரின் சக்தி, நமது உள்ளத்தின் ஓசையோடு இணைவதற்கு உதவுகிறது. உள்ளம் நம்முடன் பேசும் நிலைதான் "***ஞான உபதேசமாகும்***". இறைவன் ஞானிகளோடு பேசித் தத்துவங்களை உரைப்பதும் இந்த உள்ளத்தின் வழியாகத்தான்.

## ஆதிசக்தி – பிருத்வி தத்துவம்

"*ஆகாயத் தத்துவத்தை*" (*பஞ்ச பூதத்தில்*) வென்று ஆத்மாவுடன் இணைப்பதே இதன் தத்துவம். "ஆகாயத் தத்துவம்" எல்லா ஒலி அலைகளுக்கும் பிரமாணமாக இருக்கும் கருவியாகும். ஆகாயத்தின் மூலம் தான் ஒலிகள் நமது அறிவுக்கு எட்டுகின்றன. இந்த ஆகாயத் தத்துவத்தை வென்று தியான சமாதியில் சில விநாடிகள் நிற்பதே "***பிரணவ தேகம்***" ஆகும். இத்துடன் பிருத்வி (மண்) தத்துவத்தையும்

வென்று நிற்பதே மானிடர்களுக்கு அரிதான விஷயமாகும். இந்தப் பிருத்வி (மண்) தத்துவம் என்பது அண்ட சராசரமும் தோன்றுவதற்கு முன் இருந்த மூலப் பொருளாகிய "ஆதிசக்தி" ஆகும். கர்ப்பத்தின் சிருஷ்டி மூலம்தான் இந்தப் பிருத்வித் (மண்) தத்துவம். இதன் அதிபதி மூல கணபதியாவார். எனவேதான் கணபதியை மண்ணில் பிடித்து வைத்து விநாயக சதுர்த்தியில் கொண்டாடுகிறோம். மேலும், இவரை "*முழு முதற் கடவுள்*" என்றும் அழைக்கிறோம்.

இந்தப் பிருத்வி தத்துவத்தையும் வென்றவர்கள்தான் **சிரஞ்சீவி** என்றழைக்கப்படுவார்கள். அவர்களுக்கு அழிவு என்பதே இல்லை. அவர்களால் முடியாத விஷயங்கள் இல்லை. அஷ்டமகா சித்திகளும் அவர்கள் வசம். இயற்கையும் அவர்கள் விருப்பத்திற்கிணங்கச் செயல்படும் மற்றும் வசப்படும். இறைவனுக்கு நிகரான பராக்கிரமம் உடையவர்கள் அவர்கள். ***ஆஞ்சநேயர், அகத்தியர், பிருகு*** போன்ற தவசிரேஷ்டர்கள் இந்நிலையைக் கண்டவர்கள். இவர்கள் இறைவனின் பிரதிபிம்பங்களாவார்கள். இவர்களது தேகம் நமது தேகத்தைப் போன்று இல்லாது தெய்வீகத் தன்மையோடு தேஜோமயமாக விளங்கும்.

***ஞான தேகம்***

18 சித்தர்களில் ***காகபுஜண்டர்*** என்பவர் நான்கு சதுர் யுகங்களாக வாழ்ந்து கொண்டு இன்றும் ஜோதி வடிவமாக இருப்பதாக சித்தர்களின் நூல்கள் கூறுகின்றன. இவர்கள் அடைந்த ஞான தேகம்தான் வள்ளலார் கண்ட உண்மை நெறியாகும். சாகா நிலை (அல்லது) மரணமில்லாப் பெருவாழ்வு என்று ***இராமலிங்க அடிகள்*** விளக்கும் பெரும் தவநிலை இதுதான். இதுவே ஞானதேகமாகும். இதை அடைவது தான் "காய **சித்தி**" என்றழைக்கப்படுகிறது. ***நம்மாழ்வார் அமரகவி சித்தேஸ்வரர்*** போன்றவர்கள் கண்டு உணர்ந்த இந்தத் தெய்வீகத் தேகத்தை "***திருமேனி***" என்று யோக நூல்கள் வருணிக்கின்றன. பேரறிவு ஆட்கொண்டு, சூழ்ந்துள்ள தேகமது. அதனைக் கண்டவர்களுக்கே முக்தி உண்டு என்றால் அதனைக் கொண்டுள்ள தவசிரேஷ்டர்களை வருணிக்க முடியுமா என்பதை நாம் உணர வேண்டும். எனவே, *திருமேனி* என்றழைக்கப்படும் தெய்வீக தேகம்தான் "***பிரணவ தேகமும், ஞான தேகமும்***" ஆகும். இதன் யோகச் சூத்திர விளக்கம் யாதெனின் பிரம்ம நிஷ்டர்களும் தவத்தில்

***ஆக்ஞா சக்கரத்தை விசுத்தி சக்கரத்தின் அடிமையாக்கித்*** தனது உயிர் (மூலப்பிராணன்) கீழ்நோக்கிப் புவியீர்ப்புடன் கலக்காமல் செய்து மேல் நோக்கி உயிர் மூச்சைச் செலுத்திய யோகச் சித்தி தான்.

*தூக்கிய பாதம்*

இந்த நிலையில் சாஸ்வதமாக நிலைத்து விட்ட பெரும் தவயோகிகள், பிரம்ம நிஷ்டர்கள் மற்றும் தெய்வாம்சத்தில் பிறந்தவர்கள் ***சிரஞ்சீவி*** என்றழைக்கப்படுவார்கள். மேல் நோக்கிய பிராண சுவாச நிலைகளை கொண்டவர்கள். **பிருத்வித் தத்துவத்தை** வென்றவர்கள் ஆவார்கள். "**தூக்கிய பாதம்**" என்று இறைவன் ***திருவாலங்காட்டில்*** மேல் தூக்கிய பாதத்தைக் கொண்ட கோலம் இந்தத் தத்துவத்தை, சித்தியை உணர்த்துகிறது. எனவே, மானிடனுக்குச் சுவாசம் கீழ் நோக்கி இயங்கும். ஆனால் மகான்களுக்கு மேல் நோக்கி இயங்குகிறது. **அமிர்த கலை** என்னும் **காம பீஜம்** பிறப்பில் அழிந்து விடுகிறது. இதனை மீட்டு உயிரோடு கலந்து, "**தூக்கிய பாதம்**" உணர்த்தும் பிருத்வித் தத்துவத்தை வென்ற நிலைதான் **ஞான தேகம்** அல்லது **பிரணவ தேகம், திருமேனி** என்பதெல்லாம் அதிநுட்ப ஒலி அலைகளை உணர்ந்தறிய உதவும் தெய்வீகத் தேகம் ஆகும்.



| | | |
|---|---|---|
| அ | – | அகாரம் என்பது ஓம் என்ற பிரணவத்தின் முதல் கூறு (அ, உ, ம) |
| அகம் | – | "நான்" என்பது |
| அமர வடிவ | – | பெரும்யோக நிலை சித்தர்களுக்குரியது. |
| அனாதியான | – | ஆதி அந்தமில்லா நிலை |
| அகம் பரம்மாஸ்மி | – | ஸ்ரீசங்கரரின் அத்வைத் சித்தாந்தம் |
| அகண்டாகார உணர்வாக | – | சர்வம் பிரம்மமாக உள்ள தன்மை |
| அமரகவி சித்தீஸ்வரர் | – | கலியில் பிறந்து அத்வைதம் உணர்ந்த சித்த யோகி, ஸ்ரீகணநாதன் அருள் பெற்றவர் |
| அந்தர்முக சுவாசகதி | – | சுவாசம் வெளிநோக்கியில்லாமல் உள்ளடங்கியிருத்தல் |
| அஷ்டாங்க யோகம் | – | எட்டு அங்கங்களைக் கொண்ட யோகம், சமாதி, கடைநிலை |
| அசரீரி | – | உருவம் இல்லாமல் குரல் கேட்பது |
| அகார ஒலி | – | பிரணவத்தின் முதல் கூறு சிருஷ்டி மூலம் அந்தர்முகத்தில் வாக்கு |
| அகக்கண் காட்சி | – | ஞான திருஷ்டி |
| அந்தர்முக ஆழத்தில் | – | புலனடக்கத்தில் தியானநிலை |
| அனுக்கிரக சித்தம் | – | இறைவனின் பெருங்கருணை, மாயை நீங்கிய நிலை |
| அந்தர்முகமான ஸ்திதியில் | – | தீவிர தியானநிலையின் மத்தியில் |
| அத்வைத ஞானம் | – | சங்கரரின் தத்துவம் – நானே பிரம்மம் என்ற உணர்வு |
| அமிர்த கலை | – | அமிர்த சுவாசம் அமிர்தக்கலை என்றும் சொல்வர். இறைவனது பெரு யோக நிலையில் அமிர்தம் உண்ணுதல் |
| அத்வைத சித்தாந்தம் | – | சர்வம் பிரம்ம மயம் என்ற உணர்வு பெறுதல். |
| அண்டமும் பிண்டமும் | – | நாமும் பிரபஞ்சமும் |
| அக்னி மண்டலம் | – | உடலிலுள்ள மூன்று மண்டலங்களுள் ஒன்று. மற்றவை சூரிய/சந்திர மண்டலங்கள். இவை புலன்களை இயக்குகின்றன. (வாத, பித்த, கபம்) |
| ஆத்ம பரிபூரணம் | – | ஆத்ம விலாசம் |
| ஆத்ம சொரூபம் | – | ஆத்மா தரிசனம் தருதல் |

| | | |
|---|---|---|
| அழ்நிலை தியான | – | தவநிலை / நிஷ்டை |
| ஆத்மா | – | மனிதனின் உண்மை சொரூபம். முக்தி பெற்றவன் இதை உணர்கிறார் |
| ஆத்மானுபூதி | – | மானிடன் தனது தெய்வீக நிலையைக் காணல் |
| ஆத்ம சக்தி | – | பிரம்ம சக்தி |
| ஆத்ம பரிபூரணம் | – | ஆத்மாவை இறைவனாக உணர்ந்து விட்ட நிலை |
| ஆனந்த மயத்தில் | – | பிரணவம், ஆனந்த மயமான பேரலைகளாக மாறித் தடுத்து மயக்கும் சாதகனை. அதனை மீறுவது கடினம். வெற்றி பெற்றால் ஞானபோதம் கிடைக்கும். |
| ஆன்மிக ஏகாக்கிரம் | – | அந்தர்முகம் நோக்கிச் செல்லுதல் |
| ஆத்ம சிந்தனை | – | ஆத்ம விசாரம் |
| ஆதிமுதல் அந்தம் வரை | – | சிருஷ்டிமுதல் கடைநிலை வரை |
| ஆக்ஞா | – | புருவ மையம் ஆறு ஆதார சக்ரங்களில் இதுவும் ஒன்று |
| ஆதித்திய கலை | – | பிங்களை நாடி / சூரிய நாடி |
| ஆதித்தன் | – | சூரிய நாடி |
| இகலோக | – | இந்த உலக ஞானமுள்ள |
| இந்திரிய நிக்கிரகம் | – | புலனடக்கம்–இந்திரியங்களை அடக்குதல் |
| இரகசிய அசரீரி | – | நுட்பமாய்க் கேட்கப்படும் உள்ளுணர்வு |
| ஈசத்துவம் | – | அஷ்ட மகாசித்திகளுள் ஒன்று. இது ஈசனின் தன்மை. தவத்தில் இதைப்பெற்றால் எல்லா உயிர்களும் உனக்கு அடிமை. |
| ஏகாக்ரகம் | – | தீவிர ஒரே சிந்தனை ஒரு நிலைப்பட்ட மனம் |
| ஜீவன் முக்தர் | – | ஜீவன் சிவமாகியவர்; தெய்வமாகிய மனிதர், மனித வடிவில் தெய்வம் |
| தெய்வத்தின் குரல் | – | அந்தர்யாமி பேசுதல் |
| நிச்சல சித்தம் | – | கலங்காத சித்தம்; தெய்வம் அறிவு வடிவாக இங்கு இருக்கிறது. |

| | | |
|---|---|---|
| பஹிர் | – | வெளியே |
| சுவானுபூதி | – | சுய அனுபவம் |
| கர்ப்பத்தில் | – | கருவறையில் |
| சிருஷ்டி | – | படைத்தல் |
| சஞ்சரிக்கும் | – | உலாவரும் |
| சகல | – | அனைத்து |
| விஞ்ஞானிகள் | – | அறிவியல் வல்லுநர்கள் |
| பேரானந்தம் | – | பேரின்பம் |
| சோடச கலை | – | தியானம் கைகூடி, நிஷ்டை கைகூடி இறைவனின் போதனை பெறுதல் |
| சிரஞ்சீவி | – | அனுமான் போன்றவர்கள் பெற்ற பெரும் தவநிலை.அழிவில்லாத்தன்மை (தேவ கதியில் இயங்கும் உடலுடன்) |
| ஸ்ரீவித்தை | – | இறைவனின் ஞான உபதேசம் பெறும் வித்தை |
| ஐக்கிய பாவம் | – | ஒன்றிய நிலை |
| பிரம்ம பாவம் | – | தானே பிரம்மம் என்ற உணர்வுடன் கூடிய நிலை |
| மகா வாக்கியம் | – | நான்கு வேத வாக்குகள்; தத்துவ வாக்குகள், ஆத்ம சிந்தனைக்காக கிடைத்தவை |
| பிரம்ம நிஷ்டை | – | பிரம்மத்துடன் கலந்து நிற்கும் 100% பற்றற்ற நிலை நிலையிது. |
| தமோகுணம் | – | முக்குணங்களில் ஒன்று இயக்கம் குன்றிய நிலை |
| ஞானக்கண் | – | அகக்கண் (ஞான திருஷ்டி) |
| பிரமாண்டம் | – | அண்ட சராசரம் |
| நிர்வாண நிலை | – | தன்நிலை மறந்து இயையுணர்வில் மூழ்கிய நிலை |
| நிராதாரம் | – | ஆறு ஆதார சக்கரங்கள் இயக்குகின்றன. புலன்களைஆட்டுவிக்கின்றன.அதனை மீறிச் சலனமற்று இருக்கும் நிலை. |
| ஜீவசக்தி | – | மானிட சக்தி |
| சித்த விருத்தி நிரோதம் | – | அலைபாயும் சித்தத்தை அடக்கிவிட்ட யோகநிலை |
| சத்–சித்–ஆனந்த சொரூபம் | – | பிரம்ம நிஷ்டை |

| | | |
|---|---|---|
| பூ ஸ்பரிஸம் | – | பூமியின் உணர்வுள்ள நிலை |
| ஸ்தூல தேகமும் | – | நமது ஜடதேகம் |
| சூட்சும தேகமும் | – | நமது ஜடதேகம் செயலற்றுப்போக எழும் இந்த நமது சூட்சும தேகம் (தெய்வீக தேகம்) |
| மூலகணபதி உபாசனை | – | மூலகணபதியை உபசனா தேவதையாக பூசித்தல் |
| உயிர்மூச்சு | – | புலனடக்கத்தில் தியானநிலையிலுள்ள நமது ஸ்வாசம் |
| ஞானதேகம் | – | அகத்தியர் போன்றவர்களின் தேகம் |
| வாக் மவுனம் | – | எண்ணத்தை நிறுத்தி விட்ட யோக நிலை |
| வைகரி சித்தி | – | சங்கரரின் சௌந்தர்ய லஹரி போதிக்கும் மந்திர தியானத்திலுள்ள பரா, பஸ்யந்தி, மத்தியமா வைகரி என்னும் நிலைகள். முழு புலனடக்கத்திலுள்ள நமது எண்ணத்தின் சக்தி/செயல் |
| யோக நிஷ்டை | – | யோகத்தில் புலனடக்கம் |
| ஸ்திரமாக | – | அசைவு (அல்லது) இயக்கம் இல்லாமல் |
| சுவப்பன நிலை | – | கனவு நிலை |
| பிரக்ஞை | – | உணர்வு |
| ஜாக்கிரதை அவஸ்தை | – | விழிப்புணர்வு |
| துரியம் | – | யோகநிலை, விழிப்பு, கனவு, உறக்கம் தவிர்த்த நான்காவது நிலை இது. சாதாரண மானிடர்க்கு அல்ல. |
| சௌந்தர்ய லஹரி | – | சங்கரரின் தேவி வழிபாட்டுமுறையில் ஒருவகை |
| சித்தாகாசம் | – | பெரும்யோக நிலை |
| சகஜ நிஷ்டை | – | பெரும்யோக நிலை. பிரம்ம ஞானிகளுக்கு மட்டுமே உரித்தானது. |
| பிராணசக்தி | – | நமது தேகத்தை இயக்கும் சக்தி |
| இறைவனின் வாக்கு | – | நமக்குள் இறைவன் பேசுவது |
| ஞான திருஷ்டி | – | இதை அகக்கண்/கைத்தல நிறைகனி என்பர். |
| ஞான ஒலி | – | இறைவனின் வாக்கு உதயம் ஆகும் முன் நமக்குள் ஏற்படும் ஒலிகள் |
| தபசின் ரகசியம் | – | முக்தி |

| | | |
|---|---|---|
| ஷட்சக்ர சித்தி | – | ஆறு ஆதார சக்கரங்கள் நம்மைத் தடுக்கின்றன; அவற்றைமீறி இறைவனை நாடுதல் |
| பரமாத்மா | – | இறைவன் |
| கர்ப்ப பிண்டம் | – | கருவில் நமது உற்பத்தி |
| பிரத்தியாஹாரம் | – | பதஞ்சலி அஷ்டாங்க யோகத்தில் 5 ஆவது நிலை.இதற்குப்பின் |

தாரண, தியான, சமாதி நிலைகளாகும். இதுவரைதான் சாதாரண மனிதன் செல்ல முடியும். மேல்நிலைகள் இறைவன் கருணையில் கிட்டும்.

| | | |
|---|---|---|
| கேவல கும்பகம் | – | அஷ்டாங்க யோக முறையில் ஒரு பெரும் சித்தி. மனித உடல் தெய்வீகமானது |
| பிரணாயாமம் | – | மூச்சையடக்கும் யோகப் பயிற்சி |
| ஸ்பரிசம் | – | தொடு உணர்ச்சி |
| பிரணவ தேகம் | – | யோகிகள், மகான்கள் இவர்களின் திவ்யதேகம். இறைவன் குடி கொண்ட தேகம் |
| பூதாகாசம் | – | மனிதன் உயிரோடு இருக்க சுவாசிக்கும் காற்றுள்ள மண்டலம் |
| பரம அணு | – | அணுவுக்கு அணு |
| திவ்விய சுவாசம் | – | பூதாகாசம் தவிர்த்து யோக நிலையில் உள்ளிருந்தே சுவாசிக்காமல் சுவாசிக்கும் யோகநிலையிலுள்ள சக்தி |
| தந்திர சாஸ்திரம் | – | மந்திரம் வெளியில் சொல்லாமல் சொல்வது |
| மூல பிரக்ருதி | – | ஆதிசக்தி |
| சகஸ்ராரம் | – | ஆயிரம் இதழ் கொண்டது. மேலேயுள்ள கடைசி ஆதார சக்கரம். உச்சி என்பார். |
| சூரிய கலை | – | பிங்களை நாடி வலது நாசி வழியாக வரும் நமது சுவாசம் |
| அநாகதம் | – | தானாக உள்ளுக்குள் தோன்றும் ஒலி |
| வஸ்துக்கள் | – | ஜடபொருள்கள் |
| காயசித்தி | – | சுவாசிக்காமல் சுவாசிக்கும் யோகநிலை. பிராண விரயம் (புலன்வழி) பூரணமாகத் தடுக்கப்பட்ட யோகசித்தி |

| | | |
|---|---|---|
| | | பெரும் தவசீலர்களுக்கு உள்ள சித்தி |
| பரா | – | அம்பிகையின் அருள்வாக்கு |
| பிரகிருதி ஞானம் | – | புலனறிவு |
| திரோதான சக்தி | – | மறைப்பு நிலை |
| அனுக்கிரக சித்தம் | – | ஞானம் |
| அமர வாக்கு | – | பொய்யாமொழி |
| குண்டலி | – | நமக்குள் உறங்கிக் கொண்டிருக்கும் யோக சக்தி |
| ஊர்த்துவ முக மூச்சு | – | சித்தர்களின் சுவாசமுறை |
| பிரணவாகாச சித்தி | – | பூதாகாசம் என்னும் சுவாசிக்கும் காற்றை மீறிய நிலை. இதன் அதிபதி ஸ்ரீகணநாதன் |
| தன் மாத்திரை | – | புலன்களை இயக்கும் சூட்சும சக்திகள் |
| சுழுமுனை | – | தேவநாடி, ஞான திருஷ்டியின்மூலம் |
| இடா பிங்களை | – | இடா நாடி (சந்திரா), பிங்கள நாடி |
| சோடச கலை | – | இறைவனின் வாக்கு கேட்கும் சித்தி |
| பூத சிருஷ்டி | – | ஐம்பூத கூட்டு செயலால் உண்டானவை |
| பிரம்ம நிஷ்டை | – | பிரம்மத்தோடு கலந்து நிற்கும் சமாதி நிலை |
| பிரம்ம விசாரம் | – | ஆத்ம விசாரம், (ஞானிகளின்) |
| பவித்திரமான தெய்வவாக்கு | – | இறைவன் நமக்குள் உரைப்பது |
| யோக திருஷ்டி | – | ஞான திருஷ்டி |
| தேஜோ சக்தி | – | தேஜஸ் என்பர். புலனடக்கத்தில பஞ்ச அக்னிகள் ஒன்று சேர்ந்த யோக சக்தி |
| பஞ்சாக்னி | – | பஞ்ச அக்னிகள்; இவை ஒன்றானால் தேஜஸ் ஆக மாறும். |
| தேயு | – | நெருப்பு/அக்னி தத்துவம் |
| விசுத்தியில் | – | ஆறு சக்கரங்களில் ஐந்தாவது சக்கரம். இது கண்டத்தில் உள்ளது. எல்லாத் தெய்வீக சக்திகளும் இங்குதான் குடி கொண்டுள்ளன. |
| ஜீவாத்மா– பரமாத்மா | – | மனிதனும் தெய்வமும் |
| துரியா அதீதம் | – | பெரும்யோக நிலை, பிரம்ம ரிஷிகளுக்கு மட்டுமே. (தவ நிலையின் உச்சி) |

| | | |
|---|---|---|
| ஞான தீக்ஷை | – | ஞான உபதேசம் (குருவின்) |
| சித்து | – | சித்து விளையாட்டு |
| ஜகத் மித்யை | – | உலகம் மாயை என்பது |
| ஞான ஒளி | – | தெய்வீக ஒளி |
| பிருத்வி | – | பஞ்ச பூதங்களில் ஒன்று. மண் என்பார் இதை. ஸ்ரீகணநாதன் இதன் அதிபதி. இதுவே சாஸ்விதமான பூதம். மற்ற நான்கு பூதங்களும் இதில் அடங்கும் |
| பிரம்ம விருத்தி | – | இறைவனின் ஞான உபதேசத்தின் முன் ஏற்படும் தெய்வீக அனுபவங்கள் |
| பூத வடிவம் | – | பஞ்ச பூதங்கள் (மண், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம் என்பவைகள்) |
| வேத வியாசர் | – | நான்கு வேதங்களையும் உணர்ந்து தந்தவர் |
| மந்திர சித்தி | – | மந்திரத்தால் சுவாச பந்தனம் செய்து புலனடக்கம் வேண்டுதல் |
| திருமூலர் | – | 18 சித்தர்களில் ஒருவர். திருமந்திரம் எழுதியவர். கயிலையிலிருந்து வந்து அகத்தியரைத் தரிசித்து உபதேசம் பெற்று மீண்டும் கயிலை சென்றார். |
| சுக்கில தாது | – | வீரியம் |
| ஸ்ரீதேவி | – | அம்பிகை |
| அந்தர்யாமி | – | நமக்குள் பேசும் இறைவன் |
| சுய ஆத்ம பரிபூரணம் | – | தன்னை தெய்வமாக உணர்தல் |
| வசித்துவம் | – | அஷ்டமகா சித்திகளில் கடைசி சித்தி இது. இது இறைவனுக்கே உரியது. வரமாகப் பெற்றால் எல்லா உயிர்களும் உனக்கு வசியம். |
| நிஜ ஆனந்தபோதம் | – | உண்மை நெறி விளக்கம். அமரகவியின் முதல் கிரந்தம் |
| பிரகிருதி ஞானம் | – | புலன்வழி ஞானம் – புலனறிவு இதைத்தடுத்தல் யோகம் ஆகும் |
| கிரந்தம் | – | நூல், புத்தகம் |

ஸ்ரீம்

ஓம்  கம்

ஸ்ரீமூல கணபதியின் உபாசகரான பிரம்ம நிஷ்டாள் ஸ்ரீஅமரகவி இராமச்சந்திரா சித்தேஸ்வரர், 87, காஞ்சி காமகோடி ஜகத்குரு பரமாச்சாரியார் ஸ்ரீ. ஸ்ரீ. சந்திரசேகரேந்திர சரஸ்வதி மகாசுவாமிகள் மற்றும் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ. ஸ்ரீ. சந்திர சேரக பாரதி மகா சுவாமிகள் ஆகியோர்களுடன் சுமார் ஐம்பது ஆண்டுக்காலம் நெருங்கியத் தொடர்பு கொண்டவர். கண்ட சித்தி, மனோன்மணி, பிரணவ சித்தி, அஷ்டாங்கயோக சித்தி மற்றும் அத்வைத பூர்ண சித்தி அடைந்து 1993ல் பிரம்ம பதம் அடைந்தவர் இவர். பல ஆன்மிக மற்றும் தெய்வீகத்தத்துவ இரகசியங்களைப் பரமாச்சாரியார் அவர்களுடன் பகிர்ந்து கொண்டவர். பிரம்ம நிஷ்டையில் தோன்றிய இவரது முதல் நூலான நிஜானந்தபோதத்தில் (ஆங்கிலம் ஆண்டு 1979இல் வெளியிடப்பட்டது). ஸ்ரீவித்தை, அஷ்டாங்கயோகம், அத்வைதம் ஆகிய யோகமுறைகள் சுய அனுபவத்தில் விளக்கப்பட்டுள்ளன. ஸ்ரீமன் நாராயணனின் சங்கநாதத்தை (பிரணவ ஒலி) அமரகவி சித்தேஸ்வரர் யோக நித்திரையில் கேட்ட நாள்முதல் (1967) அவரது பிரம்ம நிஷ்டை வளரத் தொடங்கியது. திருமூலர், நம்மாழ்வார் போன்றோர் அடைந்த நிலையைச் சகஜ நிஷ்டையில் (ஏறத்தாழ நாற்பது ஆண்டுக்கால யோகச்சாதனையில்) அனுபவித்து உலகிற்கு அளித்த பெரும் தெய்வீகத்தத்துவ இரகசியங்களைக் கொண்டது நிஜானந்த போதம் என்ற இவரது நூல். பல அரிய செய்திகளான உயிர், உடல், ஆத்மதத்துவ இரகசியங்களை விளக்கும் இந்நூலில், யாவரும் அறிய வேண்டிய உண்மைகள் அடங்கியுள்ளன. அமரகவியின் பிரதம சீடன் என்ற முறையில் எளியேன் ஸ்ரீமகா கணபதியின் விளக்கத்தை இங்குத் தந்திருக்கின்றேன். இதனைப்படித்து மக்கள் ஸ்ரீகனேசரின் தத்துவங்களை அறிந்து உணர்வதற்கு முயல வேண்டுகிறேன்.

ISBN 978-81-903924-5-7

